சந்தேகமேயில்லை...

# கோத்தாரி மல்

## மிகச் சிறந்தது

நயமான நெசவு, வேலைப்பாடு, உறுதி அனைத்திலும் மேன்மையானது...உயர்தர கோத்தாரி நூலால், "தானே இயங்கும்" தறிகளில் நெய்யப்படும் கோத்தாரி மல் தரத்தில் சிறந்திருப்பது இயற்கைதானே? ஜிப்பா, உள்பாவாடை, "பாடி", தலையணை உறை, உள் நிஜார், வேஷ்டி, மற்றும் இவை போன்றவைகளுக்கு உகந்தது.

லாங்க் கிளாத்தை விரும்புவீர்களானால் கோத்தாரி லாங்க் கிளாத் உங்களுக்கு திருப்தியளிக்கக் காண்பீர்கள். சிறந்த கோத்தாரி நூல் கொண்டு நெய்யப்படும் அத்துணி நீடித்து உழைக்க வல்லது.

## கோத்தாரி மல் M 7 அல்லது லாங்க் கிளாத்

என்று குறிப்பிட்டுக் கேளுங்கள்




தயாரிப்போர் :

**கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்**

ரிஜிஸ்டர்ட் ஆபீஸ் :

ஓரியண்டல் பில்டிங்ஸ், அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

மானேஜிங் ஏஜெண்டுகள் : கோத்தாரி & ஸன்ஸ்

JWT/KT-1779

'முகராசி'யோடு நீங்கள் காலையில் விழித்தெழ முன்னேற்பாடு:

# ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ்

**க்ளென்ஸிங் கோல்ட் க்ரீம்**

முகப் பொலிவுக்கு மிகச் சிறந்த அழகுசாதனமான ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ் க்ளென்ஸிங் கோல்ட் க்ரீம் — எளிய முறையில் அற்புதமான பராமரிப்பு. தூங்கச் செல்லுமுன் முகத்தில் தேய்த்தால், இரவோடிரவாக உங்கள் சருமத்தை ஊடுருவிச் சுத்தம்செய்து, ஊட்டமளித்துப் புது மெருகு தருகிறது. மறுநாட் காலை 'அல்லி மலர்ந்ததுபோல்' மெல்லிய முகத் தெளிவுடன் விழித்தெழுவீர்கள்.




அழகுபடுத்த முன்னோட்டமாக த்ரீ ப்ளவர்ஸ் வேனிஷிங் க்ரீம் தடவிக் கொண்டீர்களானால், எழிலுக்கு அதுவே யோகமான ஆரம்பம். இன்றே துவங்குங்கள்; முகப் பொலிவுக்கு அன்றாடம் ரிச்சர்ட் ஹட்நட் த்ரீ ப்ளவர்ஸ் க்ரீம்களை உபயோகியுங்கள். உங்கள் வதனத்தின் வனப்பை வளரச் செய்கிறது த்ரீ ப்ளவர்ஸ்!

**வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL. 1373 TM

ஆகஸ்ட்டு வெளியீடு





அஞ்சலி பிக்சர்ஸ்

அளிக்கும்—

# மங்கையர் உள்ளம் மங்காத செல்வம்



டைரக்ஷன் வேதாந்தம் ராகவையா · தயாரிப்பு-சங்கீதம் ஆதிநாராயண ராவ்

விநியோகஸ்தர்கள்: சென்னை நகரத்துக்கு: மெஸர்ஸ் ராஜ்ஸ்ரீ பிக்சர்ஸ் பிரைவேட் லிமிடெட் மவுண்ட் ரோடு, சென்னை-2; ● வட-ஆற்காடு, தென்-ஆற்காடு, செங்கற்பட்டு & கேரளா ராஜ்யத்துக்கு: மெஸர்ஸ் ராஜலக்ஷ்மி புரொடக்ஷன்ஸ், தியாகராயநகர் சென்னை-17; ● திருச்சி & தஞ்சாவூர்: மெஸர்ஸ் பசுபதி பிக்சர்ஸ், 64, பட்டர்வொர்த் ரோடு, திருச்சி-2; ● மதுரை, ராமநாதபுரம் & திருநெல்வேலி: மெஸர்ஸ் ராஜ்ஸ்ரீ பிக்சர்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை; ● சேலம், கோயமுத்தூர் & நீலகிரிக்கு: தி கரூர் ஜெய்ஹிந்த் பிக்சர்ஸ், 7/11-B, ஸ்டேட் பாங்க் ரோடு, கோயமுத்தூர்-1 மைசூர் ராஜ்யத்துக்கு: மெஸர்ஸ் ஈஸ்ட் இந்தியா பிலிம் கம்பெனி (பி) லிமிடெட் 4, ஜெனரல் பீட்டர்ஸ் ரோடு, மவுண்ட் ரோடு, சென்னை-2; ● எப். எம். எஸ்.: மதராஸ் பிலிம்ஸ் லிமிடெட், ஷா பில்டிங்ஸ், நாதன் ரோடு, கவ்லோன், ஹாங்காங் சிலோன்: மெஸர்ஸ் சினி எண்டர்பிரைஸஸ் லிமிடெட், கொழும்பு; ● மற்றும் இதர விவரங்களுக்கு: அஞ்சலி பிக்சர்ஸ், சென்னை-18.




# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தரமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்றால், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

# ரூபாய்க்கு ரூபாய் தேறுமா ?



## பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 710 A.TM

Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 2

# நல்லாட்சி

மக்கள் மனத்தில் கவலையும் ஏக்கமும் இல்லாதொழிய வேண்டுமானால், உற்சாகமும் நம்பிக்கையும் நீடித்திருக்க வேண்டுமானால், நல்ல அரசாங்கமும், அப்பழுக்கற்ற நல்ல நிர்வாகமும் இருக்க வேண்டும். இருந்தால்மட்டும் போதாது. மக்களின் நலனுக்காக அது பாடுபட்டுக் கொண்டிருக்கிறது என்ற நம்பிக்கையும் மக்களுக்கு ஏற்பட வேண்டும். அப்போதுதான் அனுபவிக்கும் கஷ்டங்களை மக்கள் சகித்துக் கொள்ளுவார்கள். இல்லாவிடில் மனக் கசப்பு மேலிட்டு, சமூகத்தில் குழப்பங்களும் கலகங்களும் நேரிடும்.

இந்த உயர் கருத்துக்களைச் சென்ற வாரம் பெங்களூரில் தமக்களித்த வரவேற்பு உரைக்குப் பதிலளிக்கையில் ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் சொன்னார். இதில் பொதிந்துள்ள உண்மைகள் நாட்டின் நலனில் அக்கறையுள்ளவர்கள் சிந்திக்கத்தக்கவை.

அதிகார பலத்தைக் கொண்டு அமைதியை நிலைநாட்டி விடலாம். கட்சி பலத்தைக் கொண்டு எத்தனை சட்டங்கள் தேவையோ அத்தனையையும் நிறைவேற்றிக் கொண்டு விடலாம். பிரசார பலத்தைக் கொண்டு எல்லா நடவடிக்கைகளும் மக்களின் நன்மைக்காகவே செய்யப்படுகின்றன என்றும், அவர்கள் அனுபவிக்கும் கஷ்டங்கள் எல்லாம் சுபிட்சத்தின் அறிகுறிகள் என்றும் ஒரு மன மயக்கத்தை ஏற்படுத்திவிடலாம். அயல் நாட்டினரிடமிருந்து அத்தாட்சிப் பத்திரங்களும் பாராட்டுச் சொற்களும் பெற்றுவிடவும் கூடும். நிலையான சர்க்கார் நீடித்து நிற்கிறது, ஆகவே எல்லாம் சரியாகவே இருக்கிறது என்ற எண்ணத்தையும் உண்டாக்கி விடலாம்.

ஆனால் இவை நல்ல ஆட்சிக்கும், மாசற்ற நிர்வாகத்திற்கும் லட்சணங்கள் ஆகாது. சென்ற பத்து ஆண்டுகளில் மக்களின் உரிமைகள் சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வந்துள்ளன. சொத்தின் உரிமை நிலச் சீர்திருத்தங்களின் விளைவாகப் பாதிக்கப்பட்டுள்ளது. நிலமிழந்தவர்களுக்குத் தக்கபடி ஈடு கிடைக்கும் என்ற நிச்சயம் இல்லை. உரிமையைப் பாதுகாக்கும் சட்டங்களே பலமுறை திருத்தப்பட்டுவிட்டன.

ஸ்தாவர சொத்துக்கு அடுத்தபடியாக உள்ள ரூபாயின் மதிப்போ நான்கில் ஒன்றாகக் குறைந்து விட்டது. சேமித்து வைத்திருப்பவர்களின் சொத்து ஒரு தலைமுறையிலேயே பார்த்துக் கொண்டிருக்கும்போதே மதிப்பு இழந்து விடுகிறது.

நாட்டின் முதுகெலும்பு என மதிக்கப்படும் விவசாய மக்களின் நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு போகின்றது.

விலைவாசிகளின் கொடுமையினால் பாதிக்கப்படாத மக்கட் பகுதியே இல்லை. நகர்ப்புறங்களில் வாழ்க்கை எப்படிக் கஷ்டமாகிக் கொண்டு வருகிறதோ அதேபோல், கிராமப்புற மக்களின் வாழ்க்கை அதைவிடக் கஷ்டமாகவே மாறிக்கொண்டு வருகிறது.

வரிகளின் சுமை ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டே செல்கிறது. மத்திய அரசாங்கம் விதிக்கும் வரிகள், ராஜ்ய சர்க்கார் விதிக்கும் வரிகள், நகரசபைகள், பஞ்சாயத்துக்கள் விதிக்கும் வரிகள் என்று படிக்குப்படி. அவரவர்கள் அதிகாரத்துக்கு ஏற்றபடி வரிகள் விதித்துச் செல்லுகின்றனர். வரிகள் நியாயமானவைதாம் என்று புள்ளி விவரங்களைக் காட்டிச் சமாதானம் வேறு சொல்லப்படுகின்றன.

திட்டத்தை நிறைவேற்றப் பணம் தேவை என்று வெளிநாட்டுக் கடன் என்றும், உள்நாட்டுக் கடன் என்றும் கிடைத்த இடமெல்லாம் கடன் வாங்கி நாடு

கடனாளியாக்கப்பட்டு வருகிறது. இவற்றின் விளைவுகளைப் பற்றியாவது மக்களுக்கு இவற்றினால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைப் பற்றியாவது எந்த நிர்வாகமும், அரசாங்கமும் கவலைப் படுவதாகத் தெரியவில்லை. சக்திக்கு மீறிய திட்டங்களைப் போட்டு, பண விரயத்தைத் தடுக்காமல் இவற்றை எப்படியும் நிறைவேற்றியாக வேண்டும் என்ற ஒரே கருத்தில் சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்களின் எண்ணிக்கையை வரம்பு கடந்து பெருக்கிக்கொண்டு மக்களுடைய கஷ்டங்களைக் கவனியாது செயலாற்றிக்கொண்டு செல்லும் ஓர் அரசாங்கத்தை நல்ல அரசாங்கம் என்று எவ்வாறு சொல்லுவது?

நிர்வாகத்திலும் லஞ்சமும், ஊழலும் மலிந்து கிடக்கின்றன. பெர்மிட்டுகளும் லைசென்சுகளும், கண்ட்ரோல்களும் எவ்வளவு விரிவாகப் பெருகியுள்ளனவோ அவ்வளவு விரிவாகக் கள்ள மார்க்கெட்டும், கலப்படத் தொல்லைகளும், லஞ்சமும் வளர்ந்து கொண்டு செல்லுகின்றன.

நிர்வாகத்தில் அரசியல் கட்சியினரின் தலையீடுகளும், செல்வாக்கும் நாளுக்கு நாள் விருத்தியாகிக்கொண்டே போகின்றன. பள்ளிக்கூடத்தில் படிக்க இடம் தேடுவது முதல், உத்தியோகத்தில் பிரமோஷன் கிடைக்கும் வரையில் எல்லாமே தனிச் சலுகைகள், விசேஷப் பாதுகாப்புகள் என்ற முறையில் நடைபெறுகின்றன. ஜாதி, மதம் முதலிய வேறுபாடுகளற்ற நிர்வாகம் என்று இருந்தாலும் இவற்றுக்கெல்லாம் இடமளிக்கப்பட்டே நிர்வாகம் நடைபெறுவதைக் காண்கிறோம்.

இவையனைத்தும் எங்கோ ஒரு ராஜ்யத்தில், எங்கோ ஒரு மூலையில் காணப்படுபவை அல்ல. ஒவ்வொரு ராஜ்யத்திலும் அங்கங்கே உள்ள சிறு வித்தியாசங்களுக்குட்பட்டு, ஏற்றத் தாழ்வுடன், பரவலாகக் காணப்படுபவை. கட்சிப் பூசல்களும் வகுப்புத் துவேஷங்களும் மொழி வேற்றுமைகளும் எல்லா இடங்களிலுமே காணப்படுகின்றன.

நமது மக்கள் சாதாரணமாகவே சட்டத்துக்குப் பயந்து நடக்கும் மனப்பான்மை உள்ளவர்கள். புரட்சியை விரும்புபவர்கள் அல்ல. நிர்வாகத்தில் குறைபாடுகள் மிகுதியாகக் காணப்பட்டாலும் அமைதியைக் குலைத்துக்கொண்டு கிளர்ச்சி செய்யாமலிருப்பதற்கு இதையே ஒரு காரணமாகக் கூறலாம். ஆனால் மக்களுடைய கஷ்டங்களை உணர்ந்து அவற்றிற்கேற்ப நடவடிக்கைகளை மேற்கொள்ளாத அரசாங்கத்தை நல்ல அரசாங்கம் என்று அவர்கள் ஏற்றுக் கொள்ளாத நாளும் வந்துதான் ஆக வேண்டும். அந்த நாளை எதிர்பார்த்து அந்தப் பலப் பரீட்சைக்குத் தங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும்.

# பத்திரிகைத் தொழிலுக்கு ஓர் அடி

ஜீவராசிகளுக்கு உணவு எப்படியோ அப்படித்தான் பத்திரிகைகளுக்குப் பத்திரிகைக் காகிதம். அப்பத்திரிகைக் காகிதம் பற்றிச் சர்க்கார் விதித்துள்ள புது உத்தரவுகள் பத்திரிகைகளின் வளர்ச்சியைப் பெரிதும் தடை செய்யும்.



புது உத்தரவுகளில் இரண்டு அம்சங்கள் முக்கியமானவை. ஆண்டுக்கு 1000 டன் வரையில் செலவு செய்யும் பத்திரிகைகள் இனிமேல் ஐந்து சதம் அளவு குறைத்தே செலவு செய்ய வேண்டும். இரண்டாவது, இறக்குமதி செய்து தருவிக்கும் காகிதங்களின் அளவும் விகிதாசாரம் குறைக்கப்படும். ஓரளவுக்கு இறக்குமதி மூலம் தருவித்துக் கொள்ள முடியாத குறையை நேபா காகிதத்தைக் கொண்டு நிறைவு செய்து கொள்ள வேண்டும்.

இவற்றின் விளைவுகள் பலதரப்பட்டவை. நாட்டில் பத்திரிகைகள் வேகமாக வளர்ந்து வந்திருக்கின்றன, உண்மையில், வளர ஆரம்பித்திருக்கின்றன என்று தான் சொல்ல வேண்டும். இந்த வளர்ச்சிக்கு இனி தடங்கல் நேரும். காகிதத் தேவையைக் குறைத்




துக் கொள்ள வேண்டும் என்றால், 'ஸர்குலேஷனை'க் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று அர்த்தம். இறக்குமதி செய்யும் காகிதத்தையும் குறைத்துக் கொள் என்பது நல்ல காகிதத்தை மலிவான விலையில் வாங்காதே என்பதன் மாற்று வாசகமே. இறக்குமதிக் காகிதம் டன் சுமார் 800 ரூபாய் விலையில் கிடைக்கிறது. இதற்குப் பதில் நேபா காகிதம் பெற வேண்டுமானால் ஏறக்குறைய டன்னுக்கு 1200 ரூபாய் கொடுக்க வேண்டும். காகிதத்தின் தரத்தைப் பற்றியோ சொல்லத் தேவையில்லை. இதனால் ஏற்படும் அதிகச் செலவுகள் பத்திரிகைகளின் தராசு — மூலைப் பொருளாதாரத்தை எப்படிப் பாதிக்கின்றன என்பதைப் பத்திரிகை நடத்துபவர்கள் அறிவார்கள். பத்திரிகைகளின் பக்கங்களையாவது குறைக்க வேண்டும்; அல்லது விநியோக எண்ணிக்கையையாவது குறைக்க வேண்டும். இந்த நிர்ப்பந்த நிலை இப்போது ஏற்பட்டிருக்கிறது.

அந்நியச் செலாவணி நெருக்கடி கடுமையாகத் தானிருக்கிறது என்பது நன்கு தெரிந்ததுதான். அது இன்று நேற்று ஏற்பட்டதல்ல. இந்த நெருக்கடி உடனடியாகத் தீர்ந்து விடப் போவதில்லை. ஆகவே இதை எடுத்ததற்கெல்லாம் காரணமாகக் காட்டி, அவசியமில்லாத நடவடிக்கைகளைக்கூட அத்தியாவசியம் போலக் கருதி மேற்கொள்ளுவது புத்திசாலித்தனமாகக் கருத முடியாது.

அரசாங்கத்தின் பெர்மிட்—லைசென்சு முறைகளைப் பற்றி அடிக்கடி குறை கூற வேண்டியிருக்கிறது பற்றி வருத்தம் தோன்றும். ஆனாலும், இம்மாதிரி சந்தர்ப்பங்களில் இதைச் சுட்டிக்காட்டவும் வேண்டியிருக்கிறது. காகிதத்தை இறக்குமதி செய்ய ஒரு லைசென்ஸ்; அதை உபயோகிக்க மற்றொரு லைசென்சு; உள்ளூரிலேயே காகிதத்தைப் பெற ஒரு பெர்மிட்; அதற்குக் கொடுக்க வேண்டிய விலைக்கு ஒரு கட்டுப்பாடு; விநியோகம் கூடக் கட்டுப்பாட்டுக்குட்பட்டே நடைபெறுகிறது. இவ்வளவு வகைக் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு ஒருதொழில்—அதுவும் ஜனநாயகத்துக்கு இன்றியமையாத பத்திரிகைத் தொழில் — நடக்க வேண்டுமானால், அந்தத் தொழிலில் எவ்வளவு சுதந்திரம் இருக்கக்கூடும்? பத்திரிகைகளின் ஆதாரமாக உள்ள காகிதத்தை வழங்கும் உரிமையைத் தன் பிடியில் வைத்துக் கொண்டு, அதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சியைத் தன்னிச்சைப்படி உயர்த்தவும் தாழ்த்தவும் சக்தி கொண்ட ஆட்சியில், பத்திரிகைச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம் என்பவையெல்லாம் பொருளற்ற வார்த்தைகளே.

ஆண்டுக்குச் சுமார் ஆயிரம் கோடி ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் இறக்குமதியாகும் நிலைமையில், பத்திரிகைக் காகிதத்தின் பங்கு சுமார் எட்டு கோடி தான். அதாவது ஒரு சத விகிதத்துக்கும் குறைவு. இதைக் குறைப்பதன் மூலம் ஏற்படக் கூடிய மிச்சம் மிகவும் சொற்பமாகத்தானிருக்கும். இந்த மிச்சத்துக்காக, மிகவும் அவசியமான ஒரு தொழிலுக்குக் கஷ்டம் விளைவிப்பது அவசியம்தானா?

# என்ன சேதி?

## அரசாங்கத்தின் அதிக்கிரமம்

தி. மு. க.வினர் ஒரு நாள் மறியல் நடத்திய அன்றைய இரவிலும் பின்னரும் போலீஸார் எங்கெங்கோ தங்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தவர்களையும், தெருவில் போய்க் கொண்டிருந்தவர்களையும் குடிசையில் தூங்கிக் கொண்டிருந்தவர்களையும் கைது செய்து நிகழ்த்திய அடக்குமுறை தர்பார் தமிழகமெங்கும் அதிருப்தியையும் அருவருப்பையும் உண்டாக்கியிருக்கிறது. மறியலில் நடந்த அக்கிரமத்தைப் பற்றி மக்கள் முதலில் கோபங் கொண்டார்கள். ஆனால் பிறகு சர்க்காரின் நடவடிக்கையின் கொடுமையைப் பார்த்து இப்போது சர்க்காரின்மேல் அதிக கோபம் மக்களுக்கு ஏற்பட்டுள்ளது.

டாக்டர் சந்தோஷம் அவர்களின் ஆஸ்பத்திரியில் பணியாற்றும் சிப்பந்திக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் போலீஸ் மேலதிகாரி ஐ.ஜி.க்கு டாக்டர் சந்தோஷம் எழுதிய கடிதம் சென்ற வாரம் சுயராஜ்யாவில் வெளியாகியிருக்கிறது. அதிலுள்ள விவரத்தைச் சுருக்கமாகக் கீழே தருகிறோம்.

டாக்டர் சந்தோஷம் அவர்களின் நோயாளி ஒருவருக்கு ரத்தம் புகட்டப்படவேண்டிய நிலையிலிருந்ததால் தமது சிப்பந்தி திரு வின்ஸெண்டை, ஜூலை 22-ம் தேதி மாலை 2-30 மணிக்கு, ஜெனரல் ஆஸ்பத்திரிக்குச் சென்று ஒரு சீஸா இரத்தம் வாங்கி வருமாறு, ஜெனரல் ஆஸ்பத்திரி அதிகாரிகளுக்கு ஒரு கடிதத்துடன் அனுப்பி வைத்தார். ரத்தம் புகட்ட வேண்டிய நிலையில் இருந்தார் என்றால் அந்த நோயாளிக்கு எவ்வளவு அவசர வைத்திய உதவி தேவை என்பதை நேயர்கள் புரிந்து கொள்ளலாம். கையில் இரத்தத்துக்குரிய கிரயமான 25 ரூபாயும், ஒரு தெர்மாஸ் பிளாஸ்கும், கடிதமும் கொடுத்து அனுப்பினார். ஜெனரல் ஆஸ்பத்திரி நர்ஸ், டாக்டர் சந்தோஷம் அவர்களின் கடிதத்தைப் பார்த்து அதில் கையெழுத்திட்டு, ராயபுரம் ஸ்டான்லி ஆஸ்பத்திரிக்குச் சென்று, பெற்றுக் கொள்ளும்படி வின்ஸெண்ட்டிடம் சொல்லி அனுப்பினார். வாசல் கேட்டுக்கு வந்ததும் அங்கிருந்த போலீஸார், வின்ஸெண்டைப் போலீஸ் லாரிக்குள் ஏறும்படி மிரட்டினார்களாம். திரு வின்ஸெண்ட் தமக்கும், தி. மு. க. வுக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது என்று கூறி, தாம் வந்த அவசர காரியத்தையும் டாக்டர் சந்தோஷம் அவர்கள் கடிதத்தையும் காட்டினாராம். அதையெல்லாம் அப் போலீஸார் ஏற்காமல் கடிதத்தைப் பிடுங்கிக் கீழே எறிந்துவிட்டு, வின்ஸெண்டை லாரிக்குள் தள்ளிக்கொண்டு போய், தண்டையார்ப் பேட்டை போலீஸ் ஸ்டேஷனில் வைத்திருந்து இரவு 10-30 மணிக்கு மேல் விடுதலை செய்தார்களாம். அங்கிருந்து எழும்பூர் வருவதற்கு அவ்வேளையில் எவ்வித போக்குவரத்து வசதியும் இல்லாததால் மறு நாள் காலை 7-30 மணிக்கு வந்து சேர்ந்திருக்கிறார்.

இந்த விவரத்துக்கு மேல் சொல்ல வேண்டியது ஏதாகிலும் இருக்கிறதா? ஆபத்திலிருக்கும் நோயாளியை மீட்கும் அவசர காரியமாகப் பொறுப்புள்ள டாக்டரின் கடிதத்துடன் செல்பவரின் நிலையே இப்படி என்றால் மற்றவர்கள் எப்படி எப்படியெல்லாம் அவதிப்பட்டிருப்பார்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை!

## கும்பகோணம்

கும்பகோணம் நகரசபை தனது ஊர்ப் பெயரை மாற்றிக் குடந்தை என்று வைத்துக் கொள்ள வேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

'கும்பகோணம்' என்ற சொல்லுடன் விரும்பத் தகாத பொருள் எப்படியோ தவறாகச் சேர்ந்து போய் விட்டிருப்பதால் இப்பெயரை மாற்ற வேண்டும் என்று நகரசபையார் கருதுகிறார்கள் போலும்! ஆனால் கும்பகோணம் என்று சொன்ன மாத்திரத்தில் கணித மேதை ராமானுஜம் போன்றவர்களைப் பெற்ற ஊர் அல்லவா என்று தான் நினைக்கத் தோன்றுகிறது!

தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் பன்னெடுங் காலம் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிப் பல அரிய தமிழ் இலக்கியங்களை வெளியிட்ட ஊர் அல்லவா என்று நினைப்பவர்களும் எத்தனையோ பேர்.

கும்பகோணத்தின் 'டிகிரி' காப்பியையும், கும்பகோணத்து வெற்றிலையையும் நினைத்து உருகுபவர் தேசம் முழுதும் பரவிக் கிடக்கின்றனர்.

இவர்களெல்லாம் கும்பகோணத்தின் பெயர் மாறி விடுகிறது என்று கேள்விப்பட்டால் மிகவும் வருத்தப்படுவார்கள்! 'டிகிரி' காப்பி மணக்காது; வெற்றிலை சப்பிட்டுப் போகும்! ஆனால் குடந்தை என்று ஐகாரத்தில் முடியும் பெயரும் அழகாகத்தான் இருக்கும் சிலருக்கு என்பதில் ஐயமில்லை.

கும்பகோணம் நகரசபையார் மற்றொரு முடிவும் செய்திருக்கிறார்கள்.

அந்தனை நகரசபை அங்கத்தினர்களின் படங்களையும் நகரசபை ஹாலில் மாட்டிக் கொள்ளப் போகிறார்களாம்!

''இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பர் என்று எண்ணவோ திடமில்லையே'' என்ற வாக்கு நகரசபை அங்கத்தினர் பதவி விஷயத்தில் மிகவும் பொருத்தம். இந்தத் தடவை அங்கத்தினராக இருப்பவர் அடுத்த தடவை இருப்பார் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது! இந் நிலையில் இவர்களுடைய புகைப் படத்தினால் பயன் என்ன? ஒவ்வொரு தேர்தலுக்குப் பின்னும் படங்களின் எண்ணிக்கை வளர்ந்துகொண்டே போகும். பின்னர் சுவரிலிருந்து இறக்கப்பட்டுக் கிடங்குக்குப் போய்விடும்!



## வீணை ஷண்முகவடிவு மறைந்தார்

சங்கீத உலகினுக்கு ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியை அளித்த அன்னை வீணை ஷண்முக வடிவு அம்மாள் மதுரையில் சென்ற ஞாயிற்றுக்கிழமை பகல் 11-30 மணிக்குத் தமது பூத உடலை நீத்தார் என்ற செய்தியைக் கேட்டுத் துயருறுகிறோம். பரம்பரையாகக் கர்னாடக சங்கீதத்தைக் குலதனமாகப் பயின்று வந்த குடும்பத்தில் பிறந்து, தமது குரலில் காம்பீர்யம் குறைவு என்ற காரணத்தால், 'யாழ் இனிது' என்று வாணியின் வாத்தியமாகிய வீணையைப் பயிலத்தொடங்கி அதில் விசேஷ பாண்டித்தியத்தைப் பெற்றவர் ஷண்முகவடிவு அம்மாள். அந்தக் காலத்தில் சங்கீத உலகில் சிம்மங்கள் என்று விளங்கிய திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர், விஜயநகரம் வெங்கடரமணதாஸ், மைசூர் சேஷண்ணா, வீணை தனம்மாள் போன்றவர்களின் பாராட்டுதல்களைப் பெற்றுப் புகழுடன் விளங்கி இசைக்கலைக்கு அணிகலமாகப் பிரகாசித்தவர். தமது அரிய செல்வத்தைத் தமது செல்வத்துட் செல்வமாகிய சுப்புலக்ஷ்மிக்கு அளித்து, அவர் இசை புலமையின் நிறைமதியெனப் பிரகாசிப்பதைக் கண்டு களிப்பெய்தி, தமது கச்சேரிகளையும் படிப்படியாகக் குறைத்துக் கொண்டவர். தமது புதல்வர் ஸ்ரீ சக்திவேல் மிருதங்கத்தில் புலமை பெற்றுத் திகழ்வதைப் பற்றியும் அவருடைய அன்னையுள்ளம் நிறைவுற்றது.

சங்கீதப் புலமை பெற்றிருந்ததுடன் ஸ்ரீமதி ஷண்முக வடிவு அம்மாள் உயர்ந்த பண்பாடும் பெற்றவர். பேச்சிலும் வீணையின் இனிமை இருக்கும். சுபாவத்திலும் அப்படியே. அவருடைய பிரிவினால் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமி ஸ்ரீ டி. சதாசிவம் தம்பதியருக்கும், ஸ்ரீ சக்திவேல் அவர்களுக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.




ஒருமையுடன் நினது திரு
மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்.
- இராமலிங்க வள்ளலார்

## 14. வேதியனிற் சிறந்த வேடன்

அலறல் ஒலியைக் கேட்டுத் தமது திரு நயனங்களைத் திறந்தார் பகவத் பாத சங்கரர்.

ஆஹா! அவர் கண்முன், அதென்ன அற்புதக் காட்சி!

திருமகள் நாயகனான திருமால் உக்கிர நரசிம்ம மூர்த்தியாக நின்று கொண்டிருக்கிறான். அவனுடைய கழுத்தில் ஹாரமாகத் தொங்குவது ஹிரண்யனின் உடல்தானே? இல்லை இல்லை. இரண்டாகக் கிழிபட்டுப்போன காபாலிகனின் உடல் அல்லவா அது?

கண்ணைத் துடைத்துக் கொண்டு நோக்கினார் சங்கரர்.

நரஹரியைக் காணவில்லை. அவன் நின்ற அதே இடத்தில், இன்னது என்றே புரியாத அகத்தினராக, முகத்தினராக, பத்மபாதர் நின்று கொண்டிருக்கிறார். காபாலிகனின் சடலம் கீழே கிடக்கிறது.

"என்ன சமாசாரம்?" என்றார் சங்கரர் சாவதானமாக.

"ஒன்றுமே புரியவில்லை. எங்கேயோ என்னமோ செய்து கொண்டிருந்தேன். எதுவோ ஒன்று உள்ளே ஸ்புரித்தது. எப்படியோ இங்கு வந்து சேர்ந்து விட்டேன். இதோ, இந்தக் காபாலிகனை எவ்வாறோ கொன்று போட்டிருக்கிறேன்" என்றார் பத்மபாதர் தெளிவுபெறாத மனத்தினராய்.

"உனக்கு நரசிம்ம ஸ்வாமியிடம் நிரம்ப பக்தியில்லை? முன்பு என் கை எரிந்து போன போது கூட நரசிம்மரைத் துதிக்கச் சொன்னாயே! உனக்கு நரசிம்ம மந்திரம் உபதேசமாகி, சித்தி ஏதேனும் பெற்றிருக்கிறாயோ?" என்று கேட்டார் பகவத் பாதர்-முக்காலமும் உணர்ந்த முனி புங்கவர்.

ஒரு நிமிடம் மவுனமாக இருந்தார் பத்மபாதர். பிறகு கனவுலகக் குரலில் சொன்னார்: "ஆமாம். பல காலத்துக்கு முன்....நரசிம்ம மந்திர உபதேசம் பெற்றதுண்டுதான். ஆனால் சித்தி? சித்திதான் அடையவில்லை......அடைய முடியவில்லை .... இல்லை .... அதாவது அப்போது அடைய முடியவில்லை. நீங்கள் சொல்வதிலிருந்து பார்த்தால் அந்த சித்தி இப்போது கைகூடியிருக்க வேண்டுமெனத் தெரிகிறது."

நரஹரி தியானத்தில் ஆழ்ந்து போனார் பத்மபாதர். தியானம் கலைந்த பின் பழைய கதையைச் சொன்னார்.

சோழ வளநாட்டைச் சேர்ந்த இளைஞர் சனந்தனருக்கு ஒரு பெரியவர் நரசிம்ம மந்திரத்தை உபதேசித்தார். மந்திரத்தை இடையறாது ஜபித்து நரசிம்ம ஸ்வாமியின் தரிசனம் பெற வேண்டுமென்று விரும்பினார் சனந்தனர். தனிமையான இடத்துக்குச் சென்று பல ஆவிருத்திகள் மந்திரத்தை உருவேற்ற எண்ணம் கொண்டார்.

சோழ தேசத்திலிருந்து கிளம்பி நரசிம்ம க்ஷேத்திரமாகிய அஹோபிலம் வந்தடைந்தார், சனந்தனர்.

மலையும் காடும் மண்டிய அப்பிரதேசம் ஏகாந்தத் தியானத்துக்கு உகந்த இடம் என்று தீர்மானித்து ஓரிடத்தில்

அமர்ந்தார்; தியானம் புரியத் தொடங்கி விட்டார்.

''சாமி, சாமி'' என்ற குரலைக் கேட்டு விழித்தார் சனந்தனர். இந்த வனத்திலும் அவரது ஏகாந்தத்தைக் கலைக்க ஓர் ஆளா?

எதிரில் ஒரு வேடன் நின்று கொண்டிருந்தான்.

''சாமி, இப்படியே ஏதாவது மான், கின் ஓடிச்சா, பார்த்திங்களா?'' என்றான் வேடன்.

''நான் மானையும் பார்க்கவில்லை, கினையும் பார்க்கவில்லை'' என்றார் சனந்தனர்.

''என்ன சாமி இப்படிச் சொல்றே! இந்தப் பக்கம்தானே அது போயிருக்கணும். உன் கண்ணில் படலே?'' என்றான் வேடன்.

''நான் கண்ணைத் திறந்து கொண்டிருந்தால் தானே படும்? நான் கண்ணை மூடிக்கொண்டு தியானத்திலிருந்தேன்'' என்றார் சனந்தனர்.

''தியானமா, அப்படின்னா என்ன சாமி?'' என்று கேட்டான் கிராதன்.

சனந்தனர் யோசித்தார். இவனுக்கெப்படிப் புரிய வைப்பது?

சிரித்துக் கொண்டே சொன்னார்:— ''தியானமென்றால் கூட நீ செய்வது போல் ஒரு மிருகத்தைத் தேடுவது தான்'' என்று. நரசிங்கத்தை நினைத்தபடி இவ்வாறு கூறினார்.

''போ சாமி, சும்மா சொல்றே! கண்ணை மூடிக்கிட்டு, ஒரு எடத்திலே குந்திக்கிட்டா மிருகத்தைத் தேடுவாங்க?''

''நிஜந்தானப்பா! விசித்திரமான மிருகம் ஒன்றைத் தேடுகிறேன். அதனால் இப்படி விசித்திரமாக நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது.''

''அதென்ன சாமி! அப்படிப்பட்ட விசித்திர மிருகம்? அது எப்படித் தான் இருக்கும் சொல்லுங்க, சாமி. இந்தக் காட்டிலே எனக்குத் தெரியாத மிருகம் ஒண்ணுகூடக் கிடையாதுங்களே.''

வேடன் விடுகிறபாடாக இல்லை. எனவே வேதியர் சொன்னார்.

''அதுவா? அது இடுப்புக்குக் கீழ் மனிதனைப் போலிருக்கும். மேலே சிங்கம் மாதிரி இருக்கும்.''

''சாமி! நீங்க ஏமாந்து போயிட்டீங்க. இந்தக் காட்டிலே அந்த மாதிரி ஒரு மிருகம் கிடையவே கிடையாது. எம்மாம் நாளா நீங்க இங்கே வந்து பொழுதை வீணாக்குறீங்க?'' என்றான் வேடன் கவலையுடன். அவரை அங்கேயிருந்து கிளம்பும்படி வற்புறுத்தினான். ஒரு வஸ்து இல்லாத இடத்தில் அதைத் தேடி ஏன் பொழுதைப் பாழாக்க வேண்டும் என்பதே அவனது கேள்வி.

'இதேதடா, இந்த வேடன் நம்மை இந்தக் காட்டை விட்டே துரத்தி விடுவான் போலிருக்கிறதே' என்று பார்த்தார் சனந்தனர்.

''அட, நீயென்னப்பா உபத்திரவம்! அது நிச்சயமாக இங்கே இருக்கிறது என்று தெரிந்துதான் வந்திருக்கிறேன்'' என்றார். அது இல்லாத இடமும் உண்டா, என்ன?

''அட யெஞ்சாமி. நான் பார்க்காத ஒரு மிருகம் இந்தக் காட்டிலேயே இருக்கா? அதைத் தெரிஞ்சுக்காம நானும் ஒரு ஆம்பிளைன்னு இருக்கிறதா? சாமியாரே! இனிமே அந்த மிருகத்தைத் தேடிப் பிடிக்கிறது என் பொறுப்பு. 'கண்ணை மூடிக்கிட்டுக் குந்திக்கிட்டிருக்கலாம், அது கிட்ட வந்தவுடன் 'கப்'புனுப் புடிச்சிக்கலாம்னு நீ இப்படி ஒளிஞ்சிக்கிட்டிருந்தா புரோசனம் இல்லை. உனக்கு இந்த நெருக்கமான காட்டிலே ஓடியாடவும் முடியாது. உன் வழியிலே நீ பாட்டில் இங்கே இரு. நான் என் வழியிலே அதைத் தேடிக்கிட்டுப் போய்ப் புடிச்சு, இங்கேயே இட்டு வாரேன். அதை நீ என்ன பண்ணிப்பியோ பண்ணிக்க'' என்றான் வேடன்.

சனந்தனர் ஏளனமாகச் சிரித்தார்: ''அது உனக்குப் பிடிபடவே படாது'' என்று கூறிவிட்டு மீண்டும் சிரித்தார்.

''சரி, பார்ப்போமே'' என்று 'சவால்' விட்டான் வேடன். ''அது மட்டும் நெஜமா இங்கே இருந்தா நான் நிச்சயமாய்ப் புடிச்சிட்டு வாரேன்'' என்றான்.

''அது நிச்சயமாய் இங்கே இருக்கிறது'' என்றார் சனந்தனர் — அவன் தன்னை விட்டு விட்டுப் போனால் போதுமென்று.

''நாளைக்குச் சாயரட்சை வரை கெடு கொடு சாமி! அதுக்குள்ளே அதை இங்கே இழுத்துக்கிட்டு வராட்டா இந்த உயிரையே விட்டு விடறேன்.... ஆமாம்'' என்று சூள் உரைத்தான் கிராதன். நரசிங்கத்தைப் பற்றிய முழு வர்ணனையையும் கேட்டறிந்துகொண்டு கிளம்பினான்.

மனசில் அந்த நரசிம்ம மூர்த்தத்தையே இருத்தி, உணவு, உறக்கம் எதுவுமின்றி, அவற்றைப் பற்றிய நினைப்பும் கூட இன்றி, வனத்தில் அலைந்தான் வேடன். அன்றைய தினம் முடிந்தது. மிருகத்தைக் காணவிடினும் வேடனுடைய உறுதி தளரவில்லை.

பாதி மனிதனாகவும், பாதி சிங்கமாகவும் உள்ள அந்த விந்தை விலங்கையே ஓயாமல் நினைத்தபடி மறு நாள் பகல் முழுவதும் தேடித் திரிந்தான் வேடன்.

உச்சிக் கதிரவனின் வெப்பம் குறைந்து வந்தது. இவன் உள்ளத்தில் வெப்பம் ஏறியது. மெல்ல மெல்லக் கதிரவன் மேற்குப் புறம் சாய்ந்தான். வேடனது நம்பிக்கையும் தலை சாயத் தொடங்கியது. மீண்டும் மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு இறுதி முயற்சியாக நரசிங்கத்தைத் தேடலானான் அவன்.

ஆகா, இந்த இறுதி முயற்சியும் பயனளிக்கவில்லையா? இதோ சூரியன் செம்மை நிறம் பெற்று அந்த மலையின் பின்புறமாகக் கீழே விழுகிறான்!

சரி, உயிரை விட வேண்டியதுதான்!

ஒரு பெரிய விருட்சத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த காட்டுக் கொடிகளை அப்படியே முறுக்கேற்றிச் சுருக்குப் போட்டான் வேடன். சுருக்கில் தலையை இட்டுக் கொள்ளும் சமயம்!

அதோ .... அதோவா?.... கைஎட்டும் தூரத்தில் இதோ.. அவன் காண்பது கனவில்லையே! கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான்.

அவன் அருகில் தானாகவே எங்கிருந்தோ வந்து நிற்கிறதே அந்த நரசிங்கம்! நரசிங்கமேதான்! 'ஐயர் சொன்ன அத்தனை அடையாளமும் இருக்கிறதே!'

சுருக்கிலிருந்து தலையை எடுத்துக் கொண்டான் வேடன். அந்தக் கொடிகளை அப்படியே அறுத்தான். நரசிங்கத்தை அதனால் நன்றாகக் கட்டினான். பாதிச் சிங்கமாக இருந்தும் அந்த அசட்டு மிருகம் துளிக்கூட முரண்டு பிடிக்காமல் பரம சாதுவாகக் கட்டுப்பட்டது.

''பாழும் மிருகமே! உன்னைக் கண்டு பிடிக்க இத்தனை ரோதனையா? வா!'' என்று சொல்லி அதை இழுத்துக் கொண்டே சனந்தனரிடம் சென்றான்.

'சாது மிருகம் தான்! வீட்டில் வளர்க்கக் கூடியதுதான். ஆனால் இது என்ன பயனளிக்குமோ, தெரியவில்லை.





சனந்தனர் இன்னும் தியானத்தி லேயேதான் இருந்தார்.

''ஏ, சாமி! உன் தந்திரமெல்லாம் பலிக்காது. இதோ பார் நான் புடிச் சுட்டு வந்திருக்கேன் உன் நரசிங்கத்தை! பார்த்துக்க இதுதான் அதுவான்னு'' என்று வெற்றிக் குரலில் முழங்கினான் வேடன்.

சனந்தனர் கண்திறந்தார். வேடனைக் கண்டார். அவன் கையில் பிடித்திருந்த கொடிக் கற்றையையும் கண்டார். அந்தக் கொடிக்கற்றை அந்தரத்தில் முடியும் அதிசயத்தைக் கண்டார். அந்தப் பாழ்வெளியைத் தடவிக் கொடுத்த வேடன் மீண்டும், ''இது தானே , உன் நரசிங்கம்?'' என்றான்.

பத்மபாதரின் இதயம் விம்மியது. நெஞ்சில் ஒரு நோவு துவண்டது.

'தயாநிதி, தயாநிதி என்று சொல்லப் படும், ஹே, நரசிம்மா! கடைசியில், உனக்காகவே அல்லும் பகலும் தவ மிருந்து நியமம் காத்த எனக்கு உன் தரிசனத்தைத் தராமல் இந்த வேட னுக்கோ தந்தாய்?' என்று அவர் மனம் கூவியது.

அப்போது அவர் காதுகளில் சிங்கத்தின் உறுமல் விழுந்தது. உடனே அந்த உறுமலை அடக்கிக் கொண்டு ஓர் அசரீரி வாக்கு எழுந்தது.

''வேடனுக்கு என் தரிசனம் கிடைக்கவாவது என்று நீ எண்ணியதாலேயே தான் உனக்கு அந்தத் தரிசனத்தை நான் அளிக்கவில்லை. குலத்தைப் பார்த்துக் கடவுள் அருள் புரிவான் என்பதா உன் கருத்து? வேடனானாலும் அவன் எப்பேர்ப்பட்ட ஒருமைப்பாட்டுடன் என்னைத் தேடினான் என்பது உனக்குத் தெரியாது. மனத்தை அந்த அளவுக்கு ஒருமுகப்படுத்துபவருக்கே நான் காட்சியளிப்பேன். கட்டுப்படுவேன். இதோ கட்டுப் போட்டுக் கொண்டே வந்தும் இருக்கிறேன். இப்பேர்ப்பட்ட அசையா மனத்தினனாகிய இந்தக் கிராதனுடன் உனக்குச் சிறிது பழக்கமிருந்ததால்தான் என் குரலையாவது நீ கேட்க முடிந்தது. இதுவே உனக்குத் தக்க சமயத்தில் மந்திர சித்தியையும் அளிக்கும்.''

நரசிம்மனே அசரீரியாகப் பேசி முடித்தான்.

* * *

இன்றைக்குத்தான் பத்மபாதராகிய சனந்தனர் அந்தச் சித்தியின் பயனை அடைந்தது. அதுவும் எப்பேர்ப்பட்ட பயன்? அவரது குருநாதனின் உயிரை அல்லவோ அவரால் காப்பாற்ற முடிந்திருக்கிறது?

அன்று நரஹரியின் குரலைக் கேட்டார். இன்று தம் உடலிலேயே அவனது ஆவேசத்தை ஏற்றார். ஆனால், இன்னும் அவ்வுருவைக் கண்ணால் காணத்தான் கொடுத்து வைக்கவில்லை.

* * *

மனசை ஒருமுகப்படுத்துவதே தியானத்துக்கு மிகவும் அவசியம். ஊசியில் நூலைக் கோப்பதற்கு முன் அதன் நுனியிலுள்ள சின்னஞ் சிறு பஞ்சுத் துண்டுகளையும் நீக்கிக் கூர்மையாக்கிக் கொள்வது போல் மனத்தில் ஒட்டிக் கொள்ளும் இதர எண்ணங்கள் யாவற்றையும் களைந்து பரம்பொருளைப் பற்றிய தியானத்திலேயே ஈடுபட வேண்டுமென்பார் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர். இதுவே ஏகாக்கிரம் எனப்படும். இலக்கில் அம்பு பதிவதுபோல் பிரம்மத்தில் ஆத்மாவைப் பதிக்க இந்த ஏகாக்கிரம் அத்தியாவசியம் என்கிறது மறைமுடி.

'ஏகாக்ரசித்த நிர்த்யாதா' என்று அம்பிகைக்கு ஒரு திருநாமம் சொல்கிறது ஸ்ரீ லலிதா த்ரிசதி. 'ஏகாக்ர மனோலயகரி' என்று காமேசுவரியை ஏத்துகிறார் நாதயோகியான தீக்ஷிதர். அந்த ஏகாக்கிரியத்தை அளித்து இறுதியில் தன்னுடன் ஐக்கியம் செய்து கொள்ளும் பிரம்மவித்யா ஸ்வரூபிணி அவளே அல்லவா?

* * *

ஸ்ரீசைலம் ஒரு மாபெரும் சிவஸ்தலம். வண்ணத்தால் மல்லிகை போன்ற வெள்ளியங்கிரியான் - குணத்தாலும் மல்லிகை போன்ற மென்மையுடைய மாதிருக்கும் பாதியன் - மலை மீது மல்லிகார்ஜுனனாகக் குடி கொண்டிருக்கும் திவ்விய க்ஷேத்திரம் அது. அகமெல்லாம் ஆண்டவனாகவும், செயலெல்லாம் ஆராதனையாகவும், நடையெல்லாம் பிரதட்சிணமாகவும் கொண்ட ஆசாரியர் உலகுக்குப் பக்தியின் பெருமையைத் தெரிவிப்பதற்காகக் கால் கடுக்கக் கானகத்தையும், கிரிகளையும் கடந்து திருக்கோயிலை அடைந்தார். கயிலை நாதனை ஸ்ரீசைலநாதனாகக் கண்டு வழிபட்டார். அவர் கண்களில் நீர் பெருக்கெடுத்தது. உள்ளத்தில் பக்தி பீறிட்டுக் கொண்டு ஊற்றெடுத்தது. அவரது புனித நாவிலிருந்து வெள்ளமெனத் துதிப் பாடல்கள் பிரவகித்தன. கருணைப் பிரவாகம் செய்த இந்தக் கவிதைப் பிரவாகமே 'சிவானந்த லஹரி'யாகும்.

ஆத்மானுபவத்தில் நிலைபெற்றவர்கள் சிவபெருமானேயாவர் என்கிறது விவேக சூடாமணி. 'அன்பே சிவமாயமர்ந்திருந்தாரே' என்று ஞானியரைப் போற்றுகிறது திருமந்திரம். அப்படி சிவ தத்துவம் ஒவ்வொரு அணுவிலும் ததும்பி வழியும் ஆசாரியர் தாம் அநுபவித்த சிவானந்தக் கடலின் அலைகளாகவே இந்த லஹரியை உலகுக்கு அளித்தார். 'இனியான மனோசிலை மீதுனைதான் அணியார் அரவிந்தம் அரும்புமதோ?' என அருணகிரியார் வினவினாரல்லவா? இந்த சிவாநுபவ அலைகள் மோதினால் நம்முடைய அந்தக் கல் மனமும் இளகும். அதில் கருணாகரனின் கமலப்பதமும் மலரும்.

அந்தப் பாதங்களுக்குக் கல்தரை பழக்கமில்லையா என்ன? கயிலை மலையில் கட்டாந் தரையில் நடம் பயில்பவனல்லவா அவன்? 'என் அப்பா! அன்னப் பட்சியின் இறகு பாவிய தேவர்களின் இல்லங்களும், நன்மனம் படைத்தோரின் மிருதுவான இதய புஷ்பங்களும் இருக்க நீ ஏன் பாறையில் பாதம் பதித்து

ஆடுகிறாய்? பாருங்கள் மனத்தனுகப் பாவி நான் ஒருவன் பிறக்கப் போகி றேன் என்று தெரிந்து, என்னையும் காப் பாற்ற வேண்டும் என்றே, என் அகத் திலும் நடம் புரிய உன்னைப் பழக்கப் படுத்திக் கொள்கிறாயா?' என்று கேட் கிறார் ஆசாரியர் இந்தத் துதியில்.

இந்தக் கல்லைப் பதப்படுத்துவதற் காக ஆடி ஆடிப் பதம் களைத்து சய னித்து விடுவான் பரமன். "அப்போது உன் கழலிணைகளை என் இரு கைகளாலும் நான் கெட்டியாகப் பற்றிக் கொள்ள மாட்டேனு? அவற்றை என் தலையில் சூட்டிக் கொள்ள மாட்டேனு! என் கண்களில் ஒற்றிக் கொள்ள மாட்டேனு? என் உடலில் பதித்துக்கொள்ள மாட் டேனு? அப்பாதங்களின் நறுமணத்தை மோந்து மோந்து பார்க்க மாட்டேனு?" என்று பக்தியில் விம்முகிறார் சங்கரர், இன்னொரு பாடலில்.

பரமேசுவரனிலிருந்து எத்தனை எத் தனை எத்தனையோ படிகள் கீழ் நிலையி லுள்ள பாவி போலப் பரிதவித்துப் பாடு கிறார். தீனர்களுக்குள் எனக்கே முத லிடம் என்கிறார். "தீனர்களை ரட்சிப் பதில், சிவபெருமானே, உனக்கே முத லிடம். எனவே, எல்லா தீனர்களுக்குமே நீ பந்து என்றால் எனக்கு எவ்வளவு நெருங்கிய உறவு என்பதைச்சொல்லவே வேண்டாம். அந்த உறவுக்கு அழகு நீ எனது அபராதம் முழுதும் க்ஷமித்து, என்னைக் கைதூக்கி விட முயல்வது தானே?" என்கிறார்.

இவ்வளவு உபகாரம் செய்யும் உமா காந்தனுக்குத் தாம் எதையேனும் பிரதி யாக அளிக்க வேண்டுமெனத் துடிக்கி றார். ஐசுவரியம் என்றாலே 'ஈசுவரனுக்கு உரியவை' என்று அர்த்தம். அந்த ஐசு வரியவானுக்குத் தரித்திரனுகிய தான் எதை அளிக்க முடியும் என்று யோசிக் கிறார். தம் மனத்தையே அளிக்கிறேன் என்று முடிவில் தெரிவிக்கிறார். அதை யும் பெற்றுக் கொள்ள வந்து விடுகிறான் பரமன். பெரிய ஐசுவரியவான் என்று எண்ணியிருந்த அவனிடம் ஓர் உயர்ந்த செல்வமுமில்லை. கிழ எருது வாகனத் தில், யானைத்தோலை உடுத்திக்கொண்டு, பாம்புகளை அணியாகப் போட்டுக் கொண்டு வந்து நிற்கிறான். ஆகாரம் என்னவென்றாலோ விஷமாம். 'நீ எனக்கு மனத்தைத் தந்தாயே, நான் உனக்கு எதைத் தருவது?" என்கிறான்.

அவனிடமுள்ள எல்லா வஸ்துக்களை யும் சொல்லியாகி விட்டது. அதில் யாருமே எதையுமே தைரியமாகக் கேட் டுப் பெற மாட்டார்கள். எனவே, சங்க ரர் வேறொன்றைக் கேட்கிறார். 'உன் பாதாம்புஜத்திடம் பக்தி செய்யும் பான்மையை மட்டுமே எனக்குக் கொடு' என்கிறார். திரும்பத் திரும்ப அந்த ஆடிய பாதத்தில்தான் வந்து முடிகிறது பக்தி.

அந்த ஆண்டவனைப் பாதத்தால் மிதித்த ஒரு பக்தியுமுண்டே! அந்தப் பக்தி மகிமையையும் வியந்து போற்று கிறார் சங்கரர். "பக்தி எதைத்தான் செய்யாது? அதனுலல்லவோ வேட னுகிய கண்ணப்பன் இன்று அடியாருக் கெல்லாம் அணிகலனுக விளங்கு கிறான்?" என்கிறார்.

கிராதனுக்குச் சிவபிரான் அருள் புரிந்ததிலும் ஓர் உள்ளர்த்தம் இருக்கும் போல் தோன்றுகிறது. ஆம், பகவானே ஆதியில் 'வேட விகிர்தனுகி கொத் தலர் குழலியோடு' அர்ஜுனனுக்குப் பிரஸன்னமாகிப் பாசுபதம் நல்கி இருக் கிறானே! 'ஓ, அதனுல்தான் நீ என் அகத்தில் வந்து குடியேருமல் விலங்கு களைத் தேடி எங்கெங்கோ செல்கிறாயா? அது சரி, ஆனால் என் மனமும் ஆசைகள் மண்டிய ஒரு காடு என்பதனை நீ அறியாயா? மாச்சரியம், மோகம் முதலிய பல துஷ்ட மிருகங்கள் இங்கே மதம் பிடித்துத் திரிவது உனக்குத் தெரி யாதா? எனவே, ஐயா, எங்கெல்லாமோ ஓடாதே! இங்கே என்னுள் புகுந்து இந்த விலங்குகளை உன் மனம் கொண்ட மட்டும் திருப்தியாக வேட்டையாடிக் கொழுத்த லாபம் ஈட்ட வா, வா' என்று வரவேற்கிறார் ஒரு சுலோகத்தில்.

பக்தி என்றால் அது என்ன என்ப தையும் சிவானந்த லஹரியில் வெகு அழகாகச் சொல்கிறார் சங்கரர். மனக் குரங்கை அலைபாயாதபடி கட்டும் மணிக் கயிறு அது. இதயம் என்ற மதயானையை இறைவனின் பாதமென்னும் கட்டுத் தறியில் பிணிக்கும் சங்கிலி பக்தி.

ஊசியானது இயல்பாகவே காந்தத் திடம் செல்கிறதே, அழிஞ்சில் மரத்தின் விதைகள் கீழே விழுந்தாலும் தாமாகத் திரண்டு சென்று அம்மரத்தின் தண்டி லேயே மீண்டும் ஒட்டிக் கொள்கின்றன வே, பதிவிரதை கணவனையே அண்டி நிற்கிறாளே, அது போல் இயல்பாகவே இறைவன்பால் வசியப்பட்டிருப்பது தான் பக்தி என்கிறார். மேலும் சொல் கிறார். பக்தி என்பது கடலில் நதி கலப் பது போல் ஆண்டவனை அடைவதுதான் என்று. கடலில் கலந்த நதி கடலேயாகி விடுகிறது. அதே போல் முடிவில் பக்தன் பகவனே ஆகிறான். அதாவது அத்வைத உபாயமான ஞானம் வேறு, பக்தி வேறு

அல்ல; இரண்டும் ஒன்றேதான் என்கிறார். வேறொரு சுலோகத்தில், அனவரதமும் ஈச்வரனை வணங்குவதும், தியானிப்பதும், தரிசிப்பதும், துதிப்பதும், பகவத் கதையைச் சிரவணம் செய்வதும், அவனிடம் உள்ளத்தை அர்ப்பிப்பதுமாக உள்ளவனே ஜீவன்முக்தன் என்கிறார். பக்தியினால் அவித்தை தொலைகிறது; பிரம்ம வித்தை இதயத்தை வந்தடைகிறது; வீட்டுக்கு வழி கோலுகிறது என்கிறார்.

அத்வைதானுபவத்தை அளிக்கும் அத்தகைய பக்தி தமக்கு வேண்டும் என்பதை உள்ளம் நெகிழ்ந்து தெரிவிக்கிறார். பக்தி எதைத்தான் செய்யாது என்று கேட்டவர், அது என்ன வெல்லாம் செய்கிறது என்பதை ஓர் உயிரோவியமாக வடித்துக் காட்டுகிறார்:

பரிவின் உறைவிடமான தாயாக பக்தியை உருவகப்படுத்துகிறார். பக்தன் எனும் குழந்தையை சிவானந்தம் என்ற கண்ணீரால் குளிப்பாட்டுகிறாள், அந்தத் தாய். அந்தக் குளிரில் குழந்தைக்கு மயிர்க்கூச்செறிகிறது. உடனே அழுக்கற்ற இதயம் என்ற வெண்மையான துணியால் அதை நன்றாகப் போர்த்துகிறாள், தாய். அந்தத் துணியால் பாவமும் மறைவு பெறுகிறது.

பக்தித் தாய், பாலனாகிய பக்தனை மடியில் படுக்க வைத்துக் கொள்கிறாள். தோத்திர வாக்கென்றும் பாலாடை பால் ஈசனுடைய திருவிளையாடல்களாகிற சரிதாம்ருதத்தைப் புகட்டுகிறாள். ஸ்நானமாகி, வயிறும் நிறைந்து விட்டதால் குழந்தைக்குத் தூக்கம் வந்து விடுகிறது. அதாவது ஈசனின் லீலைகளைக் கேட்டறிந்த பக்தன் அவனுக்குள்ளேயே அமிழ்ந்து போக விரும்புகிறான். பயத்தினால் குழந்தை குறைத் தூக்கத்தில் எழுந்துவிடப் போகிறதே என்று தாயார் 'ரட்சை' யாக விபூதியைப் பூசி, ருத்திராட்சத்தை அணிவிக்கிறாள். பிறகு ஈசுவர பாவனை என்ற தொட்டிலில் விட்டுத் தூங்கப் பண்ணுகிறாள். இப்படி ஒரு சுலோகம்.

கற்கண்டு மலை போல் எங்கு சுவைத்தாலும் இனிக்கிறது சிவானந்தலஹரி!

காவிய ரசனைக்காகவே அதைப் படிப்பவர்களும் கூட, ஈசனை மயிலுக்கும், மேகத்துக்கும், மல்லிகை மருவும் மருத மரத்துக்கும் (மல்லிகார்ஜுனம்), மதுகரத்துக்கும் ஒப்பிட்டு வருணிக்கும் அணி அலங்காரங்கள் கொண்ட சுலோகங்களில் மனதைப் பறி கொடுத்துவிடுவர்.

மல்லிகார்ஜுனம், மத்தியார்ஜுனம் (திரு இடை மருதூர்) புடார்ஜுனம் ஆகியவை ஈடு இணையற்ற சிவக்ஷேத்திரங்கள். பின் இரண்டும் தமிழகத்தில் உள்ளவை.

* * *

ஸ்ரீசைலத்திலிருந்து சங்கரரும், பத்மபாதரும், இதர சீடர்களும் அகோபிலம் சென்று நரசிம்மமூர்த்தியைத் தரிசித்தனர். தட்சிண திசையில் பிரயாணம் தொடர்ந்தது.

கர்நாடக தேசத்தில் ஒரு வைணவத் திருப்பதி. விபூதி-ருத்திராட்ச தாரியான ஆசாரியரையும், பரிவாரத்தையும் கோயிலுக்குள் விடக் கோவில் ஸ்தானீகர்கள் மறுத்தனர். உள்ளே குடிகொண்டிருக்கும் மூர்த்தி ஒன்றேயான பிரம்மத்தை அறிவிக்கும் உருவமே — இதில் சிவன் விஷ்ணு என்று பேதமில்லை என்று கூறினார் சங்கரர்.

''சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் பேதமில்லை என்கிறீரே! இதற்காகவே உம்மை கர்ப்ப கிருகத்துக்குள் அனுமதித்துத் தொலைக்கிறோம். உள்ளேயிருப்பது மானும், மழுவும் தாங்கும் உங்கள் 'மகா' தேவனா, சங்கமும் சக்கரமும் ஏந்தும் எங்கள் பரமபதநாதனா என்று கண்ணைத் திறந்து பாரும்'' என்று சொல்லி அந்த வைஷ்ணவர்கள் பகவத்பாதரைக் கருவறைக்கு இட்டுச் சென்றனர். தாங்களும் கண்ணைத் திறந்து ஒரு பேரதிசயத்தைப் பார்த்தனர். மூலஸ்தானத்தில் இதுகாறும் பெருமாள் எழுந்தருளியிருந்த இடத்தில் இப்போது சங்கரனும் நாராயணனும் ஒருவராக இசைந்த ஹரிஹர மூர்த்தி திருக்கோயில் கொண்டிருக்கிறான்! 'எந்தைக்கு இரண்டுருவம் ஒன்றாய் இசைந்து' என்று ஆழ்வார் உள்ளுருகிக் கண்ட அற்புதத் திருக்கோலத்தை எடுத்துக் கொண்டு, கண் கொள்ளாமல் காட்சி தந்தான் வைகுண்டபதி.

இங்கே நம் தமிழகத்தில், காவேரிப் பாக்கத்தின் அருகேயுள்ள திருப்பாற்கடலில், புண்டரீகர் என்ற விஷ்ணு பக்தருக்காக சிவபெருமான் திருமாலானான். குற்றாலத்தில் அகத்திய முனிவருக்காக நாரணன் ஈசுவரனானான். அத்வைதத்தைச் சொன்ன ஆசானுக்கேற்றபடி பெருமான் இருவரும் ஒன்றிய ஹரிஹர உருவம் கொண்டான். அதிலிருந்து அந்த க்ஷேத்திரம் ஹரிஹரம் என்றே பெயர் பெற்று விட்டது.

மூகாம்பி என்ற சாக்தத் திருத்தலத்தில் உக்ர கலையோடு கூடியிருந்த மூகாம்பிகை மூர்த்தத்தின் முன்பு ஸ்ரீசக்ரம் ஒன்றை ஸ்தாபித்து அதில் தேவியின் உக்கிரத்தை ஆகர்ஷித்து வைத்தார் பகவத்பாதர். மூகாம்பிகை சௌம்ய மூர்த்தியானாள். (தொடரும்)

# 'ஆன்வில்'

## புதியதோர் கிருமிநாசினிக் களிம்பு









### படர்தாமரை, சொறி சிரங்குகளுடன் பிற சருமநோய்களுக்கும் ஏற்றது

'ஆன்வில்' எல்லாவகையிலும் உபயோகமாகும் கிருமிநாசினிக் களிம்பு. எல்லா சருமநோய்களையும் குணப்படுத்த உதவுவதுடன் சருமத்தில் உண்டாகும் எரிச்சல்களையும் தணிக்கும். உபயோகிப்பதற்கு சுலபமாகவும் வசதியாகவும் கூடிய டின்னிலும் கிடைக்கின்ற 'ஆன்வில்,' மென்மையான சருமத்தைப் பாதிக்காது, உடைகளையும் கறைப்படுத்தாது.

'ஆன்வில்,' மார்க்கெட்டிலே மிகச்சிக்கனமானதும் பலவகையிலும் உபயோகமாகும் கிருமிநாசினிக்களிம்பு. எப்பொழுதும் அருகில் ஒரு டின் 'ஆன்வில்' வைத்திருங்கள்!




அட்லாண்டிக் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

[WTANV 531]

கீழ்க்காண்பவைகள்
ஒன்றுக்கொன்று நேர்
எதிராக இருந்தாலும்
ஒரு சிறந்த தயாரிப்பை
உருவாக்குகின்றன

பேனாவில் மசி உலராது
காகிதத்தில் விரைவில் உலரும்

எழுதியது தெளிவாயிருக்கும்
மசி ஓட்டம் இலகுவானது

எழுத்துக்கள் அழியாது
பேனாவிலிருந்து மசியை
சுத்தமாக கழுவலாம்

சுலேகா
பேனா மசி

**Sulekha**
**FOUNTAIN PEN INK**

வேறு பல காரணங்களுக்காக இல்லாவிடினும் இந்த ஒரு காரணத்திற்காகவே, சுலேகா மசி மிக அதிகமாக விற்பனையாகிறது



SULEKHA WORKS LTD.
CALCUTTA • DELHI • BOMBAY • MADRAS

# விஷ வெட்டுக் காயங்கள்



## ஜாம்-பெக் உதவியினால் சீக்கிரம் குணமடைகின்றன

வெட்டுகள், சிராய்ப்பு, மற்றும் பூச்சிக் கடிகளிலிருந்து, குணமடையுங்கள்... கட்டிச்சிரங்கு, கொப்புளங்கள் மற்றும் விஷக் காயங்கள், பொடுகு சொரிகள் இவைகளை அகற்றுங்கள். எவ்வித சரும உபாதைகளையும் மூலிகைக்களிம்பான ஜாம்-பெக் குணப்படுத்துகிறது. மிருகக்கொழுப்பு மற்றும் எண்ணெய்கள் சேர்க்கப்படாதது என்பதற்கு உத்திரவாதம்.

**Zam-Buk**

ஜாம்-பெக்
மூலிகைக்
களிம்பு



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-60-TAh

ஸி.இ. புல்போர்ட் (இந்) பிரைவேட் லிமிடெட், பம்பாய்

சோல் ஏஜண்டுகள்:

தாதா & கம்பெனி

86, நைனியப்ப நாயக்கன் தெரு, சென்னை-1

# கூர்ஜரத்தின் செல்வன்

குஜராத் இலக்கிய வானில் சென்ற நாற்பதாண்டுகளுக்கு மேலாகத் தனிப் பெரும் சுடராக ஒளி விட்டுப் பிரகாசிக்கும் கன்னையாலால் முன்ஷி அவர்களின் கற்பனை மேதாவிலாசத்தை அறியத் தமிழர்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்துள்ளது. ஸ்ரீ முன்ஷி அவர்கள் இலக்கியத்தின் பல்வேறு துறைகளில் இறங்கி வேலைசெய்திருக்கிறார். என்றாலும் குஜராத் மக்கள் மிகவும் போற்றிப் புகழ்வது அவரது சரித்திர நவீனங்களைத்தான். அவர் 1916-ம் ஆண்டு சரித்திர நவீன நெடுங் கதைகள் எழுதத் தொடங்கினார். குஜராத்தின் பொற்காலம் எனப்படும் பதினோராம் நூற்றாண்டைய குஜராத் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு மூன்று நாவல்கள் ஒரு தொடர்புள்ளதாகவும் — தனித் தனியே படிக்கக்கூடியதாகவும், எழுதினார். அவை குஜராத் மக்களுக்குப் புது எழுச்சியும் இன்பத்தையும் ஊட்டின! பல்லாயிரக்கணக்கான பிரதிகள் செலவாயின; இன்றும் செலவாகி வருகின்றன. குஜராத் மட்டுமல்ல; பாரதத்தின் பதினான்கு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. இப்படி குஜராத் மக்களும் பாரதத்தின் பல்வேறு மொழியினரும் விரும்பிப் படித்த ஓர் அரிய சரித்திரக் கதை தமிழில் 810 பக்கங்கள் கொண்ட நூலாக வெளிவருகிறது.

தமிழகத்தின் சரித்திரத்தில் தஞ்சை, காஞ்சி, உறையூர், மதுரை, கரூர், வஞ்சி, கொற்கை முதலியன சரித்திரப் புகழ் பெற்ற நகரங்களாகும். பேரரசர்கள் அங்கிருந்து ஆண்டு புகழ் நிலை நாட்டிய ஊர்களாகும். அவ்விதமே, குஜராத்திலும் படன், துரோகட், கம்பத் முதலிய ஊர்கள் பேரரசர்கள் செங்கோலோச்சிய பழம் பெரும் பகுதிகளாகும். சில சமயம் இப் பிரதேச மன்னர்கள் ஒருவருக்கொருவர் போரிட்டு, பலப் பரீட்சை பார்த்துக் கொண்டதும் உண்டு. இப்புறப் படலத்தை மனத்தில் கொண்டு இப்பொழுது வெளியாகியிருக்கும் ''ஜெயதேவன் அல்லது கூர்ஜரத்தின் செல்வன்'' என்ற அரிய நெடுங் கதையைப் படிக்க வேண்டும்.

இந்த நாவலைச் சுருக்கமாகச் சொல்ல எடுத்துக் கொள்ளும் முயற்சி வீணாகும். கதையில் சம அந்தஸ்துள்ள பலப்பல பாத்திரங்களும் சம்பவங்களும் உள்ளுக்குள் பின்னிக் கொண்டு செல்கின்றன. இருப்பினும் குணசித்திரங்களுக்கும் மனிதப் பண்புகளை நுட்பமாக விளக்கும் அரிய இலக்கியச் சுவைக்கும் குறைவில்லாமல் இருக்கின்றன.



ஸ்ரீ கே. எம். முன்ஷி

படன் நகரத்து அரசன் ஜெயதேவன் இளைஞன். கூர்ஜரத்துப் பெரும் சக்கரவர்த்தியாக விளங்க வேண்டும், சர்வ சக்தி வாய்ந்தவனாக விளங்க வேண்டும் என்ற பேர் ஆர்வம் கொண்டவன். ஆனால் ஆர்வத்தின் அளவு ஆற்றல் அற்றவன்.

அவன் தந்தைக்கு மந்திரியாக இருந்து, அவனுக்கு மந்திரியாகவும், அவன் தாயின் நம்பிக்கைக்குப் பாத்திரமான முஞ்சால் என்ற மந்திரி ஓர் அபூர்வமான சிருஷ்டி. அவருக்கும் படையைப் பெருக்க வேண்டும் என்ற ஆர்வமுண்டு. எதையும் அமைதியுடனும் உறுதியுடனும் செய்யக் கூடியவர். தீர்க்கமாகச் சிந்தித்துச் செய்யக் கூடியவர். நாட்டில் எந்த மூலை முடுக்கில் எது நடந்தாலும் அறிந்து கொள்ளக் கூடிய அற்புதமான ஒற்றர் படை கொண்டவர். நாட்டின் நலன் அன்றி வேறு சிந்தனை யற்றவர்.

அவர் தமது ஒப்பற்ற திறமையின் காரணமாக, படனில் ஜெயதேவனை அரியாசனத்தில் அமர்த்தி விட்டு, அரசியலிலிருந்து விலகிக் கொண்டவராகத்தான் இக்கதையின் தொடக்கத்தில் வருகிறார். ஜெயதேவனே ராஜ்ய பாரத்தின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளச் சொல்கிறார். தாம் விலகி யிருப்பதாகவே சொல்கிறார். ஆயினும் சந்தர்ப்பக் கோளாறினால் ஒவ்வொரு சமயம் அவர் தோன்ற வேண்டியிருக்கிறது. தோன்றும் இடத்தில் அவர் தம் பண்பை வியக்கும்படிசெய்து விட்டு மறைகிறார்.

பார்க்கப்போனால் நெடுங்கதையின் முக்கிய கதாநாயகன் ''காகபட்டன்'' என்ற போர் வீரனாக வரும் அந்தணன்தான் என்று சொல்ல வேண்டும். நல்ல புத்தி கூர்மையும், அஞ்சாத நெஞ்சமும், எந்த ஆபத்தான கட்டத்தையும் சமாளிக்கும் அமைதியும், பகைவரையினும் அவரது வீரத்தைப் போற்றும் உயரிய பண்பும் எல்லாம் சேர்ந்த அரியதொரு பாத்திரமாகக் காகபட்டனைப் புனைந்திருக்கிறார் ஆசிரியர்.

காகபட்டன் போர்க்கலையிலும், ராஜதந்திரத்திலும் எவ்வளவு வல்லவனோ, அதற்கு நேர்மாறான நிலை படிப்பு விஷயத்தில். அவன் குலதர்மமாகிய கல்வி கேள்விகளில் நிரட்சரகுட்சி என்று சொல்ல வேண்டும். ஆனால் விதியின் விளையாட்டை என்னவென்பது?

ஒரு மகாபண்டிதரின் புதல்வியான மஞ்சரி, தந்தையைப் போலவே சமஸ்கிருத கல்வியில் கரை கண்டவள். காளிதாஸனின் காவிய உலகத்தில் சஞ்சரிப்பவள்; வால்மீகியின் கவிதை நயத்தை ரசிப்பவள்; என்றும் கற்பனை வீரர்களைக் காதலிப்பவள்! இவள் தாய், சமண மதத்தைச் சேர்ந்த கம்பத் அதிகாரி உதா மேத்தாவைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி பலாத்காரப் படுத்தினாள். மஞ்சரி மறுத்தாள். தாய் விடுவதாக இல்லை. மஞ்சரி உயிர்த் தியாகம் செய்து கொள்ளவே துணிந்து விட்டாள். அந்நிலையில், அவள் கிடந்த சிறைக்கூடத்திலிருந்து தப்புவித்து அழைத்து வரும் பொறுப்பு எதிர்பாராத விதமாகக் காகபட்டனுக்கு ஏற்பட்டது! இதற்குப் பிறகும் பல முறை உதா அவளைத் தூக்

திப் போக முயன்முன். அப்போதெல்லாம் எதிர்பாராத விதமாகக் காகபட்டன் தோன்றி அவனை மீட்டிருக்கிருன்.

இப்படிப்பட்டவனை மஞ்சரி முதலில் வெறுத் ததும், அவனையே திருமணம் செய்து கொள்ள நேர்வதும், திருமணத்துக்குப் பிறகும் அந்தச் சுத்த வீரனை அலட்சியப்படுத்திப் புண்படுத் தியதும், பிறகு அவனுடையகாதலுக்காகவே, அரவணைப்புக்காகவே, ஏங்கி ஏங்கித் தவித்த தும் மிக அற்புதமான சொல்லோவியமாகத் தீட்டியிருக்கிருர் ஆசிரியர்! பெண் மனத்தின் பல்வேறு மன இயல்புகளை மஞ்சரியைக் கொண்டு அருமையாகச் சித்திரித்திருக்கிருர்.

கூர்ஜரத்தில், தமிழகத்தைப் போலவே, சைவம், சமணம், வைணவம் ஆகிய மூன்று மதங்களும் பன்னெடுங்காலமாக இருந்து வருகின்றன! 'எந் நாட்டவர்க்கும் இறைவ' ஞன சிவபெருமான் சோமநாதராகக் கூர்ஜ ரத்தில் விளங்குகிருர். சோமநாதர் ஆலயத் தின் செல்வச் சிறப்பைக் கேள்வியுற்றுக் கஜனி முகமது பன்முறை அக்கோயிலைச் சூறையாடி ஞன் என்பது சரித்திரம். கண்ணன் பிறந்து விளையாடி, அரசாண்ட பூமி கூர்ஜரம். கண்ணன் தலைநகராகக் கொண்டு ஆண்ட துவாரகை கூர்ஜரத்தில் தான் இருக்கிறது! இப்படிப் பல விதத்திலும் புகழ் பெற்ற கூர்ஜர நாட்டின் பொற்காலமாக விளங்கிய ஒரு காலத்திய சரித்திரத்தைக் கன்னையாலால் முன்ஷி அருமையாக வழங்கியிருக்கிருர். எந் தப் பாத்திரத்தின் குணசித்திரத்தையும் தாமே வர்ணிக்காமல் சம்பவங்களே குண சித்திரத்தை வாசிப்பவர் மனத்தில் வரையும் படிசெய்தது அவர் எவ்வளவு உயரிய கலைஞர் என்பதைக் காட்டுகிறது! இந்தப் புத்தகத்தை ஸ்ரீமதி சரஸ்வதி ராமநாதன் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்திருக்கிருர்.

ஸ்ரீ கே. எம். முன்ஷி, வெறும் கதாசிரியர் மட்டுமல்ல; சிறந்த வழக்கறிஞர், அரசியல் வாதி. அவர் பம்பாய் முதல் காங்கிரஸ் ஆட்சியில் (1937-9) உள்நாட்டு மந்திரியாக இருந்தார்; பிறகு டில்லி சர்க்காரில் மந்திரி யாக இருந்திருக்கிருர். பின்னர் கவர்னராக இருந்திருக்கிருர். ராஜாஜி சுதந்திரக் கட்சி ஆரம்பித்ததும் அவருக்குப் பக்க பலமாக நின்று அரும்பணியாற்றி வருகிருர். இவை யெல்லாவற்றையும் விட, பாரத நாட்டுப் பண்பாட்டைப் பேணிப் பாதுகாக்கவும், பல நாட்டு நல் இலக்கியங்களை நம் நாட்டினருக்கு அறிவிக்கவும் "பாரதீய வித்யாபவன்" என்ற பெரும் ஸ்தாபனத்தை பம்பாயில் நடத்தி வருவதே மிகச் சிறந்த பணியாகும். அந்த ஸ்தாபனத்தின் பணிகள் பலப்பல. அதன் கிளைகள் டில்லியிலும், சென்னையிலும் இருக்கின்றன. சென்னைக் கிளையின் புத்தகப் பிரசுரப் பணி சில மாதங்களுக்கு முன்பு ராஜாஜியின் "கடோபநிஷத்து" (தமிழ் விளக்க உரையை வெளியிட்டுத் தொடங் கியது. இப்பொழுது முன்ஷி அவர்களின் "ஜெயதேவன் அல்லது கூர்ஜரத்தின் செல் வன்" என்ற நவீனத்தை வெளியிடுகிறது. இம்மாதம் 11ம் தேதி சனிக்கிழமையன்று, சென்னை மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி மண்டபத்தில் இந்த நெடுங்கதையை ராஜாஜி வெளியிடுகிருர். பாரதீய வித்யா பவனின் சென்னைக் கிளை இன்னும் பல்வேறு அரிய நூல்களை வெளியிட்டுத் தமிழர்களுக்குச் சேவைபுரிய வேண்டும். —எஸ். வி. எஸ்.

---

பாரதீய வித்யா பவன், 83, கோபதி நாராயண ஸ்வாமி ரோட், தியாகராய நகர், சென்னை — 17, விலை : ரூ. 5.00, (இந்தியா) விலை: ரூ. 6.50. (அயல் நாடு)

# பால்மொழியே கேள்!

பகீரதன் பல்லாண்டு காலம் தவம் செய் தான். ஒற்றைக் காலிலே நின்று விடாப்பிடி யாகத் தவஞ் செய்தான்! கடைசியில் தான் நினைத்த காரியத்தைச் சாதித்து விட்டான். கங்கையைப் பூமிக்குக்கொணர்ந்து விட்டான்!

இதோ இந்தத் தீர்த்தக் கரையிலே உலவும் இந்தக் காதலர்கள் பேசுவதைச் சற்றுச் செவி மடுத்துக் கேட்போம்.

காதலன் சொல்லுகிருன்:

"உன் பாலினும் இனிய மொழிகளைக் கேட் டுக் கொண்டே யிருந்தால், என் உள்ளம் என்னிடம் எங்கே தங்குகிறது? உன் மொழி கள்தாம் உள்ளத்தைப் பருகிவிட்டு, என்னைப் பேசவிடாமல் வாயடைத்து விடுகின்றனவே! இருந்தாலும் இப்போது நான் ஒன்று சொல் லப் போகிறேன். கேட்க வேண்டும்!"

"என்ன அது?"

"இதோ தெரிகிறதே, இந்த நீரில்-குளத் தில்-நின்று நின்று, கால் கடுக்க நின்று தவஞ் செய்தது...!"

"எது?"

"தாமரைதான்!"

"எதற்கு?"

"உன் முகத்தைப் போல் தானும் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்!" இதைக் கேட்டதும் காதலிக்குக் கோபத்துடன் வெட்க மும் வந்து விட்டது!

தண்துறைநீர் நின்ற
 தவத்தால் அளிமருவு
புண்டரிகம் நின்வதனம்
 போன்றதால் — உண்டோ
பயின்ருர் உளம்பருகும்
 பால்மொழியாய் பார்மேல்
முயன்ருல் முடியாப் பொருள்.

—பழம்பாடல்

"பால்மொழி! நான் உனக்காகச் சொல்ல வில்லை. முயற்சி எடுத்துக் கொண்டால் வெற்றி கிட்டாத காரியமில்லை என்பதைத் தான் சொல்ல வந்தேன்!" என்று மெள்ள அவள் வெட்கத்தை மாற்றினுன்.

ஆனல் எவ்வளவு பெரிய உண்மை அந்த வாக்கியத்தில் அடங்கியிருக்கிறது!

"தாமரை போன்ற முகம்" என்று பெண்கள் முகத்தை ஒப்பிட்டுக் கூறுவது மரபு. அதை மாற்றி எவ்வளவு நயம்பட உரைத்து விட்டான் தமிழ்க் கவிஞன்.

இந்த அரிய பாடலைச் சித்திரிக்கிறது: ஓவியர் வினு அவர்களின் இவ்வாரத்திய அட்டைப்படம்!

# ஏழு வைட்டமின்கள்

## சேர்ந்தது, ஏற்றமிகு அமுல் பாலுணவு




புரதச்சத்து நிறைந்த அமுல் பாலுணவு வைட்டமின் ஏ, பி, பி, பி, சி, டி ஆகிய சத்துக்களும், நியசினமைடும் கொண்டது. இந்த வைட்டமின் சத்துக்கள் சீரிய, ஆரோக்கியமிக்க வளர்ச்சிக்கு உதவுவதோடு உங்கள் மழலைச் செல்வத்தை நோயிலிருந்து காத்திடுகின்றன.



தயாரிப்பாளர்கள்:
கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோஆப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிட்.
அகில இந்திய விநியோகஸ்தர்கள்: VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.

ASP/ABF-24 TAM

# சிந்தனை மேடை

## அரவிந்தன்

### 10. மறுமலர்ச்சி எழுத்தாளர்களுக்கு

தமிழில் எழுத்தாளன் என்ற பதத்துக்குப் பொருள் விரிவு சொல்லும்போது எழுத்தாண்மை உடையவன் என்று பொருள் விரிவு சொல்லுவதா? அல்லது எழுத்தை ஆள்பவன் என்று பொருள் விரிவு சொல்லுவதா? இந்தப் பதம் மிகவும் பழைமையானது என்பதைப் பற்றிச் சிறிதும் சந்தேகமில்லை. எட்டுத் தொகை நூல்களில் 'மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்' என்றொரு பெயர் காணப்படுகிறதே! கையெழுத்துப் போடுவதிலிருந்து கணக்கு எழுதுவது வரை எழுத்து எல்லோரையும் ஆள்வதைக் காண்கிறோம். ஆனால் எழுத்தை ஆள்கிறவனை எங்காவது எப்போதாவதுதான் காண்கிறோம். எழுத்தை ஆள்வதும் ஓர் ஆண்மை என்று ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும்?

பத்திரிகையாளன், நிருபர், ஆசிரியர் இவர்களிலிருந்து வேறுபட்டவன் எழுத்தாளன். எழுத்தாண்மையில் ஆசிரியத் தன்மையும் உண்டு. தமிழ் நாட்டைப் பொறுத்தவரை பாரதிக்குப் பின்பு ஏற்பட்ட புது யுகத்து எண்ணங்களைப் பிரதிபலிக்கிற எழுத்தை யார் யார் ஆள்கிறார்களோ அவர்கள் அனைவரும் மறுமலர்ச்சி எழுத்தாளர்களே. மறுமலர்ச்சி எழுத்தின் யுகம் இன்னும் நிகழ்ந்து கொண்டுதானிருக்கிறது. இதனினும் புதிய மாறுதல் ஏற்படுகிறவரை நாளைக்கும் தொடர்ந்து நிகழ்கிற யுகம்தான் இது. இந்த மறுமலர்ச்சி யுகத்தின் எழுத்தாளர்களின் பொறுப்பு என்ன என்பதை எழுத்தாளர்களே வரையறுத்துக் கொண்டாலொழிய வேறு யாரும் கட்டளையிட்டோ அதிகாரம் செய்தோ வரையறுப்பதற்கில்லை. தங்கள் பொறுப்பைத் தாங்களே வரையறை செய்து கொண்டாலொழியத் தங்களைக் கட்டுப்படுத்த வேறெவரும் இல்லை என்பது போலச் சுதந்திரமாயிருப்பவர்கள் எப்போதுமே மிகவும் கவனமாயிருக்க வேண்டும். இப்படிப் பிறரால் கட்டுப்படுத்த முடியாத சுதந்திர முன்னவர்களுக்கு இரண்டு மடங்கு பொறுப்பு உண்டு. தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டிய பொறுப்பு ஒன்று. தங்களால் ஆளப்படும் துறைகளைக் கட்டுப்பாட்டோடு ஆள வேண்டிய பொறுப்பு மற்றொன்று. மிகவும் சுதந்திரமாக விடப்பட்டவர்களுக்குத்தான் பொறுப்பும் மிகுதி. ஒரு தலைமுறையில் காவிய ஆசிரியர்களும், அறநூலாசிரியர்களும், புலவர் பெருமக்களும் செய்த இலக்கிய இயக்கத்தை இன்று வேறுவிதமாக நாம் செய்கிறோம் என்ற பெருமிதம் எழுத்தாளர்களுக்கு இருக்க வேண்டும். 'உயர்ந்த காரியத்தைச் செய்கிறவர்களாக நாம் இருக்கிறோம்' என்ற எண்ணமே ஒரு பொறுப்புத்தான்.



'பண்பு எனப்படுவது
பாடு அறிந்து ஒழுகல்'

என்று கலித்தொகையில் அழகாகச் சொல்லி வைத்திருக்கிறார்கள். இன்றைய மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் இதை அவசியம் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். இலக்கிய பாரம்பரியத்தின் பழம் பெருமை, புதுப் பெருமை எல்லாவற்றையும் கட்டிக் காக்கிற பொறுப்பு ஒவ்வோர் எழுத்தாளனுக்கும் உண்டு. பெருமை தன்னிடமிருந்து நழுவாமல் கட்டிக் காப்பதற்கு அப்படிக் காக்கிறவன் ஒழுக்க முன்னவனாக இருக்க வேண்டும். இனிப்புத் தின்பண்டங்கள் எல்லாவற்றுக்கும் அவை எப்படி எப்படி எவ்வெவற்றால் செய்யப்பட்டாலும் இனிப்பு என்பது பொதுக் குணமாவதைப் போல் கலைகளுக்கு ஒழுக்கம் பொதுக் குணமாக நின்று காக்க வேண்டும். எழுத்தும், இலக்கியப் படைப்பும் கூட இதற்கு விதிவிலக்கு இல்லைதான்.

### அறம் பிறழாத இலக்கியம்

ஓர் இலக்கிய ஆசிரியன் இறுதிவரை தன் எழுத்தின் இலட்சியங்களைக் காப்பாற்றிக் கொள்வது ஒரு பெண் தன் நிறையைப் பாதுகாத்துக் கொள்வதைப் போல் அவசியமானதும், தவிர்க்க முடியாததும் ஆகும். எழுத்துக்குப் பண்டமாகிற பொருளோ சம்பவமோ எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்; ஆனால் அதிலிருந்து விளைகிற சாரம் எந்த விதத்திலாவது சமுதாய நலனுக்குப் பயன்பட வேண்டும். அறம், அறமல்லாதது என்ற பிரிவுகளை இன்றைய நிலைக்கு ஏற்ப இப்படி வைத்துக் கொள்ள முடியும். சமுதாய நலனுக்குப் பயன்படுகிற இலக்கியம் எதுவோ அது அறம் பிறழாத இலக்கியம்; சமுதாய நலனுக்குப் பயன்படாத இலக்கியம் எதுவோ, அது அறம் பிறழ்ந்த இலக்கியம் என்று புது விதமாகப் பார்ப்பதற்குப் பழகிக் கொண்டால் மிகவும் நன்றாயிருக்கும்.

கொலை கொள்ளைச் செய்திகள், பேதைத் தன்மையால் பெண்கள் வழி தவறுதல், இவைகளை வைத்துக் கதையும் இலக்கியமும் புனைகிறவர்கள் இன்று கூடுதலாயிருக்கிறார்கள். கதைகள் புனைவதற்கு இவை சம்பவங்கள்

ஆகமாட்டா என்றோ, இப்படிப்பட்ட சம்பவங்கள் வாழ்க்கையில் இல்லை என்றோ,—கூற முன்வரவில்லை. கொலை கொள்ளைச் செய்திகளைப் புனைகிற கற்பனை அதைப் படித்து முடித்ததும் அவற்றின் மேலும் அவற்றைச் செய்கிறவர்கள் மேலும் வெறுப்பு உண்டாக்குகிற அளவுக்காவது சமுதாய நலனுக்குப் பயன்பட வேண்டும். பேதைத் தன்மையாலும், அனுதரவான சூழ்நிலையாலும், வழி தவறுகிற பெண்களைப் பற்றி எழுதப்படுகிற புனை கதைகள் அவற்றிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் துணிவைப் பெண்களுக்கு உண்டாக்குவனவாயிருக்க வேண்டும். அப்படி இல்லாமல் அந்தந்தக் கதைகளில் அவற்றின் தவறுதல் நிகழ்ச்சியே கவர்ச்சிகளாக அமையுமானால் எழுதுகிறவர்களின் பணி சமுதாய நலன் என்கிற பொது அறத்தை ஏதோ ஒரு வகையில் ஏமாற்றுகிறதென்றே வைத்துக் கொள்ள வேண்டும்.

செய்திப் பத்திரிகைகளை விரித்தால் வழி தவறிய நிகழ்ச்சிகளைப் பற்றிய பலவிதமான செய்திகள், வார, மாதப் பத்திரிகைகளை விரித்தால் வழி தவறிய மையக் கருத்துக்களையே தங்களுடைய கவர்ச்சிச் சாதனங்களாகக் கொண்டு பிறக்கும் கதைகள்,— இவற்றை வெல்லாம் படித்து விட்டுப் போகிறவர்களின் பேச்சில் வழி தவறுதல்கள்—என்று மொத்தமாகப் பார்க்கும் போது நல்லதை விளைவிப்பதற்காக விவரிக்கிற கெடுதல்களே நல்லதை விளைவிக்கத் தவறிக் கெடுதல்கள் என்ற அளவில் மட்டும் கவர்ச்சி நிறைந்தனவாய்த் தோன்றி விடுவது தெரிகிறது. எழுத்தின் இலட்சியம் பெண்ணின் நிறையுடைமையைப் போல் காக்கப்பட வேண்டியதென்று சொன்னேன்.

**‘ஒருமை மகளிரே போலப் பெருமையும்**
**தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு’**

என்று திருவள்ளுவர் பெருமைக்கும், பெருந்தன்மைக்கும் இலக்கணம் சொல்லியிருக்கிறார்.



ஒரு பிரைவேட் நர்ஸிங் ஹோம் டாக்டர்: இங்கே இருந்த நோயாளி எங்கே?

நர்ஸ்: அவருக்கு உடம்பு சரியாக இல்லை என்று சொன்னார்; வீட்டுக்கு அனுப்பி விட்டேன்!

இன்றைய மறுமலர்ச்சி எழுத்தாளனுக்கும் இது பொருந்தும்.

## இரண்டு வினாக்கள்

‘**எ**தை எழுதுவது?’ — என்ற கேள்வியை விட ‘எதற்காக எழுதுவது?’ என்ற கேள்வி தான் முக்கியமாக இருக்க வேண்டும். காளிதாஸனும், கம்பனும், இளங்கோவும் ஆயிரங் காலத்து வெள்ளத்தையும் நீந்திக் கொண்டு நிற்கும் இலக்கியங்களைத் தந்திருக்கிறார்கள். ‘எதற்காக எழுத வேண்டும்?’ என்ற கேள்வியிலேயே, ‘எவ்வளவு காலம் நிற்கும்படி எழுத வேண்டும்?’ என்ற கேள்வியும் உள்ளடங்கியிருக்கிறது. வாரத்துக்கு ஒரு முறை, மாதத்துக்கு இரு முறை, மாதத்துக்கு ஒரு முறை என்று பத்திரிகைகள் வெளி வருவதற்கு எல்லை வகுத்திருக்கும் தேதியும் கால அளவுமே அவற்றில் வெளிவரும் விஷயங்கள் நிற்க முடிந்த கால எல்லையாகவும் இருக்க வேண்டுமென்று இப்போது பலர் நினைத்துக் கொண்டால் அதற்கு யார் என்ன செய்ய முடியும்? எந்தச் சொற்களில் பிறக்கிறது? எவ்வளவு சத்தியமுள்ள மனத்திலிருந்து பிறக்கிறது? எதைப் பிறப்பிக்கிறது? இவை எல்லாவற்றையும் பொறுத்துத்தான் இலக்கியம் நிற்கிற காலம் அமைகிறது. செய்திப் பத்திரிகைகளைப் போலப் பிறந்து வெளியான சில மணி நேரத்துக்குள்ளேயே அழிந்து பழையதாகிப் போய் விடுகிற நிலைமை இலக்கியங்களுக்கும் ஏற்படலாகாது. அந்த அளவுக்குப் படைப்புக்களையும், படிக்கிறவர்களையும் மலிவாகக் கொண்டு போய் விட்டால் பின்னும் எப்பொழுதும் மாற்றி அமைக்கவே முடியாமல் போகும். ‘இப்படித் தான் எழுத வேண்டும்’ என்று கற்பனை எழுத்தாளர்களுக்கு யாரும் கட்டளை இடுவாரில்லை. அவ்வாறு கட்டளை இடுவார் யாரும் இல்லாததனால் தான் அவர்களுக்குப் பொறுப்பு அதிகம் என்று குறிப்பிட நேர்ந்தது. எழுத்தின் உயர்ந்த பண்புகள் எழுதுகின்றவனுடைய கற்பு. எழுத்தின் உயர்ந்த பக்குவங்கள் எழுதுகின்றவனுடைய வாழ்க்கையின் பண்புகள். எழுதுகின்றவர்கள் ஊர் நடுவில் கோபுரத்தைப் போல் எல்லாரும் காணும்படி பொலிந்து தெரிபவர்கள். அந்தக் கோபுரம் மங்கலமான காட்சியாகத் தோற்றமளித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று அக்கறை காட்டுவது தவறாகாது.

எனவே ‘எதை எழுத வேண்டும்’ என்பதை விட ‘எதற்காக எழுத வேண்டும்’ என்பதைச் சற்றே அதிகமாக ஞாபகத்தில் பதித்துக் கொள்ளுவது அவசியமாகிறது. பாரதியைப் போல் ஒரு மொழியினுடைய நீண்ட வரலாற்றில் ஒரு புதிய யுகத்தைப் படைக்கிற எழுத்தாளர்களையும் நாம் கண்டிருக்கிறோம். ஆனால் இன்று ஒரு யுகத்தின் நீண்ட வரலாற்றில் தாங்களும் மறைந்துபோய்விடுகிற எழுத்தாளர்களைத்தான் அதிகமாகப் பார்க்கிறோம். நல்ல எழுத்துச் சமூகத்துக்கு மருந்து போன்றது. சமூகத்தில் உள்ளவர்களே இதை மறந்தாலும் எழுத்தாளன் மறக்கக் கூடாது. ஏனென்றால் எழுதுகிறவனுடைய பொறுப்புப் படிக்கின்றவனுடையதை விட அதிகம். நிச்சயமாக அதிகம்.



இலங்கை, நாவலப்பிட்டிய திரு K. R. N. பழனிச்சாமி செட்டியார் அவர்களின் புதல்வி செல்வி சிவகுமாரிக்கும், பொள்ளாச்சி திரு P. ராமலிங்கம் செட்டியார் அவர்களின் சகோதரர் செல்வன் T. P. சுப்ரமணியம், B.E. (Assistant Engineer, Madras State Electricity Board, Tirunelveli) அவர்களுக்கும் 8-7-62ல் மதுரையில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!



# கத்தியர் வாசல்

ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன் பாட்னாவில் குதிரைகள் இழுத்துச் செல்லும் டிராம் வண்டிகள் இருந்தன. பழைய நகரமான குல்ஜார் பாக் மொஹல்லாவிலிருந்து பாங்கிபூரிலுள்ள நீதி ஸ்தலம்வரை வண்டி ஒரே லைனில் போய் வந்தது. இருபுறங்களிலும் போக்குவரத்தில் இடையூறு ஏற்படக் கூடாது என்பதற்காக ஒவ்வொரு மைல் இடைவெளி விட்டு 'லூப் லைன்'கள் போட்டிருந்தார்கள். அதாவது டிராம் தண்டவாளத்திலிருந்து ஒரு கிளை பிரிந்து இருபது முப்பது கஜ தூரத்துக்குத் தனியாகச் சென்று பின் மீண்டும் லைனோடு வந்து சேரும். சென்னைப்பட்டணத்திலுள்ளவர்கள், பிராட்வேயில் டிராம் ஓடியதை நினைவு கொண்டால், இந்தக் காட்சி அவர்கள் மனத்தில் தத்ரூபமாகப் பதியக்கூடும். ஒவ்வொரு வண்டியும் 'லூப்'புக்கருகில் வந்து நிற்கும். மறுபுறத்திலிருந்து வரும் வண்டி 'லூப்'பில் ஒதுங்கி அதற்கு வழிவிடும். ஆனால் சிற்சில சமயம் இவ்வொழுங்கு முறை தவறி விடுவது உண்டு. ஒரு தடவை ஒரு வண்டி வந்து அரை மணி என்ன, ஒரு மணி நேரமாக 'லூப்'புக்கருகில் நின்று கொண்டிருந்தது. ஆனால் மறுபுறத்திலிருந்து வண்டி வருவதாக் காணோம். உட்கார்ந்திருந்த பிரயாணிகள் அலுத்துச் சலித்துப் போய் அவசரப்படுத்தலானார்கள். 'எத்தனை



நேரம்தான் காத்திருப்பது? விடு வண்டியை!' என்று அவர்கள் துரிதப்படுத்தினார்கள்.

வண்டி முன்னேறியது. ஆனால் அரை மைல் கூடப் போயிராது. எதிர்ப்புறத்து வண்டி வந்து குறுக்கே நின்றுவிட்டது. இருபுறத்திலிருந்தும் திட்டும் வசவும் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

''ஏண்டா கழுதை! நீ ஏண்டா லூப்லயனிலேயே காத்திருக்கக் கூடாது?'' என்று கேட்டான் ஒருவன். ''அட கோட்டானே! நீ ஏண்டா இத்தனை நேரமாக்கினாய்?'' என்றான் எதிராளி. பிரயாணிகளும் இச்சச்சரவுக்குத் தங்கள் ஒத்துழைப்பை நல்கினார்கள். இரண்டு வண்டிகளிலும் எதிரும் புதிருமாகப் பூட்டப்பட்டு நின்ற நான்கு குதிரைகளும் கூட ஒன்றையொன்று முறைத்துப் பார்த்துக் கால்களைத் தூக்கிக் கொண்டு நர்த்தனம் ஆடிக் கனைக்கலாயின.

இவ் வேடிக்கையைப் பார்க்க வழியில் போவோர் வருவோர்களெல்லாம் கூடி விட்டனர். சிறு பையன்களோ கைகொட்டி நகைத்துக் கொம்மாளமடித்தனர். அப்பொழுது ஒரு பிரயாணி, ''சண்டை போடு

வது இருக்கட்டும். முதலில் வண்டியை ஓட்ட வழி செய்யுங்கள்!'' என்றார்.

கடைசியில் ஒருவழியாக இருசாராரும் சமாதானத்துக்கு வந்து இரண்டு வண்டிகளி லும் பூட்டி யிருந்த குதிரைகளை அவிழ்த்துப் பின்புறமாகப் பூட்டினார்கள். இந்த வண்டியி லிருந்த பிரயாணிகள் அந்த வண்டிக்கும் அந்த வண்டியி லிருந்த பிரயாணிகள் இந்த வண்டிக்கு மாக மாறி ஏறிக் கொண்டார்கள். இரண்டு வண்டிகளும் வந்த வழியே திருப்பப் பட்டன. இப்படி யாகப் பிரயாணிகள் தாங்கள் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இதே போன்றதொரு நிகழ்ச்சி மிகமிகப் பண்டைய காலத்திலும் நிகழ்ந்திருக்கிறது. அதையேதான் இங்கு சொல்லப் போகிறேன்.



# பரசுராம்

சத்திய யுகத்தில் ஒரு நாள் விந்திய பர்வதத்துக்கு மிருந்த ஆணவம் ஏற்பட்டது. அது சந்திர சூரியர்களின் வழியை மறித்துக் கொண்டு உயர்ந்து ஓங்கி வளரலாயிற்று. தேவதைகள் மிகவும் வேண்டிக் கொள்ளவே அகத்திய முனிவர் அங்கு சென்றார். ''நான் கொஞ்சம் தெற்கே போக வேண்டும். வழி விடு கொஞ்சம்!'' என்றார். விந்திய பர்வதமும் பிளந்து அவருக்கு ஒரு குறுகிய வழியை விட்டது. அகத்தியர் அவ்வழியே சென்றதால் அதற்கு அகத்தியர் வாசல் என்று பெயர் ஏற்பட்டது. அவ்வழியாகத் தென் கரை சேர்ந்த அகத்தியர் விந்திய மலையைத் தலையிலிருந்து கால் வரை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''குழந்தாய்! நான் திரும்பும்வரை நீ இப்படியே இருக்க வேண்டும்'' என்றார். விந்தியமலை அவர் ஆக்ஞைக்கு அடிபணிந்தது. அதற்குப் பின் பல நாட்கள் ஓடி விட்டன. போன அகத்தியர் திரும்பி வரவில்லை. விந்திய மலைக்கு அவருடைய தந்திரம் புரிந்து விட்டது. அசாத்தியக் கோப முற்றுச் சாபம் இட்டது. சாபம் இதுதான்: ''இந்த அகத்தியர் வாசல் வழி யாக எதிரும் புதிருமாக யாராவது வந்தால் அவர்கள் புத்தி தடுமாறிப் போகக் கடவர்!''

இந்தப் புராண நிகழ்ச்சி நடந்து வெகு காலத்துக்குப் பின் நடந்த கதை இது. விந்திய மலையை ஒட்டினாற் போலிருந்த காட்டுக்கு வடக்கே அப்பொழுது கலிஞ்சரம் என்னும் ராஜ்யம் இருந்தது. கலிஞ்சரத்துக்குத் தெற்கே காடு. அதற்கடுத்தாற் போலக் கடக்கமுடியாத விந்திய மலை. அதற்குப் பின் மீண்டும் காடு. அதை அடுத்து விதர்ப்ப ராஜ்யம் இருந்தது.

கலிஞ்சரத்து அரசன் கனகவர்மன் என்பவனும் விதர்ப்ப தேசத்து மன்னன் விசாக சேனன் என்பவனும் மிகத் தேஜஸ் வாய்ந்தவர்கள். இளம் பிராயத்தினர்கள். அவர்களது ராணிகள் கூடத் தாய் வழியில் ஒன்றுவிட்ட சகோதரிகள்.

கலிஞ்சர நாட்டு மன்னனான கனகவர்மன் தனது அரசாங்கத்தை ஒட்டினாற்போல் தெற்குக் திக்கில் இருந்த கானகத்துக்கு வேட்டை யாடப் போவதுண்டு. ஒரு தடவை அவன் விந்திய மலையையும் தாண்டித் தெற்கே

சென்று சாம்பர், மான் முதலியவற்றை வேட்டையாட அவா கொண்டான். தனது அன்புக்குரிய நண்பர் கிஹோரட் பட்டரைக் கூட அழைத்துக் கொண்டு பயணப்பட்டான். அவனைத் தொடர்ந்து ரதங்கள், யானைப் படைகள், குதிரைப் படைகள் ஆகியவை அணிவகுத்துச் சென்றன.

தற்செயலாக விதர்ப்ப நாட்டுக்கு அதிபதியான விசாகசேனனும் விந்திய மலைக்கு வடக்கே உள்ள ஆரண்யத்தை அடைந்து புலி, கரடி முதலியவற்றைக் கொல்லத் திட்டமிட்டான். தனது ஆருயிர் நண்பரான விடங்க தேவரைக் கூட அழைத்துக் கொண்டு அவனும் பயணம் புறப்பட்டான். அவனைத் தொடர்ந்து அவனது நான்கு வகைப் படைகளும் புறப்பட்டன.

விந்திய மலைத் தொடரைக் கீறிக் கொண்டு ஒரு வழி வடக்கிலிருந்து தெற்காகப் போகிறது. இப்பாதை மிகப் புகழ் வாய்ந்தது. இதற்கு இடையில்தான் அகத்தியர் வாசல் என்னும் அந்தக் கணவாய் இருக்கிறது. அது மிக மிகக் குறுகலானது. அவ்வழியே சேர்ந்தாற் போல இரண்டு ரதங்கள் போக முடியாது; எதிரும் புதிருமாக வரவும் முடியாது.

கலிஞ்சர மன்னன் கனகவர்மன் வடபுறமாக வந்தவன், விசாகசேன மன்னன் தன் பரிவாரங்களுடன் தெற்கிலிருந்து வந்திருப்பதைக் கண்டான். இரு ரதங்களும் அருகில் நெருங்கி வந்தன. கனகவர்மன் வணக்கம் தெரிவித்துக் குசலப்பிரச்னம் விசாரித்தான். பிறகு விசாக சேனனின் பட்டமகிஷியான விசாந்திகலாவைப் பற்றியும் விசாரித்தான். உறவில் அவள் அவனுக்கு மைத்துனி ஆக வேண்டுமல்லவா?

வணக்கத்துக்குப் பதில் வணக்கம் தெரிவித்து விசாகசேனனும் க்ஷேமலாபங்கள் விசாரித்தான். பிறகு தனக்கு மைத்துனியாக வேண்டியவளும், கனகவர்மனின் மனைவியுமான சுபாங்குலதாவின் உடல்நலம்பற்றி விசாரித்தான். அதைத் தொடர்ந்து, ''நண்பா! சற்று உன் ரதத்தை நகர்த்திக் கொண்டால், நான் என் படையுடன் அப்பக்கம் சென்று விடுவேன். அதன் பின் நீயும் உன் படையுடன் போக வேண்டிய இடத்துக்குப் போகலாம்!'' என்றான்.

கனகவர்மன் தலையசைத்துக் கூறினான்: ''அது முடியாது. நான் வயதில் உன்னைக் காட்டிலும் பெரியவன். என் குதிரைகள், ரதங்கள், யானைகள் ஆகியவையும் எண்ணிக்கையில் அதிகம். அதனால் இவ்வழியே முதலில் செல்ல எனக்குத்தான் உரிமை உண்டு. எனவே, நீயே சற்றுப் பின்னால் நகர்ந்து எனக்கு வழி விடு!''

''நண்பனே! இது சிறிதும் நியாயம் இல்லை. நீ வயதில் சிறிது பெரியவன் தான். உன் யானை குதிரை முதலியவைகளும்கூடச் சற்று அதிகமாயிருக்கலாம். ஆனால் எங்கள் விதர்ப்ப ராஜ்யம் செல்வம் கொழிப்பது. விசாலமானது. நான்கு கலிஞ்சர நாடுகளை அது தன்னில் அடக்கிக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தது. அதனால் நீதான் எனக்கு வழி விட வேண்டும்!'' என்றான் விசாகசேனன் பிடிவாதத்தோடு.

வெகு நேரம் வரை இவ்வாறு தர்க்கங்கள் நடந்து கொண்டிருந்தன. கனகவர்மன் நிர்மானமான குரலில், ''விசாக சேனா! உன் எதிர்ப்பைத் தாள முடியாது என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆயினும் இந்த அம்பின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். உன்னை நான் முன்னால் போக விட மாட்டேன். நான் தான் உனக்கு முன்பாகத் தெற்கு நோக்கிச் செல்வேன். வாய் வார்த்தையாக நம் பிரச்னை தீராது என்றால், போருக்குச் சித்தமாகு!'' என்றான். அதோடு தன் வில்லில் நாண் பூட்டி அம்பையும் தொடுத்து விட்டான்.

''நானும் ஆணையிடுகிறேன். உனக்கு முன்னால் நான்தான் போவேன்!'' என்று கூறி விசாகசேனனும், வில்லை வளைத்தான்.

அப்பொழுது அவ்விரு அரசர்களது தோழர்களான கிஹோரட்பட்டரும், விடங்கதேவரும் சேர்ந்தாற்போலக் கைதூக்கி உரத்த குரலில், ''மன்னர்களே! பொறுங்கள், பொறுங்கள்! போன மகாசங்கராந்தியின் பொழுது நீங்கள் இருவரும் நர்மதையில் நீராடி அக்னிசாட்சியாக நட்பில் கட்டுண்டீர்களே! நினைவில்லையா? 'நம் நட்பு எந்நாளும் குறையாது, குறையக் கூடாது, குறைய விடமாட்டோம்!' என்று பிரதிக்ஞை செய்து தலைப்பாகைகூட மாற்றிக் கொண்டீர்களே. மறந்து விட்டீர்களா?'' என்றனர்.

கனகவர்மன் கன்னத்தில் கைவைத்து, ''ஆமாம், அப்படி ஒரு பிரதிக்ஞை செய்ததாகத்தான் நினைவு!'' என்றான்.

''ஆம், எனக்கும் நினைவு வருகிறது. இப்பொழுது என்ன செய்யலாம்? ஒருபுறம் நட்புரிமையைக் காப்பதாக உறுதி பூண்டுள்ளோம். இன்னொருபுறம் முதலில் பயணத்தை முடிப்பதாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறோமே! இரண்டு காரியங்களும் எப்படி ஏக காலத்தில் நடைபெறும்? கனகவர்மா! நீ உனது முக்கிய மந்திரிக்குச் செய்தி அனுப்பித் தருவி. நானும் என் முதல் மந்திரியை வரவழைக்கிறேன். அவர்கள் இருவரும் கலந்து யோசித்து ஒரு முடிவுக்கு வரட்டும். பழைய பிரதிக்ஞையும் காப்பாற்றப்பட வேண்டும், புதிய சபதமும் பங்கப்படக் கூடாது. இப்படி ஒரு யுக்தியைக் கண்டுபிடிக்கட்டும்!'' என்றான் விசாகசேனன்

''அதற்குத் தேவையில்லை. வீணில் காலதாமதமாகும். எனக்கு ஆப்த நண்பராகிய மகாபண்டிதர் விடங்கதேவர் இங்கு இருக்கிறார். என் கல்வி, அறிவு ஆகியவை பற்றியும் அதிகம் சொல்லத் தேவையில்லை. முதல் மந்திரி இல்லாவிட்டால் என்ன, உதவிமந்திரிகளான நாங்கள் இருக்கிறோம். இருவரும் சேர்ந்து பேசி முடித்து ஓர் உபாயம் கண்டு பிடிக்கிறோம்'' என்றார் கிஹோரட்பட்டர்.

''அப்படியே செய்யுங்கள். தாமதமாக்காதீர்கள்!'' என்று இரு அரசர்களும் சேர்ந்தாற்போல் சம்மதம் தெரிவித்தனர்.

கிஹோரட்பட்டரும், விடங்கதேவரும் ரதத்திலிருந்து இறங்கி ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து கொண்டனர். பிறகு ஒரு பாறையில் அமர்ந்து ஆலோசனை செய்யலாயினர். வெகு நேரம் ஆலோசனை செய்த பிறகு, 'நாங்கள் வழி கண்டுபிடித்து விட்டோம்!'' என்றார் கிஹோரட்பட்டர்.

தலையைத் தூக்கி இரு அரசர்களும், ''என்ன வழி கண்டு பிடித்துள்ளீர்கள்?'' என்று கேட்டனர்.

கதேறாட்பட்டர் கூறலுற்றார்: "கனகவர்ம மன்னரே! தங்கள் ராஜதானியிலிருந்து சுரங்கம் தோண்டும் நிபுணர்களைத் தருவியுங்கள். அவர்கள் அகத்தியர்வாசலுக்கு நேரே சுரங்கப் பாதை சமைக்கட்டும். அந்தச்சுரங்க வழியாகத் தாங்கள் தெற்கு நோக்கியும் மேல் வழியாக விதர்ப்ப மன்னர் விசாகசேனரும் ஒரே முகூர்த்தத்தில் கடந்துவிடலாம்!"

"உபாயம் தவறானதல்ல. ஆனால் மலைக்கு அடியில் சுரங்கப் பாதை அமைப்பதென்றால், குறைந்தது ஓராண்டாவது பிடிக்குமே! அவ்வளவு நாட்கள் நாம் என்ன செய்வது? ரதத்திலிருந்து இறங்காமலே பயணத்தைத் தொடரக்கூடிய ஒரு வழியைக் கண்டு பிடியுங்கள்!" என்றான் விசாகசேனன்.

"இறங்குவானேன்? ரதத்திலேயே ஓராண்டைக்கடத்திவிடுங்களேன்! குளியல், உணவு, ஆட்டம், பாட்டம், தூக்கம் எல்லாவற்றையும் ரதத்திலேயே வைத்துக் கொண்டால் போயிற்று. தலைநகரத்துக்கு ஆள் அனுப்பி நடன மாதர்களையும் வரவழைத்து விட்டால், பொழுது போக்காகவும் இருக்கும்!" என்றார் கதேறாட்பட்டர்.

"சுரங்கம், இரங்கம் எல்லாம் கூடாது. விசாக சேனன் மேல் வழியாகப் போவது, நான் எலிபோலக் கீழ் வழியாகப் போவதா? நடக்கவே நடக்காத காரியம்!" என்று மறுத்து விட்டான் மன்னன் கனகவர்மன்.

"கனகவர்ம மன்னரே! வேறு ஒரு வழி இருக்கிறது. தாங்கள் குபேரனைத் தவம்செய்து வேண்டி அவரது புஷ்பக விமானத்தைச் சிறிது நேரத்துக்குப் பெறுங்கள். அவ்விமானத்தில் ஏறித் தாங்கள் வான வெளி வழியாகத் தென்புறம் செல்லுங்கள், விதர்ப்ப மன்னர் இவ்வாயில் வழியாக வடக்கு நோக்கிச் செல்லட்டும்!" என்றார் விடங்க தேவர்.

"கனகவர்மன் என் தலைக்கு மேலாகப் பறந்து போவதா? அது முடியாது. நீங்கள் இருவரும் மூடர்கள். உங்களால் ஒரு வழியும் கண்டு பிடித்துக் கூறமுடியாது! கூறவும் வராது!" என்றான் விசாகசேனன்.

"மன்னர் மன்னவா! சற்றுப் பொறுமையைக் கைக்கொள்ளுங்கள். நாங்கள் இன்னுமொரு முறை யோசித்துப் பார்க்கிறோம்!" என்றார் விடங்கதேவர்.

இரு அரச நண்பர்களும் மீண்டும் ஆலோசனை செய்ய உட்கார்ந்தனர். இரு மன்னர்களும் பொறுமையிழந்து, கையிலிருந்த வில்லை ரதத்தில் தட்டி ஓசைப் படுத்திக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்துக்குப் பின் "மன்னர்களே! இம்முறை நாங்கள் மிகச் சிறிய, விசித்திரமானதொரு நல்ல வழியைக் கண்டு பிடித்திருக்கிறோம்!" என்றார் கதேறாட்பட்டர்.

"சொல்லுங்கள், சொல்லுங்கள்!" என்றான் மன்னன் கனகவர்மன் மிகுந்த ஆவலோடு.

"முதலில் தங்கள் இருவருடைய ரதங்களின் குதிரைகளையும் அவிழ்த்து விடவேண்டும். அப்படிச் செய்தால் இந்தக் குறுகிய பாதையில் ரதங்கள் சுலபமாகத் திரும்பி விடக் கூடும். திருப்பிய பின் மீண்டும் குதிரைகளைப் பூட்டி விட வேண்டும். அப்பொழுது இரு ரதங்களின் முன்புறமும் எதிர்த் திசையை நோக்கி நிற்கும்!" என்றார் கதேறாட்பட்டர். விசாகசேனன் கொதித்துக் கோபமுற்று,

''எங்கள் இருவரையும் பேசாமல் வந்தவழியே திரும்பிப் போங்கள் என்று தானே சொல்ல விரும்புகிறீர்கள்!'' என்றான்.

''இல்லை! மன்னர் மன்னவா! திரும்பு வானேன்? ரதம் திரும்பியதும் அப்படியே கனகவர்மர் நடந்து விதர்ப்ப மன்னர் ரதத் துக்கு வந்து விடட்டும். விதர்ப்ப மன்னர் கலிஞ்சர மன்னரின் ரதத்துக்குத் தாவி விடட் டும் என்றுதான் சொல்கிறோம்!''

இரு மன்னர்களும் ''அப்புறம்? அப்புறம்?'' என்று ஆவா உந்தக் கேட்டனர்.

''இப்படி ரதங்களை மாற்றிக் கொண்டதும் நீங்கள் இருவரும் ஒரே நேரத்தில் எதிர்த் திசையை நோக்கி, அதாவது நீங்கள் போக விரும்பிய திசைக்குப் பயணமாகுங்கள்!''

''அது சரி! ஆனால் எங்கள் நால்வகைப் படைகள் என்ன ஆவது?'' என்று கேட்டான் கனகவர்மன்.

''அவையும் மாறி விடும். தங்களுக்கு முன் னால் விதர்ப்ப நாட்டுப் படைகளும் விதர்ப்ப மன்னருக்கு முன்னால் கலிஞ்சர நாட்டுப் படை களும் போகும். படைகளின் முகத்தைத் திருப்ப எத்தனை நேரமாகும்?''

''நண்பா! சம்மதம் தானா?'' என்று கேட்டான் கனகவர்மன்.

''என் படை உன் படையாகி விடும். இதில் எனக்கு எவ்விதத் தடையும் இல்லை. ஆனால் பொழுது போய்க் கொண்டிருக்கிறதே! நாம் எப்பொழுது வேட்டை ஆடுவது?'' என்றான் விசாகசேனன்.

''இன்று வேட்டையாட வேண்டாமே! உங்கள் சபதம், மானம் இரண்டும் இன்று காக்கப்பட்டு விட்டன. வேட்டையை வேறு ஒரு நாள் வைத்துக்கொண்டால் போயிற்று!'' என்றார் கஹோட்டபட்டர்.

''வேட்டையாடுவதை இன்னொரு நாள் வைத்துக்கொள்வதென்றால் வீடு திரும்புவது எப்பொழுது?'' என்று கேட்டான் விசாக சேனன்.

''வீடு திரும்புவானேன்? திரும்பாமலிருக்க வும் ஒரு வழி சொல்லுகிறோம். நீங்கள் உங்கள் அரசாங்கத்தையும் பரிவர்த்தனை செய்து கொண்டு விடுங்கள். கனகவர்மர் விதர்ப்ப நாட்டுப் படைகளுடன் பயணத்தைத் தொடர்ந்து விதர்ப்ப ராஜ்யத்தை அடை யட்டும். விசாகசேன மன்னர் கலிஞ்சர நாட்டுக்குச் சென்று அரியாசனம் ஏறி ஆட்சி செலுத்தட்டும்'' என்றார் கஹோட்டபட்டர்.

சிறிது நேரம் பேசாமல் இருந்த கனக வர்மன், ''மிகச் சிக்கலான பிரச்சினையாக இருக் கிறதே! எங்கள் மூதாதையரது ஆட்சி கை மாறுவது என்பது மிகத் தவறான காரியமா யிற்றே!'' என்றான்.

''மன்னா! க்ஷத்திரிய அரசர்களின் முக்கிய மான கடமை என்ன? பிரதிக்ஞை, சபதம், தன்மானம் ஆகியவற்றைக் காப்பதுதானே? அதற்காக உயிரையும் ராஜ்யத்தையும் துறக்க வேண்டி வந்தால் கூட, பொருட்படுத்த லாமா? நாங்கள் சொல்லும் ஏற்பாட்டின் படி உங்கள் அரசாங்கமோ உயிரோ நசிக் காது. ஒரு ராஜ்யத்துக்குப் பதிலாக வேறு ராஜ்யம் கிடைக்கும். இதில் என்ன தவறு?'' என்றார் கஹோட்டபட்டர்.

''இப்பொழுது விளங்கிக் கொண்டேன், விஷயத்தை! நண்பா! உனக்குச் சம்மதமா?'' என்று கேட்டான் கனகவர்மன்.

''வேறு வழி தோன்றவில்லையே! இவர் களது சொற்படியேதான் செய்து விடு வோமே!'' என்று விசாகசேனன் தன் சம்மதத்தைத் தெரிவித்தான்.

அந்தக்காலத்து ரதங்கள் இந்தக் காலத்து சைக்கிள் ரிக்ஷாவைப் போலிருந்தன. இரண்டு ஆசனங்கள் உள்ளவை. இலே சானவை. அதிக இடத்தை அடைத்துக் கொள்ளாதவை. இரு மன்னர்களின் உத்தர வுப் பிரகாரம் குதிரைகள் அவிழ்க்கப்பட்டன. பிறகு லகுவாக ரதங்கள் திருப்பி நிறுத்தப் பட்டன. அதற்குப் பிறகு அவற்றின் மீது முன் சொன்ன ஏற்பாட்டின்படியே மன் னர்கள் அமர்ந்து கொண்டார்கள். இரு அரசர்களின் தோழர்களும் தங்கள் தங்கள் எசமானர்களுக்குப் பின் சௌகர்யமாக உட் கார்ந்து கொண்டனர்.

அதற்குப் பின் கனகவர்மன் தன் படையினை ரைத் திரும்பிப் பார்த்து, ''கலிஞ்சர நாட்டு வீரர்களே! திரும்புங்கள்! இனி நீங்கள் மகா ராஜா விசாகசேனருக்குக் கீழ்ப்பட்டவர்கள். அவர் உங்களுடன் கலிஞ்சர நாட்டுக்கு வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்பார். நானும் விதர்ப்ப நாட்டுப் படையினருடன் விதர்ப்ப நாட்டுக்குச் சென்று அந்த நாட்டு அரசாட் சியை மேற்கொள்ளுவேன்!'' என்றான்.

விசாகசேனனும் இதே மாதிரி உத்தரவு பிறப்பித்தான் தன் படையினருக்கு. அதற் குப் பின் இரு மன்னர்களும் தம் படை களுக்குப் 'போகலாம்' என்று உத்தரவிட்ட னர். விதர்ப்ப நாட்டுப் படை விதர்ப்ப நாட்டை நோக்கிப் புறப்பட்டது. கனகவர் மனின் ரதம் அதைப் பின்தொடர்ந்தது. கலிஞ்சரப் படை கலிஞ்சர நாட்டை நோக்கிச் சென்றது. விசாகசேனனின் ரதம் அதனைப் பின்தொடர்ந்து சென்றது.

போகும்பொழுது கனகவர்மன் தன் தோழ ரிடம், ''அரசாங்கத்தை மாற்றிக் கொண்ட தால், விசாகசேனனுக்கு லாபமும் எனக்கு நஷ்டமும் அல்லவா ஏற்படும் போலிருக்கிறது? என் ராணி அவன் ராணியைக் காட்டிலும் அதிக அழகியாயிற்றே!'' என்றான்.

''என்ன மகாராஜா இப்படிச் சொல்லு கிறீர்கள்! இக்கரைக்கு அக்கரை பச்சை என் பதுதானே தொன்று தொட்ட நாட்களா யிருந்து வரும் பழமொழி. பொதுவாக மக்கள் பிற மாதர்களைத்தானே அழகிகளாக மதிக்கிறார்கள்? என்னைக் கேட்டால் எந்த விதத்திலும் உங்களுக்கு நஷ்டமில்லை என் பேன்!'' என்றார் கஹோட்டபட்டர்.

கனகவர்மன் விதர்ப்ப நாட்டை அடைந்த போது நன்றாகப் பொழுது சாய்ந்து விட்டது. அவன் உத்தரவுப்படி சில குதிரை வீரர்கள் முன்னதாகவே தலைநகரத்தை அடைந்து 'ராஜ்யம் மாறிவிட்டது. புது மன்னர் வரு கிறார்' என்னும் தகவலைத் தெரிவித்தனர்.

ஆனால் கனகவர்மனை வரவேற்க எவ்வித முன்னேற்பாடும் செய்யப்படவில்லை. தோரணங் காரங்கள் செய்யப்படவில்லை. வாத்தியங்கள் முழங்கவில்லை. மக்கள் வரவேற்று வெற்றி ஆரவாரம் செய்யவில்லை. யாரும் பூமாரியும் பொழியவில்லை. அவன் மகிழ்ச்சியற்ற மனத்

தோடு அரண்மனைக்குச் சென்று ரதத்தி லிருந்து இறங்கினான். பணியாட்கள் மௌனமாக வணக்கம் தெரிவித்து அவரை விடுதிக்கு அழைத்துச் சென்றனர். கஹோறாட் பட்டரும் கூடவே சென்றார்.

விதர்ப்ப நாட்டுப் பட்டத்தரசி விசாந்தி கலா கம்பீரமாக முகத்தை வைத்துக்கொண்டு அரியாசனத்தில் வீற்றிருந்தாள். அவளுக்கு வணக்கம் தெரிவித்து விட்டு, ''மகாராணி யார் சௌக்கியந்தானே?'' என்று கேட்டான் கனகவர்மன். தொடர்ந்து ''இனி நான்தான் விதர்ப்ப நாட்டு அரசன். பட்டாபிஷேக ஏற் பாடுகள் நாளை நடைபெறும். நானும் எனது தோழரும் மிகவும் களைத்திருக்கிறோம். பசியும் அகோரமாக இருக்கிறது. எனவே, நாளை மகாராணியாருடன் சாவகாசமாகப் பேசு வோம். இன்று எங்களுக்குக் களைப்பாறும் இடத்தைக் காண்பித்துச் சீக்கிரமே உணவுக் கான ஏற்பாடுகளைச்செய்தல் நலம்!''என்றான்.

ஆயுதம் தாங்கிய வீரன் ஒருவனை அழைத் துப் பட்டத்து ராணி விசாந்திகலா கூறினாள்: ''காவலரே! அறியாப் பிள்ளையாகத் தோன் றும் இந்தத் துஷ்ட மன்னனையும் அவன் தோழனையும் பிடித்துச் சிறையில் தள்ளு. இவர்கள் படுத்துறங்க உரிமட்டை நார் மெத்தையும், உணவருந்தவும் தாகம் தீர்க்க வும் எட்டிப்பழ அல்வாவும் ஒரு கொட்டாங் குச்சி புளித்த கழுநீரும் கொடு!'' என்று உத்தரவிட்டாள்.

கஹோறாட்பட்டர் கைகூப்பி, ''இதென்ன ராணி அம்மா! எங்கள் மன்னர் கனகவர்மர் தங்கள் சகோதரி புருஷர் அல்லவா? அதோடு இப்பொழுது விதர்ப்ப நாட்டு மன்னராக வந்திருக்கிறார். விதர்ப்பநாட்டு அதிபதி தங்க ளுக்கு என்ன உறவாக வேண்டும் என்பதை யோசித்துப் பாருங்கள். இவருக்கு எட்டிப்பழ அல்வா தருவதாகக் கூறுகிறீர்களே! நன்றா யிருக்கிறதா?இவர் பஞ்சபட்ச பரமான்னங்கள் அருந்திப் பழகியவராயிற்றே!'' என்றார்.

''எங்கள் உபசாரத்தில் ஒரு குறையும் வராது. ஆயுள் முழுதும் நினைத்துக் கொண் டிருக்கும்படியே உபசாரம் செய்வோம், கவலைப்படாதீர்கள்!'' என்று கூறிக் காவலருக் குச் சமிக்ஞை செய்தாள் ராணி.

கனகவர்மன் பதில் பேசாமல் சிறைச் சாலைக்குச் சென்று வாடிய உடலும் வருந்திய மனமுமாக இரவுப் பொழுதைக் கழித்தான். மறுநாள் காலை எழுந்ததும், ''படித்த முட்டாளான கஹோறாட் பட்டரே! உமது யோசனையின் காரணமாகத் தான் என் நிலை இப்படி மோசமாகிவிட்டது. இப்பொழுது இந்த எதிரி நாட்டிலிருந்து எப்படி வெளி யேறுவது?'' என்று கேட்டான்.

''மன்னவா! கவலைப்படாதீர்கள். இரவு முழுதும் விழித்திருந்து நான் ஓர் உபாயம் கண்டு பிடித்திருக்கிறேன்!'' என்றார் கஹோறாட் பட்டர்.

நீண்ட பெருமூச்சு விட்டுக் கனகவர்மன் கூறுவான் 'உம் மீது எனக்கு இம்மிகூட நம்பிக்கை இல்லை. விசாகசேனன் எப்படி யிருக்கிறானோ. யார் கண்டார்கள்? அவன் நம் கலிஞ்சர நாட்டில் வெகு சுகமாக இருப் பான் என்றே எண்ணுகிறேன்!'' என்றான்.

''அப்படி எண்ணி விடாதீர்கள். நம் மகா ராணியைத் தப்பாக எடை போடாதீர்கள். அவரும் இவருக்கு எந்தவிதத்திலும் சளைத்தவ ராயிருக்க மாட்டார்'' என்றார் கஹோறாட் பட்டர்.

இதே நேரத்தில் வாயிற்காப்போன் வந்து, ''தாங்கள் காலைக் கடன்களை முடித்துக் கொள்ள மதில் சூழ்ந்த நந்தவனத்துக்குப் போகலாம்!'' என்றான்.

''காவல்காரரே! நாங்கள் ஒரு முறை ராணி யம்மாவைப் பார்க்க விரும்புகிறோம். அதற்கு நீர் வகை செய்தால் எங்கள் மன்னர் உம்மைத் தக்கபடி கவனித்து மகிழ்ச்சிக் கடலாட்டி விடுவார்!'' என்றார் கஹோறாட் பட்டர்.

''என்னோடு வாருங்கள்!'' என்று அழைத் தான் வாயிற்காவலன்.

விசாந்திகலாவின் அருகில் சென்றதும் கை கட்டி வாய் புதைத்து மிகுந்த வணக்கத் துடன் கஹோறாட்பட்டர் கூறலுற்றார் ''மகா ராணி!—போதும், போதும், பட முடியாது இனித் துயரம். எங்களை விட்டு விடுங்கள். போனதும் விதர்ப்ப மன்னர் விசாக சேனரை இங்கு அனுப்பி வைக்கிறோம்.''

''முதலில் அவர் வரட்டும். அப்புறம் உங்களை விடுவிப்பது பற்றி யோசிக்கலாம்!'' என்று தீர்மானமாகக் கூறி விட்டாள் மகா ராணி விசாந்திகலா.

''அப்படியானால் எனக்கு மட்டுமாவது விடுதலையளியுங்கள். நான் கலிஞ்சர நாட்டுக் குச் சென்று மன்னர்கள் மாற்றத்துக்கான வழிவகைகளைச் செய்கிறேன்!'' என்றார் கஹோறாட் பட்டர்.

"சரி உன்னை மட்டும் விடுவிக்கிறேன். போவதற்கு ஒரு ரதமும் தருகிறேன். ஏழு நாட்களுக்குள் நீ திரும்பா விட்டால் உன் மன்னரைக் கழுவில் ஏற்றி விடுவேன்" என்றாள் ராணி.

கஹோட் பட்டர் ரதமேறிப் பயணமானார். இதே சமயம் வழியில் விசாகசேனனுடைய தோழரும் தூதருமான விடங்கதேவரும் விதர்ப்ப நாட்டை நோக்கி வந்து கொண்டிருந்தார். நடுவழியில் இரு நண்பர்களும் சந்தித்தார்கள்; க்ஷேமலாபங்கள் விசாரித்த பின் இருவரும் வெகு நேரம் கலந்து ஆலோசித்தார்கள். பின்னர் இருவரும் வந்த வழியே வந்த இடத்துக்கே திரும்பினார்கள்.

விதர்ப்ப நாட்டு அரசியான விசாந்திகலாவிடம் கஹோட் பட்டர் கூறினார்: "மகாராணி: நான் என் அன்புக்கன்பான தோழர் விடங்கதேவரோடு கலந்து ஆலோசித்து ஓர் ஏற்பாடு செய்திருக்கிறேன். நாளைவிடியட்டும். காலை விசாகசேன மன்னர் கலிஞ்சர நாட்டிலிருந்து விதர்ப்பநாட்டுக்கும், இங்கிருந்து மன்னர் கனகவர்மர் கலிஞ்சர நாட்டுக்கும் பயணம் தொடங்குவார்கள். தங்களுக்குத் தோன்றியபடி குறைவாகவோ அதிகமாகவோ எங்களோடு படை அனுப்புங்கள். அகத்தியர் வாசலுக்குச் சென்று நாங்கள் விசாகசேனரை இங்கு அனுப்புவோம். முடியா விட்டால் நாங்களே திரும்பி விடுவோம்!"

"திரும்பியதும் உன்னைக் கழுவில் ஏற்றி விடுவேன் சம்மதமா. சொல்லு நாளைக் காலையிலேயே போகலாம் நீ!" என்றாள் மகாராணி விசாந்திகலா.



திருமதி · திரு C. K. புருஷோத்தம நாயக்கர் (பார்ட்னர் C. K. புருஷோத்தம நாயக்கர் & கம்பெனி,பனா பிரிக்ஷர்ஸ்)தங்கள் குமாரன் சிரஞ்சீவி K. 6. புருஷோத்தமனுக்கும் செள. கஸ்தூரி தேவிக்கும் 11-6-62ல் நடந்த திருமணத்துக்கு நேரில் விஜயம் செய்து சிறப்பித்த பந்துமித்திரர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்

மறுநாள் விடியற்காலை படையுடன் கனகவர்மனும் கஹோட் பட்டரும் ரதமேறிப் புறப்பட்டு விட்டார்கள். ஓராயிரம் குதிரைப் படையினர் அவர்களுடன் சென்றனர். அகத்தியர் வாசலில் தெற்குத் திக்கிலிருந்து வந்த விசாகசேனனும், விடங்க தேவரும் இவர்களைச் சந்தித்தார்கள். மகிழ்ச்சி நிறைந்த முகத்துடன் விசாகசேனன் கனகவர்மனைப் பார்த்து "நண்பா! எங்கள் விதர்ப்ப நாட்டில் சந்தோஷமாக இருந்தாயா? ஏன் என்னவோ போலக் காணப்படுகிறாய்? உங்களுக்குப் பணிவிடை செய்வதில் யாரும் எதுவும் குறை வைக்கவில்லையே!" என்று கேட்டான்.

"எவ்விதக்குறைவும் யாரும் வைக்கவில்லை; உன் ராணி விசாந்திகலா எத்தனை ரசிக உள்ளம் படைத்தவளோ, அத்தனை நற்குணங்களும் வாய்க்கப் பெற்றவள். ஆனால் நீ ஏன் காற்றை உணவாகக் கொண்ட தவசியைப் போலக் காணப்படுகிறாய் எங்கள் கலிஞ்சர தேசம் உனக்கு உகந்த மரியாதை செலுத்தியதா இல்லையா?" என்று கேட்டான் கனகவர்மன்.

அட்டகாசச் சிரிப்புச் சிரித்து விசாகசேனன் பதில் சொன்னான் "நண்பா! அவசரப்படாதே: எங்களுக்குச் செய்த உபசாரத்தில் குறை ஏதும் கிடையாது. உனது பட்டமகிஷி கபங்குலதாவும் குணத்திலும் ரசனையிலும் என் மனைவி விசாந்திகலாவுக்குச் சிறிதும் தாழ்ந்தவள் அல்ல. அவள் எங்களுக்கு என்ன என்னவோ விசித்திரமான விருந்து வகைகள் அளித்தாள். எங்களைப் புறப்பட்டுப் போகவே விடவில்லை. ஆனால் நாங்கள்தான்... அது போகட்டும். இப்பொழுதும் நீயும் நானும் அகத்தியர் வாசலில் எதிரும் புதிருமாக இருக்கிறோமே! யார் முன்னால் போவது?"

கஹோட் பட்டரும், விடங்க தேவரும் ஏகோபித்த குரலில் "மன்னிக்கணும், மகாராஜா! மன்னிக்கணும். திரும்பவும் விவாதம் செய்ய இறங்கி விடாதீர்கள். உங்கள் பயணத்துக்கு நாங்கள் வழி வகை செய்து வருகிறோம்" என்று கூறியவர்கள் மேலும் பொறுக்காமல், "ஏ தேரோட்டிகளே! முன்போலவே ரதத்தைத் திருப்புங்கள்!" என்றனர்.

'ஆகிவிட்டதா? சரி, கனகவர்ம மன்னரே! நீங்கள் இந்த ரதத்திலும், மகாராஜா விசாகசேனர் அந்த ரதத்திலும் மாறி உட்காருங்கள். மகாமுனி அகத்தியருடைய பிரசாதத்தினாலும் கஹோட் – விடங்கர்களுடைய அறிவு வன்மையினாலும் நீங்கள் இருவரும் பெருத்த சங்கடத்திலிருந்து தப்பிப் பிழைத்தீர்கள். உங்களுடைய பிரதிக்ஞை, சபதம், மரியாதை ராஜ்யம், உயிர், மனைவி எல்லாமே காப்பாற்றப்பட்டு விட்டன; தன் மானமும் பிழைத்தது. இனியும் நேரமாக்காமல் இருவரும் ஏககாலத்தில் ரதத்தை ஓட்டச் சொல்லி, உங்கள் சுப யாத்திரையைத் தொடங்குங்கள்!" என்றும் கூறினர்.

'தப்பினோம் பிழைத்தோம்' என்று இரு மன்னரும் அகத்தியர் வாயிலிருந்து தங்கள் தங்கள் நாட்டை நோக்கி ஓடினார்கள். அவர்கள் விட்ட பெருமூச்சு அவர்கள் பெற்ற ஆனந்தத்தைத் தெளிய விளங்க வைப்பதாய் அமைந்தது. தமிழாக்கம்: ரா. வீ.

அத்தை மகளின் பீஸ் பணம் நூறு ரூபாயுடன் டாக்ஸியில் எழும்பூரை அடைந்தான் பஞ்சு...




இடம் தேடி ஓடும் பஞ்சுவின் தோளை ஒரு கை பற்றுகிறது. நண்பன் ஆறுமுகம் தான்!

டேய், பஞ்சம்! எங்கேடா? மாமியார் வீட்டுக்கா?

அப்பா, ஆறுதலே! எனக்கு நீதான் இப்போ ஆறுதல் சொல்லவேணும்.

பஞ்சு தன் நிலையை அவனிடம் விளக்க...




ஆறுமுகத்தோடு கிளம்பி நெல்லிக்குப்பம் வருகிறான் பஞ்சு. அங்கு தாலியும் வேலியும் நாடக ஆரம்பதினத்தன்று.




பையனே நாடகத்தின் உயிர் என்று ஆறுமுகம் வாதாடும் நேரத்தில்...







பஞ்சு விஷயத்தை விளக்கவே பணம் கைமாறியது. பையன் பஞ்சுவின் கைக்கு மாறினான்.


வா, நீயும் வந்து நாடகம் பாரு.


ஆறுமுகம். இதோ பையன்.
என்ன சார், நீங்க! இவனையெல்லாமா நாடகத்திலே நடிப்பான்?
நடிக்க வேண்டியதில்லை. இதோ அழுதுக்கிட்டிருக்கு இந்த மாதிரி மேடையிலும் அழுதால் போதும்.


ராஜத்துரோகி! சூதும் சூழ்ச்சியுமே உன் இரு கண்களா? என்னைக் கொன்றாலும் உன் ஆசைக்கு இணங்கமாட்டேன்.
உன்னைக் கொல்லாமலே இணங்க வைக்கிறேன், பார், வீரர்களே! இவள் பெற்ற செல்வக் குமாரனின் கண்களைச் சுட்டுப் பொசுக்குங்கள்... ஹ...ஹ...ஹா!


ஐயோ என் பிள்ளையைக் குருடாக்காதீங்க...
சீ, நாயே! விலகிப்போ, உன்னாலே என் முட்டை கெட்டுது.


அமைதி...அமைதி!
விடாதே...
உதை...
முத்து...
அடி...!


ஹா — நெருப்பு நெருப்பு — ஓடுங்கள் —

(தொடரும்)




உங்கள் சரும நிறத்தோடு நேர்த்தியாக இணைந்து, சருமத்தின் இயற்கை எழிலைப் பளிச்சிடச் செய்கிறது பரிபூரணமான லக்மே முகப் பவுடர். அதன்மூலம் மேனி எழில் பெறும் மாசற்ற மெருகினை நீங்கள் விரும்புவீர்கள். 3 சைஸ்கள் ... மேனி நிறத்துக்குப் பொருத்தமான நேசுரல், ரசேல், கோல்டன்பீச், ரோஸ்கோரல், ஸன் டான், க்ளோவிங் அம்பர் என்னும் 6 வித நிறங்களில் கிடைக்கிறது.

# லக்மே

முகப் பவுடர்

# உலகம் போற்றும் ஒரு தமிழர்

டி. எஸ். ராஜகோபாலன்

தமிழ் நாட்டில் தோன்றி உலகப் பிரசித்திபெற்ற மேதைகள் அநேகமாக எல்லா முக்கியமான துறைகளிலும் இருக்கிறார்கள். அவர்களில் மிக அண்மைக் காலம் வரை அதிகமான ஆதரவோ, கௌரவமோ பெறாதிருந்த துறைகளில் ஒன்றாகிய நூலக இயலில் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒரு பேரறிஞர் செய்த எண்ணற்ற சேவைகள் இன்று உலகம் முழுதும் பரவிப் போற்றப்படுகிறதென்றால் அது பலருக்குப் புதிதாக இருக்கும்.

சீர்காழி டாக்டர் ராமாமிருத ரங்கநாதன் சுமார் நாற்பது ஆண்டுகள் நூலக இயல் துறைக்குப் பணி புரிந்தார். சாதாரணக் குடும்பத்தில் பிறந்த அவர் தம் சொந்த முயற்சியாலேயே கணித சாஸ்திரத்தில் எம். ஏ. பட்டம் பெற்று ஆசிரியர்களுக்கான பயிற்சியும் பெற்றார். வடமொழியையும் நன்கு கற்று வித்பன்னரானார். சுமார் ஏழு வருட காலம் கல்லூரிகளில் கணித ஆசிரியராக இருந்து 1924-ம் ஆண்டு நூலகத் துறையில் பணி செய்யப் புகுந்தார். அந்த ஆண்டில் சென்னை பல்கலைக் கழகம் இவரை அதனுடைய நூலகத் தலைவராகத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி பெறுவதற்காக இங்கிலாந்துக்கு அனுப்பியது. லண்டன் பல்கலைக் கழகத்தில் பெரிவிக் சேயர்ஸ் போன்ற பிரசித்தி பெற்ற பேராசிரியர்களிடம் நூலக இயலைக் கற்றார் ஸ்ரீ ரங்கநாதன். இவரது நுண்ணறிவும், ஆர்வமும் இவருடைய நூலக இயலறிவை அமோகமாகப் பெருக்கின. டாக்டர் ரங்கநாதன் இங்கிலாந்திலுள்ள முக்கியமான எல்லா நூலகங்களுக்கும் நேரில் சென்று, அவை நடத்தப்படும் முறையை நேரில் கண்டறிந்தார்.



எஸ். ஆர். ரங்காதன்

தாயகம் திரும்பியபின் டாக்டர் ரங்கநாதன் சென்னை பல்கலைக் கழகத்தில் தம்முடைய வேலையைத் தீவிரமாகத் தொடங்கினார். சென்னை பல்கலைக் கழக நூலகத் தலைவராக 1944-ம் ஆண்டு வரை இவர் இருந்தார். இந்த ஆண்டுகளே இவருடைய வாழ்க்கையிலும், அந்த நூலகத்தின் சரித்திரத்திலும் சிறந்த பகுதியாகும். நூலகத்தை உயர்ந்த முறையில் நடத்துவதற்கு இவருக்கு எல்லாவிதமான வசதிகளையும் பொறுப்பையும் பல்கலைக் கழக நிர்வாகத்தினர் கொடுத்தனர். டாக்டர் ரங்கநாதனும் பல முன்னேற்றங்களைப் புகுத்தினார். நூலகத்துக்கு ஒதுக்கப்பட்ட நிதி வசதி பன்மடங்காகப் பெருகியது. இதனால் தேவைப்பட்ட புத்தகங்களெல்லாம் வாங்க ஏதுவாயிருந்தது. பல வருடங்களாகக் கட்டாமலிருந்த நூலகக் கட்டடம் 1934-ம் ஆண்டில் இவரது பதவிக் காலத்தில் பூர்த்தியாயிற்று. இந்தக் கட்டடத்தின் உள் அமைப்பு நூலக அலுவல்களுக்கேற்ற முறையில் நிர்மாணிக்கப்பட்டது. இங்குள்ள மரச் சாமான்களும் நூலகத்துக்குத் தேவையான இதர சாமான்களும் இவராலேயே திட்டமிடப்பட்டுத் தயாரிக்கப்பட்டன. இவையெல்லாம் பிற்காலத்தில் நூலகங்கள் பின்பற்றுவதற்கு வழியாக இருந்தன.

அந்தக் காலங்களில் புத்தகங்கள் இருக்கும் அறைகளுக்குள் வாசகர்கள் செல்ல இயலாது. நூலக ஆசிரியர்களின் உதவியால்தான் தேவையான புத்தகங்களைப் பெற முடியும். நூலகத்தில் வாசகர்கள் தாமே சென்று புத்தகங்களைப் பொறுக்கிக் கொள்ளும் முறையை டாக்டர் ரங்கநாதன் சென்னை பல்கலைக் கழக நூலகத்தில் 1926-ம் ஆண்டிலேயே புகுத்தினார். இந்த முறையால் புத்தகங்கள் கெட்டுப் போய் விடுமென்ற பீதி முதலில் ஏற்பட்டாலும் வாசகர்களுக்கு அதிக சௌகரியங்கள் ஏற்பட்டதால் நிர்வாகத்தினர் இதை ஏற்றுக்கொண்டுவிட்டார்கள். மாகாணத்தில் எந்தப் பகுதியில் உள்ள மாணவனும் இந்த நூலகத்திலிருந்து புத்தகங்களைப் பெறுவதற்கான வசதியைச் செய்தார் ஸ்ரீ ரங்கநாதன். வாசகர்களின் வீடுகளிலேயே புத்தகங்களைக் கொடுத்து வருவதற்கான வசதிகளையும் இவர் செய்தார். இந்த மாறுதல்களால் நூலகத்தின் உபயோகம் பன்மடங்காகப் பெருகியது. சென்னை பல்கலைக் கழக நூலகம் மற்ற நூலகங்களுக்கெல்லாம் எடுத்துக் காட்டாக ஆயிற்று. இப்பல்கலைக் கழகத்தில் 1933-ம் ஆண்டு நூலக இயலில் இவர் தலைமையில் கல்விப் பயிற்சியும் தொடங்கியது. நம் நாட்டில் முதன் முதலில் நூலக இயலில் கல்வி கற்க வசதி ஏற்பட்டது சென்னை பல்கலைக் கழகத்திலேயே யாகும்.

1933-ம் ஆண்டு இவர் அமைத்த 'கோலன் வகுப்பு முறை' நூலகத் துறையில் இவருக்கு நிரந்தரமான பெயரைத் தேடிக் கொடுத்து விட்டது. இதனால்தான் இவர் உலகப் பிரசித்தி பெற்றார். அப்பொழுது அமெரிக்காவில் 'மெல்வில் டேவி' என்ற நூலக அறிவியலாளரால் ஏற்படுத்தப்பட்ட 'தசாம்சப் புள்ளி வகுப்பு முறை'யையே பெருவாரியான நூலகங்கள் பின்பற்றி வந்தன. இந்த முறையும் அப்பொழுதுள்ள ஏனைய வகுப்பு முறைகளும் புத்தகங்களின் உட்பொருள்களை முன்கூட்டியே பாகுபாடு செய்து வரிசை எண்களைத் தந்திருந்தன. 'மனிதனுடைய அறிவு அளவு கடந்தது. எனவே அதை முன் கூட்டியே அறிந்து வரிசைக்கிரமப்படுத்தி அதற்கேற்ப வகுப்பு வரிசைப் பட்டியல் தயாரிப்பது சரியாகாது' என்று இவர் கருதினார். எனவே தன்னைத் தானே வளர்த்துக் கொண்டு



''இந்த வீட்டு மாமிக்கு எப்பவும் வடை வைப்பதற்கு வேறு பாத்திரம் கிடைக்காது போலிருக்கு!''

---

நிலைத்து நிற்கக் கூடிய விஞ்ஞான ரீதியான 'கோலன் வகுப்பு முறையை' அமைத்தார். இந்த முறையில், நூல்களில் அடங்கிய உட்கருத்துக் கேற்றபடி அவ்வப்போது வகுப்பு முறை வரிசை எண்கள் தயாரிக்கப்பட வேண்டும். முதலில் இவருடைய இந்த முறை புரட்சிகரமாகத் தென்பட்டாலும் நாளடைவில் அதில் அடங்கிய அடிப்படையான கருத்துக்களை எல்லோரும் ஒப்புக் கொள்ளத் தொடங்கினர். உலகின் பல பாகங்களிலும் இப்போது இவருடைய நூலகக் கொள்கை பின்பற்றப்படுவது நமக்குப் பெருமை தரும் விஷயமாகும். வேறு சில சீர்திருத்தங்களும் இவர் செய்துள்ளார்.

நூலக இயல் குறித்து இதுவரை டாக்டர் அவர்கள் ஏறத்தாழ ஐம்பது புத்தகங்களும், எழுநூற்றுக்கு மேற்பட்ட கட்டுரைகளும் எழுதியுள்ளார். நம் நாட்டில் இப்போது பிரசுரமாகி வரும் 'நூலக இயல் வரலாறு' என்ற பத்திரிகையைத் தோற்றுவித்து அதன் ஆசிரியராகவும் இருக்கிறார்.

1945-46-ம் ஆண்டில் இவர் காசி பல்கலைக் கழகத்தின் நூலக முதல்வராகவும் நூலக இயலின் பேராசிரியராகவும் பணியாற்றினார். அதன்பின் 1954-ம் ஆண்டு வரை தில்லி பல்கலைக் கழகத்தில் நூலக இயல் பேராசிரியராக இருந்தார். தில்லியில் இவர் இருக்கும்போது இவரது ஆராய்ச்சி வேலை மிகத் தீவிரம் அடைந்தது எனலாம். நூற்றுக் கணக்கான மாணவர்கள் இவருடைய ஆராய்ச்சியில் ஈடுபட்டார்கள். எவ்வித உத்தியோகப் பொறுப்பும் இல்லாமல் இந்தத் துறையில் தம்முடைய வேலையைத் தொடர்ந்து நடத்தும் பொருட்டு இவர் சில வருடங்களுக்கு முன் பெங்களூரில் சென்று குடியேறினார். ஆனால் நாட்டுப் பணி மீண்டும் அவருக்கு அழைப்பு விடுத்தது. இந்த வருடம் கல்கத்தா இந்தியப் புள்ளி விவரக் கழகத்தின் சார்பில் பெங்களூரில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் டாக்குமெண்டேஷன் ஆராய்ச்சி நிலையத்தில் கௌரவப் பேராசிரியராகப் பதவி ஏற்றுத் தற்போது அந்தப் பதவியை வகித்து வருகிறார்.

டாக்டர் ரங்கநாதனை நம் நாட்டு நூலக வளர்ச்சி இயக்கத்தின் தந்தை எனக் கூறலாம். நம் நாட்டில் முதன் முதலாகச் சென்னை மாநிலத்தில்தான் நூலக மசோதா அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. இதற்கு டாக்டர் அவர்களே தூண்டுகோலாக இருந்தார். இவர் அமைத்த மாதிரி சட்டவிதிகளை ஒட்டியே சென்னையில் சட்டம் தயாரிக்கப்பட்டது. மேலும் ஆந்திரம், கேரளம், மைசூர் மாநிலங்களிலும் இவருடைய கருத்துக்களை யொட்டிச் சட்டம் தயாரித்திருக்கிறார்கள். இதர இந்திய மாநிலங்களும் நூலகச் சட்டம் பற்றி இவரை அடிக்கடி கலந்தாலோசிக்கின்றன.

டாக்டர் ரங்கநாதன் அவர்கள் பல்கலைக் கழகச் செலவினக் கமிஷனின் நூலகக் குழுவின் ஒரு முக்கிய அங்கத்தினர். இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் கழகத்தின் டாக்குமெண்டேஷன் கமிட்டிக்கும் இவர் தலைவர். புது தில்லியில் உள்ள விஞ்ஞான டாக்குமெண்டேஷன் நிலையத்தின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் இவரே காரண புருஷரெனலாம்.

இவ்வாறு இவர் செய்துள்ள நற்காரியங்கள் பலப் பல; முக்கியமாக 1946 முதல் 1953 வரை இவர் இந்திய நூலகக் கழகத்தின் தலைவராகச் செய்த தொண்டுகள் அநேகம். இன்று சென்னை நூலகக் கழகத்துக்கும் இவர் தலைவராக இருக்கிறார். இவரது சாதனைகள் இவருக்குப் பல விருதுகளைத் தேடித் தந்திருக்கின்றன. ஆங்கிலேய அரசாங்கம் இவருக்கு ராவ்சாஹிப் பட்டம் தந்து கௌரவித்தது. தில்லிப் பல்கலைக் கழகம் இவருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் அளித்திருக்கிறது. 1957-ம் வருடம் சுதந்திர பாரத அரசாங்கம் இந்தப் பேரறிஞருக்குப் பத்மஸ்ரீ பட்டத்தை வழங்கியது. வெளிநாடுகளும் இவரைக் கௌரவிக்கத் தவறவில்லை. ஆங்கில நூலகக் கழகம் இவரைக் கௌரவ உப தலைவராகக் கொண்டிருக்கிறது. சர்வதேச டாக்குமெண்டேஷன் கூட்டமைப்பானது இவரைக் கௌரவ உறுப்பினராகத் தேர்ந்தெடுத்திருக்கிறது. இதுவரை ஆறு பேர்களே இந்தக் கௌரவத்தை அடைந்திருக்கிறார்கள்.

தன்னலம் கருதாத சேவைக்கு எடுத்துக் காட்டாக, தம் வாழ்நாள் முழுவதிலும் சேமித்த ஒரு லட்ச ரூபாயையும், தாம் முதலில் உழைத்து உயர்வு பெற்ற சென்னை பல்கலைக் கழகத்துக்கு வழங்கிய வள்ளல் டாக்டர் ரங்கநாதன். நூலக இயல் பேராசிரியர் பதவி நிறுவுவதற்காக இந்த நன்கொடையை அவர் அளித்துள்ளார். இதற்குப் பெரிதும் தூண்டுகோலாக இருந்த இவரது மனைவியார் ஸ்ரீமதி சாரதா ரங்கநாதனின் பெயரால் இந்தப் பேராசிரியர் பதவி அழைக்கப்படுவது மிகப் பொருத்தமாகும்.

டாக்டர் அவர்களுடைய எழுபத்தொன்றாம் பிறந்த தினம் ஆகஸ்ட் மாதம் 12-ம் தேதி வருகிறது. அவர்களுடைய சேவைகளைப் பாராட்டிக் கௌரவிப்பதற்காகப் பிரசித்தி பெற்ற நூலகத் துறை அறிஞர்கள் ஒன்றுகூடி ஒரு சர்வதேச விழாக் கமிட்டி ஏற்படுத்தியிருக்கிறார்கள். நூலக இயல் பற்றிப் பலரால் எழுதப்பெற்ற சுமார் நூறு கட்டுரைகளைத் தொகுத்து ஒரு பாராட்டு நூல் வழங்கவும் ஏற்பாடாகி வருகிறது. நம் நாட்டில் நூலக இயல் போதிக்கப்படும் பல்கலைக் கழகங்களிலெல்லாம் இவரது பெயரால் பரிசுகள் வழங்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இவை தமிழகத்துக்கு உலகம் செய்யும் ஒரு மரியாதையாக எண்ணி மகிழலாம். டாக்டர் ரங்கநாதன் அவர்கள் இறைவன் அருளால் பல்லாண்டு வாழ்ந்து மேலும் மேலும் இந்தத் துறையில் பணிபுரிவாராக!

# ஒவ்வொரு தூவுதலிலும் இரட்டிப்புச் சருமப் பராமரிப்பையளிக்கும் டால்கம்




அதைப் போன்றுதான் குடிகூரா டால்கம் இயங்குகிறது—குடிகூரா இலேசாக, மருந்து கலந்திருப்பதால், மிகச் சில டால்க்குகளே இயங்கும் வழியில் உங்களுடைய சருமத்தை சிறப்பாகப் பேணுகிறது.

குடிகூரா வேர்க்குரு தோன்றாமல் தடுக்கிறது. அழற்சியுண்ட சருமத்திற்கு இதமளிக்கிறது, மற்றும் அர்சரத்தையெழுப்பும் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் உடல் பூராவும் பரிமள புத்துணர்ச்சியுடனிருக்க வைக்கிறது. குடிகூரா தூவிக்கொள்ளும் ஒவ்வொரு தரமும் அதன் சேர்த்தியாயிணைந்த ஒரு தனிப்பட்ட சுகந்தம் உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டுகிறது.

இன்றே ஒரு குடிகூரா டப்பா வாங்குங்கள்—110 வருஷத்திய பாரம்பரையையுடையது இந்த டால்கம்.

## குடிகூரா

குடும்ப முழுவதற்கும் ஏற்ற சர்வ-காரிய டால்கம்

குடிகூரா ஆயின்மெண்ட் புண்கள், வெளிச் சொறிசிரங்குகள் மற்றும் இதர சரும அழற்சிகளையும் குணப்படுத்தி விரைவில் சரும ஆரோக்கியத்தைச் சேர்க்கிறது.

NATIONAL C 30162A

---

லிப்டன்

# லாவோஜி

# டீ

சிக்கனத்தின் சின்னம்
சிறப்பின் சிகரம்




LLC-1 TM

# நந்தவனம்

## 32. புதிய பாதை

திருவிழாக் கூட்டம் மொய்த்துக் கொண்டிருந்தது. அக்கம்பக்கத்து ஊர்களிலுள்ள மக்களைத் தவிர நெடுந் தூரத்திலிருந்தும் பல சங்கீத ரசிகர்கள் வந்திருந்தார்கள். சின்னமுத்துக் குமரனுடைய கச்சேரியைக் கேட்பதற்காக வந்திருந்த எல்லா மக்களும் மறு நாள் நடக்கவிருந்த அந்த விசேஷ நடன நிகழ்ச்சியைக் காண்பதற்காக என்று அங்கேயே தங்கி விட்டார்கள்! குமுதவல்லி எதிர்காலத்தில் குறவஞ்சி நாடகத்தில் தோன்றப் போகிறாள் என்றும், அதற்கு ஒரு பூர்வாங்கமான பரீட்சையாகவே இந்த நடன நிகழ்ச்சி நடக்கப் போகிறது என்றும், சங்கீத வித்துவான்கள் எல்லாரும் பேசிக் கொண்டார்கள்!

உயரம் உயரமான காஸ் லைட்டுகள். பெரிய பெரிய பெட்ரோமாக்ஸ் விளக்குகள். இவை தவிர, ஏராளமான கோவில் திருவிளக்குகள். இவையும் தவிர, மண்டபத்துக்கு வெளியே பல நூறு மனிதர்கள் நின்று பெரிய தீவட்டிகளைத் தாங்கி, மக்கள் கூட்டத்திலும் நடன அரங்கிலுமாக ஒளி கொடுத்தார்கள்! தமிழ் நாட்டுக் கோவில் திருவிழாக்களில் தெய்வ பக்தியோடு கவின் கலைகள் எப்படிப் பிணைந்திருக்கின்றன என்பதற்கு ஒரு நேர்த்தியான சான்றாக விளங்கியது அந்த அழகிய காட்சி!

நடன நிகழ்ச்சி தொடங்கியது. அணி அணியாக உட்கார்ந்திருந்த மக்கள் கூட்டத்தின் முகப்பு வரிசையிலே சின்ன முத்துக்குமரன் அமர்ந்திருந்தார். அவருடைய உள்ளத்தில் நம்பிக்கையும், இதய பூர்வமான உல்லாசமும் நிரம்பியிருந்தன.

நடனத்துக்குப் பின்னணியான துதிப் பாடல்கள் ஒலிக்க ஆரம்பித்தன. அந்தக் காலத்தில் தமிழ்நாடெங்கும் மிகமிகப் புகழ்பெற்று விளங்கிய தமிழ்ப் பாடல்களிலே, அழகிய சொக்கநாதர் இயற்றிய கீர்த்தனைகளும், பதங்களும் மிகவும் உன்னதமானவை. நிகழ்ச்சியின் தொடக்கத்தில் குமுதவல்லி அத்தகைய சுந்தரமான பாடல் ஒன்றைப் பாடியவாறு அபிநயம் பிடித்துக் கொண்டே நடன அரங்கிலே இயங்க ஆரம்பித்தாள்.

ஆடினார் அம்பலவர்
அரிய சங்கப் புலவர்
ஆடினார் அம்பலவர்!

என்று, கானடா ராகத்தில், அற்புதமான ஒரு பாடல்! அழகிய சொக்கநாதரின் கீர்த்தனைகளில் அந்தக் காலத்தில் இந்தப் பாட்டுக்கு ஒரு தனியான மதிப்பு இருந்தது. நாட்டியத்துக்கு என்றே அமைந்தது போன்ற சொல்லடுக்குகளும், இசைக் குதூகலமும், மிடுக்கும் இணைந்திருந்த இந்தப் பாடலை அரங்கிலே பாடிக் கொண்டு, அம்பலவாணனான நடராஜப் பெருமானுடைய தெய்விக நடனத்தை அந்த ரசிகப் பெருமக்களின் முன்னிலையிலே இசை ஓவியமாகச் சித்திரிக்க ஆரம்பித்தாள் குமுதவல்லி!

நண்பரே, களை கட்டுவது என்று சொல்லுவார்களே, அப்படி அந்த ஆரம்பப் பாடலிலேயே கச்சேரியில் களை கட்டிவிட்டது. சின்னமுத்துக் குமரனுடைய முகத்தையே பார்த்தார்கள் பால்வண்ணனும் சிவசங்கரனும்! அவர் இந்த அகில உலகத்தையும் மறந்த நிலையிலே இசையும் நடனமும் சிருஷ்டி செய்து நிறுத்திய ஒரு பேரானந்த உலகிலே போய், இதயம் செருகியவராய்ப் பரவசத்திலே உட்கார்ந்திருந்தார்! அந்தக் காட்சியைப் பார்த்தபோது பால்வண்ணனுடைய உள்ளத்தில் உண்டான உவகைக்கு அளவேயில்லை. தனது தங்கையின் எதிர்கால வாழ்வே அற்புதமாகக் களை கட்டி விட்டது என்று எண்ணி மகிழ்ந்தான் பால்வண்ணன்! சகோதர பாசமும், தங்கையின் இசைத் திறமையும் அவனுடைய உள்ளத்தில் ஏதேதோ கற்பனை கடந்த நம்பிக்கைகளை எழுப்பின! விபரீத நிகழ்ச்சிகள் எதையும் அவன் எதிர்பார்க்கவில்லை!

சோமு



ஆம்; அன்றைய நடன நிகழ்ச்சியானது ஆரம்பத்திலிருந்து முடிவு வரை யாதொரு மாசும் இல்லாமல் சுவர சுத்தமான இசைக் கோவையாக, மேலே மேலே ஆரோகணித்துச் செல்லும் இசைக் கோலமாக அமைந்தது! கீர்த்தனைகளும், தில்லானாக்களும், ஜதிசுவரங்களும், பதங்களும், அங்கங்கே விருத்தப் பாடல்களும், ராகமாலிகைகளுமாக அந்த நிகழ்ச்சியானது இசையினால் நிர்மாணிக்கப்பட்ட ஓர் ஒலிக் கோவிலாகத் திகழ்ந்தது!

''அற்புதம்'' என்றார் சின்ன முத்துக்குமரன்.

''அப்படியா! அந்த வார்த்தையை உங்களுடைய நாவினால் சொல்லக் கேட்கும் போதே எனக்குப் பரவசம் உண்டாகிறது!'' என்றான் பால்வண்ணன். இப்படிச் சொல்லிக் கொண்டே சிவசங்கரனின் பக்கம் திரும்பினான். ஏனோ தெரியவில்லை, முகத்திலே எழுந்த கலவரத்தை அடக்கிச் சமாளித்துக் கொண்டு ஒரு புன்முறுவலை வரவழைத்தவாறு ஏதோ நன்றியுரைகளைப் பேச ஆரம்பித்தான் சிவசங்கரன்.

''எங்களுடைய நன்றியை உங்களுக்கு எப்படி வெளியிட்டுச் சொல்வது என்றே புரியவில்லை. எப்படியும் குமுதவல்லியின் எதிர்காலம் நல்ல வாய்ப்புக்களோடு இருந்தால் அதுவே எனக்குப் பரம திருப்தி!''

இவ்வாறு சொன்னான் சிவசங்கரன்.

''அவளுடைய எதிர்காலம்தானே? அதைப்பற்றி என்ன சந்தேகம்? இந்தத் தமிழ் நாட்டிலே இப்படிப்பட்ட திறமையும், இத்தனை உல்லாசமும், உணர்ச்சிகளை முகத்திலே கொண்டு வந்து பளிங்கு போன்று எடுத்துக் காட்டுகிற ஆற்றலும் ஒருங்கே அமைந்த ஒரு பெண் வேறு யாரும் இல்லை! கடந்த பத்து ஆண்டுகளாக இப்படிப்பட்ட ஒரு நங்கை எங்காவது இருக்கிறாளா என்று தான் தேடித் தேடி அலைந்தேன்! இது உண்மை. கடுகளவும் புகழ்ச்சி இல்லை!''

இப்படிப் பேசினார் சின்னமுத்துக்குமரன்.

நண்பரே, இந்தக் கோலாகலமான நிகழ்ச்சி நடந்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் தஞ்சாவூரிலிருந்து ஒரு கடிதம் வந்தது பால்வண்ணனுக்கு.

சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகத்தைப் புதிய கலைஞர்களின் ஒத்துழைப்போடு பெரிய கோவிலிலே அரங்கேற்ற உத்தேசித்திருப்பதாகவும், அந்த நடன நாடகத்தில் குறவஞ்சியின் வேடத்தைக் குமுதவல்லியே நடிக்க வேண்டும் என்பது தனது எண்ணம் என்றும், அந்த நிகழ்ச்சியின் அரங்கேற்றத்துக்கு முன்னால் அதற்குப் பூர்வாங்கமாக இப்பொழுது தஞ்சாவூரில் ஒரு சதுர்க் கச்சேரி ஏற்பாடு செய்ய விரும்புவதாகவும் எழுதியிருந்தார் சின்னமுத்துக்குமரன்.

இந்தக் கடிதம் கிடைத்ததும் பால்வண்ணன் ஒரே மகிழ்ச்சியோடு கூத்தாடினான்! சிவசங்கரனுக்கு மட்டும் ஏனோ உள்ளத்தில் அத்தனை உற்சாகத்தைக் காணோம். இதைக் கவனித்த பால்வண்ணன் ஒரே குழப்பத்தோடு சிவசங்கரனைப் பார்த்துக் கேட்டான்:

''மைத்துனரே! சின்னமுத்துக்குமரனிடமிருந்து வந்துள்ள இந்தக் கடிதம் நான் எதிர்பார்த்த அளவுக்கு உங்களிடம் மகிழ்ச்சியை உண்டாக்கவில்லை போலிருக்கிறதே. அப்படித்தானா?''

இவ்வாறு பால்வண்ணன் கேட்டதும் சிவசங்கரன் மிகுந்த பிரயாசையோடு தனது மனத்தின் குழப்பங்களைச் சமாளித்துக் கொண்டு சொன்னான்:

''அப்படியில்லை! குறவஞ்சி நாடகம் நடப்பதற்கு முன்னால் இப்பொழுது ஏன் இப்படி ஒரு சதுர்க் கச்சேரி நடக்க வேண்டும் என்று புரியவில்லை. அதனால் தான் யோசித்துக் கொண்டிருந்தேன்!''

சிவசங்கரன் சொன்ன மறுமொழியில் அபஸ்வரம் விழுந்தது. ஆனாலும் அதன் தன்மையைப் புரிந்து கொள்ளாத நிலையில் பால்வண்ணன் சொன்னான்.

''அந்த வட்டாரத்து மக்களுக்குக் குமுதவல்லியைத் தெரியாது அல்லவா? அதனால் முதலில் அவளுடைய நடன நிகழ்ச்சியை அங்கே அறிமுகப்படுத்த விரும்புகிறார் முத்துக்குமரன். அதன் பிறகு நடன நாடகத்துக்கு வேண்டிய ஒத்திகைகளைத் தொடங்குவார்கள். இதில் நாம் யோசிப்பதற்கு என்ன இருக்கிறது ...?''

இவ்வாறு பால்வண்ணன் விளக்கம் கூறினான்.

இதன் பிறகு தஞ்சாவூரில் குமுதவல்லியின் சதுர்க் கச்சேரிகள் தொடர்ச்சியாக நாலைந்து முறை நடந்தன. இந்தக் கச்சேரிகளில் ஒரு புதிய அம்சம் என்னவென்றால், ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் குமுதவல்லி சில புதிய பாடல்களைக் கற்று அரங்கேற்றினாள். முக்கியமாகத் தஞ்சாவூர் வட்டாரத்தில் வழங்கி வந்த சில அற்புதமான தமிழ்ப் பதங்களைப் புதிதாகப் பாடம் கேட்டு, அந்தப் பதங்களை அரங்கிலே நடனம் ஆடிக் காட்டினாள் குமுவதல்லி! அந்த வட்டாரத்து மக்களுக்கு இந்தப் பாடல்களைக் குமுதவல்லி பாடி ஆடிய நேர்த்தி அபாரமாகப் பட்டது. அவள் திறமையைப் பற்றிய புகழ் அந்த வட்டாரத்தில் நன்கு பரவ ஆரம்பித்தது.



பரிமளிப்பதில் புது ரகம்...

# காந்தாரிடின்



கூந்தல் தைலம்






சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ஆர். எல். கௌடர் & கோ., 59, புந்தர் தெரு, சென்னை-1
ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்
சத்யநாராயண பார்மஸி, குமாரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்




சென்னை, ஆந்திரா, கேரளம் மற்றும் மைசூர் ராஜ்யங்களுக்குப் பிரதம ஏஜெண்டுகள்
ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட், லிமிடெட், சென்னை-2
கிளைகள்: கோயமுத்தூர், பெங்களூர் மற்றும் செகந்திராபாத்



சென்னை சம்ஸ்கிருத ரங்கா குழுவினர் பவபூதியின் 'மாலதி மாதவா' என்னும் சம்ஸ்கிருத நாடகத்தை மியூஸியம் தியேட்டரில் சிறப்பாகச் சமீபத்தில் நடித்துச் சபையோரின் பாராட்டுதலைப் பெற்றனர். சம்ஸ்கிருத ரங்காவின் தலைவர் டாக்டர் வே. ராகவனோடு நாடகத்தில் பங்கு பற்றியவர்களையும் படத்தில் காணலாம்.

---

''எங்கேயோ ஒரு குக்கிராமத்தில் இருக்கிறீர்கள் நீங்கள். இந்த நடன நாடகம் தஞ்சையிலே அரங்கேறி விட்டால் பிறகு நீங்கள் இங்கேயே வந்து விடலாம்!'' என்றார் முத்துக்குமரன்.

''நானும் அப்படியேதான் நினைத்தேன்!'' என்று உற்சாகத்தோடு சொன்னான் பால்வண்ணன். பக்கத்திலே நின்ற சிவசங்கரன் மௌனமாக இருந்தான். முகத்தில் மகிழ்ச்சியை வரவழைத்துக் கொண்டான்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு மாதத்தில் குறவஞ்சி நாடக அரங்கேற்றத்துக்கான நாள் உறுதியாயிற்று. சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகம் பெரிய கோவிலிலே அரங்கேறப் போகிறது என்றும், முற்றிலும் புதிய நடிகர்கள் தோன்றப் போகிறார்கள் என்றும், குமுதவல்லி இந்த நாடகத்திலே குறவஞ்சியாக நடிக்கப் போகிறாள் என்றும் அந்த வட்டாரத்து மக்கள் களிப்போடு பேசிக் கொண்டார்கள்.

தஞ்சாவூருக்குப் புறப்படுவதற்காக முனைந்த போது, பால்வண்ணனிடம் சிவசங்கரன் முற்றிலும் எதிர்பாராத விதமாகப் பேசினான்:

''நானும் குழந்தைகளும் இங்கேயே இருக்கிறோம். நீங்கள் உங்கள் தங்கையை அழைத்துக் கொண்டு தஞ்சாவூர் போய் வாருங்கள்!'' என்றான் சிவசங்கரன். பால்வண்ணனுக்கு அளவு கடந்த வியப்போடு ஆற்றொணாத வருத்தமும் ஏற்பட்டது!

''மைத்துனரே! என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? இந்தத் தமிழ்நாடு முழுவதும் அந்த நாடக அரங்கேற்றத்தை எதிர்பார்த்து ஆவலோடு காத்திருக்கிறது. குமுதவல்லி குறவஞ்சியாக மேடையிலே தோன்றப் போவதைக் காண்பதற்காக ஆயிரம் ஆயிரம் மக்கள் துடிதுடித்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்களானால் இத்தனை சிரத்தைக் குறைவாகப் பேசுகிறீர்களே! அவள் மேடை மீது தோன்றி அத்தனை ரசிகப் பெருமக்களின் பாராட்டுக்களையும் பெறுவதை நீங்கள் பார்க்க வேண்டாமா? உங்களுக்கு ஆவலாக இல்லையா அது?''

''அது சரி. நீங்கள் பார்த்தால் போதாதா? அந்த மகிழ்ச்சியில் என்னுடைய மகிழ்ச்சியும் அடங்கி யிருக்கிறதே!'' என்றான் சிவசங்கரன்.

''இல்லை. நீங்கள் சொல்லுவது எனக்குத் திருப்தியாக இல்லை. முன்பெல்லாம் குமுதவல்லியின் நடன நிகழ்ச்சியில் எத்தனையோ ஆர்வத்தோடு இருப்பீர்கள் நீங்கள். என்னை விட நீங்கள் எத்தனையோ பெருமைப் படுவீர்கள்! இப்பொழுது கொஞ்ச நாட்களாக ஏனோ ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள். நானும் கவனித்துக் கொண்டுதான்....''

''இல்லை. அதெல்லாம் ஒன்றுமில்லை. இங்கே குழந்தைகளை நன்றாகப் பார்த்துக் கொள்வதற்கு ஆள் வேண்டுமல்லவா? எல்லோரும் அங்கே போய் விட்டால் எப்படி?'' என்று தடுமாற்றத்தோடு பேசினான் சிவசங்கரன்.

''குழந்தைகள் ஏன் இங்கே இருக்க வேண்டும்? குழந்தைகளும் நம்மோடு வர வேண்டியதுதானே? நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே?'' என்று குழப்பத்தோடு கேட்டான் பால்வண்ணன். சிவசங்கரன் சற்று மௌனமாக இருந்தான். பிறகு சொன்னான்:

''உங்கள் கருத்து அப்படியிருக்குமானால் அப்படியே செய்வோம். வளர்கிற குழந்தைகளுக்கு, நாட்டியமும் சங்கீதமும் பழக்கப்படுத்த வேண்டாம் என்று ஏதோ ஒரு பைத்தியக்கார நினைப்பு நினைத்தேன். நமக்குப் பிறகு உருவாகிற சந்ததி வேறு விதமாக அமையட்டுமே என்று எண்ணினேன். அவ்வளவு தான்! உங்களோடு நான் தஞ்சாவூருக்கு வருவதில் எவ்வித ஆட்சேபமும் இல்லை. புறப்படுகிறேன்!''

''இல்லை. நீங்கள் ஏதோ ஒருமாதிரிப் பேசுகிறீர்கள். உங்களுடைய உள்மனத்தில் ஏதோ ஒன்று உங்களை வேதனை செய்கிறது. புதிதாக ஒரு கிலேசம் உங்கள் மனசிலே புகுந்திருக்கிறது. அதை என்னிடம் மறைக்கப் பார்க்கிறீர்கள்!'' என்றான் பால்வண்ணன். சிவசங்கரன் சொன்னான்:

''ஏதேது நீங்கள் பேசுவதைப் பார்த்தால் நமக்குள் ஒரு பெரிய விவாதமே வந்து விடும் போலிருக்கிறதே. வேண்டாம்! உங்களுடைய மனம் எப்படியோ அதுவே என்னுடைய எண்ணமுமாக இருக்க வேண்டும். அதில் ஒரு மாறுதலும் கூடாது. நீங்கள் ஏன் ஏதேதோ கேள்விகள் எல்லாம் என்னைக் கேட்கிறீர்கள்? நானும் குழந்தைகளும் உங்களோடு வருகிறோம். சரிதானே? இதற்கு மேல் என்ன பேச்சு உண்டு?''

சிவசங்கரன் இப்படிச் சொல்லி நிறுத்தியதும், பால்வண்ணனுக்கு மனசில் முழுத் திருப்தி ஏற்படவில்லை! என்றாலும், அதற்கு மேல் மைத்துனனோடு விவாதிக்க அவன் விரும்பவில்லை! சிவங்கரனுடைய உள்ளத்தில் புகுந்துள்ள வேதனைக்குக் காரணம் ஏதாக இருக்கக் கூடும் என்பதைப் படிப்படியாக ஆராய்ந்து தெரிந்து கொள்ளலாம் என்று நினைத்தான் பால்வண்ணன்!

குமுதவல்லியும், பால்வண்ணனும், சிவசங்கரனும் அவர்களுடைய இரு குழந்தைகளும், இந்தக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்காக ஒரு பணிப் பெண்ணும் எல்லாருமாகத் தஞ்சாவூருக்குப் புறப்பட்டார்கள்! நாடக ஒத்திகையும் அரங்கேற்றமுமாக ஒரு மாதத்துக்கு மேல் தஞ்சையில் தங்கியிருக்க நேரும் என்று எதிர்பார்த்தான் பால்வண்ணன். அதற்கு ஏற்ற ஏற்பாடுகளுடனேயே மலையடிவாரத்துக் கிராமத்திலிருந்து புறப்பட்டார்கள். அவர்கள் எப்படிப் புறப்பட்டார்களோ, அப்படியே மறுபடியும் அந்தக் கிராமத்துக்குத் திரும்பி வரப் போவதாகவே எண்ணினான் பால்வண்ணன். ஆனால் சிவசங்கரனுடைய உள்ளத்தில் வேறு பல எண்ணங்கள் சுழன்று கொண்டிருந்தன!

ஆம்; சிவசங்கரனுடைய இதயத்தின் ஆழத்திலே ஆயிரம் ஆயிரம் உணர்ச்சிகள் பொங்கிக் கொண்டிருந்தன. தஞ்சாவூருக்குப் புறப்படுவதற்கே தயங்கினான் அல்லவா? திடீரென்று அவனுடைய மனத்தில் இத்தகைய பெரிய மாறுதல் ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்த நிகழ்ச்சி என்ன என்பதை, அவன் யாரிடமும் வெளியிட விரும்பவில்லை! ஆனாலும் வாழ்விலேயே ஒரு பெரிய விரக்தி ஏற்பட்டதுபோல், எதிலும் பிடிப்பு இல்லாமல் நடந்து கொண்டான்! இதைக் கவனிக்கக் கவனிக்கப் பால்வண்ணனுடைய உள்ளத்தில் பெரியதொரு கவலை உண்டாக ஆரம்பித்தது!

மலையடிவாரத்திலிருந்து தஞ்சாவூருக்குப் போய்ச் சேருகிறவரை சிவசங்கரன் அதிகமாக யாரிடமும் எதுவும் பேசவில்லை! கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுவான்; மற்றப்படி அவனாக எதுவும் பேசமாட்டான்! முகத்தில் இனம் தெரியாத ஒரு பெரிய இருள் கவிந்திருந்தது. கண்களிலே ஏதோ



ப்ரூக்பாண்ட் டீ கண்ட்ரோலர் திரு சத்தியமூர்த்தி அவர்களின் புதல்வி சௌ. வசந்தராவுக்கும், திரு நாராயணனுக்கும் திருமணம் நடந்தது.



ஜம்ஷெட்பூர் கல்கி ஏஜண்ட் திரு ரங்கநாதய்யர் அவர்களின் குமாரர் ஆர். என். வாசனுக்கும், சௌ. வாலாம்பாளுக்கும் விவாகம் நடைபெற்றது.

---

ஒருவித ஏக்கம் படர்ந்திருந்தது. பால்வண்ணனோடு பேசும்போது அந்த ஏக்கத்தையும், அந்தத் துயரத்தையும் மிகவும் கஷ்டப்பட்டு மனத்துக்குள் அடக்கிக் கொண்டான்! குமுதவல்லியிடமோ? அவளிடம் சிவசங்கரன் நடந்து கொண்டவிதம் முற்றிலும் புதுமையாக இருந்தது. ஏதோ அன்னிய மனிதர்கள் இருவர் ஒருவரோடு ஒருவர் பேசுவதுபோல, உறவு என்ற வளர்ச்சியே சிறிதும் இல்லாமல் அவர்கள் இருவரும் நடந்து கொண்டதைப் பால்வண்ணன் நுட்பமாகப் பார்த்தான்! தனக்குத் தெரியாமல், தன்னால் புரிந்து கொள்ள முடியாதபடி அப்படி என்ன நிகழ்ச்சி நடந்தது? இந்தத் துயரமான மாறுதல் எப்படி ஏற்பட்டது? யோசித்து யோசித்துப் பார்த்தான் பால்வண்ணன்! அவனுக்கு அந்தப் புதிர் புலப்படவில்லை!

தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்த நாளிலிருந்து சிவசங்கரனுடைய நடவடிக்கைகளில் இந்த மாறுதல் மேலும் அதிகரிக்கத் தொடங்கியது! நான்கு மனிதர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தால் சிவசங்கரன் அந்த இடத்தில் இருப்பதில்லை. தனியாக ஒரு மூலையிலே போய் உட்கார்ந்து ஏகாந்தச் சிந்தனையிலே ஆழ்ந்து விடுவான்! நேரம் கிடைத்த போதெல்லாம் பெரிய கோயிலின் சந்நிதியிலே போய்க் கண்களை மூடியவாறு தியானத்திலே நிற்பான்! மனத்துக்குள் ஏதேதோ சொல்லிக் கொள்ளுவான்! உதடுகள் அசையுமே தவிர, வார்த்தைகள் வெளியே ஒலிப்பதில்லை! திடீர் திடீரென்று தனக்குத்தானே சிரித்துக் கொள்ளுவான்! காரணம் கேட்டால் எதுவும் சொல்ல மாட்டான்! இதையெல்லாம் பார்த்தபோது பால்வண்ணனுடைய இதயத்தில் துயரம் அதிகரித்தது. நாடக அரங்கேற்றம் முடிந்ததும், ஒருநாள் சிவசங்கரனைத் தனியாக அழைத்துச் சென்று இந்த மாறுதலின் காரணத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தான் பால்வண்ணன்! (தொடரும்)

---

பங்களூர் திரு வி. டி. சீனிவாசன் அவர்களின் புதல்வர் திரு சம்பத் குமாருக்கும், சௌ. இந்துமதிக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



திருக்கோவலூர் ஸ்ரீ பி. ஏ. கிருஷ்ணையரின் குமாரத்தி சௌ. வித்யாகௌரிக்கும், சிரஞ்சீவி எஸ். கிருஷ்ணமூர்த்திக்கும் திருமணம் நடந்தேறியது.



























## தீக்குச்சி விளையாட்டுக்கள்

ரமணி இருக்கிறானே அவன் படுசுட்டி! விஷமம் செய்வதைப் போலவே கெட்டிக்காரனும் கூட. வீட்டிலிருந்து ஒரு தீப்பெட்டியைக் கொண்டு வந்தான். தன் நண்பர்களின் முன்னால் தீக்குச்சிகளைக் கொட்டினான். எட்டுத் தீக்குச்சிகளைக் கொண்டு படம் 1-ல் காட்டியுள்ளபடி இரண்டு சதுரங்களை அமைத்தான். பிறகு தன் நண்பனைப் பார்த்து "இந்தச் சதுரத்தை ஒன்பதாக்க முடியுமா?" என்று கேட்டான்.

பிறகு, இருபத்திரண்டு தீக்குச்சிகளைக்கொண்டு படம் 2-ல் இருப்பது போல் எட்டுச் சதுரங்களை அமைத்து விட்டு, "இதிலிருந்து ஆறு குச்சிகளை எடுத்த பிறகு நான்கு சதுரங்கள்; இதே அளவில் ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டிருக்கும்படி அமைக்க முடியுமா?" என்று கேட்டான்.

ரமணியின் அடுத்த கேள்வி: "படம் 3-ல் இருக்கும் ஒன்பது தீக்குச்சிகளைக் கொண்டு அவைகளை ஒடிக்காமல் வளைக்காமல் ஐந்து முக்கோணங்களாக அமைத்துக் காட்ட முடியுமா?" என்பதுதான்.

"பன்னிரண்டு தீக்குச்சிகளைக் கொண்டு படம் 4-ல் காட்டியுள்ளபடி மூன்று சதுரங்களை அமைத்த பிறகு, நான்கு குச்சிகளை எடுத்து மாற்றியமைப்பதன் மூலம் இதே அளவுள்ள நான்கு சதுரங்களை அமைத்துக் காட்ட முடியுமா?" என்று கேட்கிறான் ரமணி.

அடுத்த கேள்வியைக் கேட்கப்போகும் ரமணியின் முகத்தில் குறும்பு கூத்தாடியது. "பன்னிரண்டு தீக்குச்சிகளைக் கொண்டு படம் 5-ல் காட்டியுள்ளபடி மூன்று சதுரங்களை அமைக்கலாம் இல்லையா? இவைகளிலிருந்து முறையே, (அ) ஏதாவது இரண்டு தீக்குச்சிகளை எடுத்த பிறகு இரண்டு மீதி இருக்க வேண்டும். (ஆ) ஏதாவது மூன்று தீக்குச்சிகளை எடுத்த பிறகு மீதி பத்து இருக்க வேண்டும். (இ) ஒரு தீக்குச்சியை நீக்கிவிட மீதி ஒன்று இருக்கவேண்டும். முடியுமா?" என்றான்.

அடுத்து, ஒன்பது தீக்குச்சிகளைக் கொண்டு படம் 6-ல் காட்டியுள்ளபடி மூன்று முக்கோணங்களை அமைத்து, "இதிலிருந்து இரண்டு தீக்குச்சிகளை மாற்றி அமைப்பதின் மூலம் இதே அளவுள்ள நான்கு முக்கோணங்கள் உண்டாக்கிக் காட்ட முடியுமா?" என்றான்.

ரமணியின் சாமர்த்தியத்திலே பொறுமை கொண்ட கிட்டு, தானும் அவனை மடக்க எண்ணி, எட்டு தீக்குச்சிகளைக் கொண்டு படம் 7-ல் காட்டியுள்ளபடி ஒரு ராக்கெட் தயாரித்தான். பிறகு "இந்த ராக்கெட்டை நட்சத்திரத்துக்கு அனுப்பிவைக்க முடியுமா உன்னால்?" என்று கேட்டான். ரமணியா சளைப்பவன்? டக்கென்று ஆறு தீக்குச்சிகளை மாற்றியமைத்துக் கிட்டு கேட்டபடி செய்து காண்பித்தான். எப்படி?

இருபது நெருப்புக் குச்சிகளைக் கொண்டு படம் 8-ல் இருப்பதுபோல் ஏழு சதுரங்களை அமைத்து விட்டு ரமணி, தன் நண்பர்களிடம் "இதிலிருந்து மூன்று தீக்குச்சிகளை மட்டும் எடுத்து, மாற்றி அமைத்து, ஐந்து சதுரங்கள் வரும்படி செய்ய வேண்டும். சதுரங்கள் இதே அளவுதான் இருக்க வேண்டும், ஒன்றை-ஒன்று எங்காவது ஓர் இடத்தில் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும். முடியுமா?" என்று கேட்டான் ஒய்யாரமாகக் கால்மீது கால் போட்டு உட்கார்ந்தபடி!

ரமணி தன் தீக்குச்சி விளையாட்டுக்களின் விடையை விருந்தின் கடைசிப் பக்கத்தில் சொல்லியிருக்கிறான், பாருங்கள்!

## கூடிக் குலவிக் கூத்தாடும் 'கிளிப்'

உன் அப்பாவிடம் இருக்கும் பேப்பர் 'கிளிப்' (ஜெம் கிளிப்)கள் இரண்டைக் கொண்டு நண்பர்களைத் திகைக்க வைக்கும் ஒரு மந்திர வித்தையைச் சொல்லித் தரட்டுமா?



உன் தங்கையோ அக்காவோ பின்னலுக்கு உபயோகிக்கும் அகலமான பட்டு ரிப்பனை (நீளமானது) எடுத்துக் கொள். அதை மேலேயுள்ள படத்தில் காட்டியபடி மடக்கி மடித்துப் பேப்பர் கிளிப்புகளைக் கொண்டு இணை. ஒரு நீண்ட டுவைன் நூலை அதற்குள் நுழைத்து மறு பக்கம் இழு. உன் நண்பர்களில் இரண்டு பேரை ரிப்பனின் முனைகளை ஆளுக்கு ஒன்றாகவும், மற்றும் இருவரை நூலின் இரு முனைகளைப் பக்கத்துக்கு ஒருவராகவும் பிடித்துக் கொள்ளும்படி சொல். இனி நீ ரிப்பனைப் பிடித்துக் கொண்டிருப்பவர்களிடம் அதை மெள்ள இழுக்கும்படி சொல். அவர்கள் இழுக்க இழுக்க கிளிப் ஒன்றை ஒன்று மெள்ள மெள்ள நெருங்கி வரும். ஒரு நிலையில் ஆச்சரியமான ஓர் ஒலியுடன் அந்தக் கிளிப் இரண்டும் ரிப்பனை விட்டுக் குதித்து ஒன்றில் ஒன்று பிணைந்து கொண்டு கயிற்றில் மாட்டிக் கொண்டு கூத்தாடும்! ரிப்பனில் பிணைந்த கிளிப்புக்கள் கயிற்றுக்குத் தாவிய வித்தையைக் கண்டு உன் நண்பர்கள் திறந்த வாய் மூடாமல் திகைத்துப் போய் நிற்பார்கள். செய்து பாருங்களேன். உனக்குமே கூட ஆச்சரியமாக இருக்கும்.



---

### சாம்பாரும் உப்பும்

ஜெய்ப்பூரில் உள்ள சாம்பார் ஏரியைப் பற்றிப் பூகோளப் புத்தகத்தில் படித்திருப்பீர்கள். 80 சதுர மைல் விஸ்தீரணமுள்ள இந்த ஏரியின் நீர் வருடத்தில் எட்டு மாதங்கள் ஒரே உப்பாகவும் நான்கு மாதங்கள் நல்ல ருசியுள்ள குடிக்கும் நீராகவும் இருக்கும். அக்டோபரிலிருந்து மே மாதம் வரை இந்த ஏரியிலிருந்து 2,00,000 டன் உப்பு எடுக்கப்படுகிறது. ஜூன் மாதத்திலிருந்து செப்டம்பர் முடிய இங்கு மழை காலம். மழை விடாமல் அடித்துச் சொரியும். இந்த மழை நீரில் அருகிலுள்ள உப்புக் கனிகளின் உப்பெல்லாம் கரைந்து வந்து இந்தச் சாம்பார் ஏரியில் நிறைந்து விடுகிறது. மத்திய இந்தியாவாசிகளுக்கு நெடுங்காலமாக உப்பு விநியோகம் செய்து வருவது இந்தச் சாம்பார் ஏரிதான்.

---

### பட்டம்

திருச்சி பாரதன்

சின்னஞ் சிறிய பட்டம்
சிவப்பு வர்ணப் பட்டம்
பொன்னைப் போன்ற வானில்
போடு துயார் வட்டம்!
அதிக மான நூலை
ஆர்வ மாகப் பிடித்தால்

அதிக தூரம் பறக்கும்
ஆனந் தமும் கொடுக்கும்!
அதிக மான நூலை
ஆர்வ மாகப் பிடித்தால்
அதிரு கின்ற பட்டம்
அன்பு டனே இட்டுப!



## என்ன விநோதம் பாரு....

★ ஆரோக்கியமாக உள்ள புறாக்கள் தூங்கவே தூங்காதாம். நோயுற்றோ அல்லது வேறு காரணங்களால் பலஹீனமடைந்தோ போனால் தான் இவை தூங்குவதை நீங்கள் பார்க்கலாம்.

★ உலகில் 6,00,000-க்கும் அதிகமான பூச்சி வகைகள் இருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இவைகளின் பெயர்களை ஒரு நாளைக்கு 50 வீதம் மனப்பாடம் செய்வது என்று ஆரம்பித்தால் அத்தனை பூச்சிகளின் பெயரையும் கற்றுக் கொள்ள உங்களுக்கு 35 வருடங்கள் பிடிக்கும்.

★ இரவெல்லாம் ஒரே கொசுக்கடி என்று சொல்லுகிறீர்களே, உங்களைக் கடிப்பது பெண் கொசுவா ஆண் கொசுவா என்று உனக்குத் தெரியுமா? இரண்டு கொசுக்களுமாகத் தான் இருக்கும் என்பாயல்லவா? அதுதான் இல்லை. நம்மைக் கடிப்பது பெண் கொசுக்கள் தான். கடித்து ரத்தத்தை உறிஞ்சும் உறுப்பு பெண் கொசுக்களுக்குத்தான் உண்டு. ஆண் கொசுக்களுக்கு இந்த அமைப்பு கிடையாது.

★ எரிமலைகள் பொங்கி வழிவதனால் உருகி வரும் பொருள் சாம்பலாகும் அல்லவா? அந்தச் சாம்பலின் சூடு தணிவதற்கு நூறு வருடங்கள் ஆகுமாம்.

★ தக்காளிப் பழத்தைக் கண்டால் நீ விடமாட்டாய் இல்லையா? ஆனால் ஒரு தக்காளிச் செடி தான் வளரும் காலத்தில் பூமியிலிருந்து எத்தனை நீரை எடுத்துக் கொள்ளுகிறதென்று தெரியுமா? மூப்பது காலன் தண்ணீரை!

★ சுறா மீன் மிகவும் விலைமதிப்புள்ளது. இதன் உடலின் ஒவ்வொரு பாகமும் பயன்படுகிறது. சுறா மீனின் துடுப்புகளை (Fins) சீனாக்காரர்கள் ரொம்ப விரும்பிச் சாப்பிடுவார்கள். இதன் பற்கள் நகை செய்பவர்களுக்குப் பயன்படுகிறது. ஈரலும் கொழுப்பும் தான் நமக்கு 'ஷார்க்லிவர் ஆயில்' என்ற எண்ணெயைக் கொடுக்கிறது. இதன் எலும்புகளிலிருந்து கால்நடைகளுக்கும் பறவைகளுக்கும் உணவு தயாரிக்கிறார்கள். இதன் தோலிலிருந்து ஒருவிதப் பசை தயாரிக்கிறார்கள். உடலின் மேல் பாகமும் வயிறும் உயர்ந்த தோலாகிறது —(ஷார்க் ஸ்கின்)

★ ஆங்கிலத்தில் ஒன்றிலிருந்து நூறு வரை எழுதினால் எழுதும்போது ஓர் எழுத்து ஓர் இடத்தில் கூட உபயோகப்படுவதில்லை. ஆனால் நூறுக்கு மேல் எழுதப்படும் ஒவ்வோர் எண்ணிலும் இந்த எழுத்து இடம் பெறுகிறது. அது எந்த எழுத்து என்ன தெரியுமா? 'A' என்ற முதல் எழுத்துதான். சந்தேகமிருந்தால் எழுதிப் பாருங்களேன்.

★ சிங்கத்தின் கர்ஜனைதான் உலகில் வாழும் மற்ற ஜீவராசிகளின் சத்தத்தை எல்லாம் விட அதிக தூரம் கேட்கக் கூடியது. இதற்கு அடுத்தபடியாகச் சொல்லக் கூடியது கழுதைப் புலியினுடைய கூச்சல். அடுத்து ஆந்தையின் அலறல். இதற்குப் பிறகுதான் செந்நாய், புலி, நரி இவைகளின் ஓலம். குதிரையின் கனைப்பை விடக் கழுதையின் கத்தல் தூம்பது மடங்கு அதிக தூரம் கேட்கும். நாயின் குரைக்கும் ஒலியை விடப் பூனையின் சீறல் ஒலி பத்து மடங்கு அதிக தூரம் கேட்கும். எல்லாவற்றிலும் ஆச்சரியம் முயல் போடும் சத்தம் நாய் பூனை இவைகளின் ஒலி கேட்கும் தூரத்தை விட அதிக தூரம் கேட்குமாம்!





அத்தியாயம் 35

## திகைப்பளிதத தீர்மானம்

மறு நாள் முழுவதும், ஏன் அதற்குப் பின்னரும்கூட, வடிவேலு யாருடனுமே வாய் திறந்து பேசவில்லை. ஏதோ ஒரு தனி உலகத்தில் அவன் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். தன் மனத்துக்குள் உருவாக்கியிருந்த ஒரு பசுஞ்சோலை கருகிச் சாம்பராக அந்த மயானக் குவியலிடையே அவன் உலவி வந்தான். பொங்கித் ததும்புகிற பிரேமைக்கு ஒரு வடிவம் கொடுக்க முடியுமானால் அது அந்த நந்தவனத்தில் கொத்துக் கொத்தாய்ப் பூத்துக் குலுங்கிய புது மணம் மாறாத ரோஜா மலர்களைப் போல்தான் இருக்கும். அவை இப்போது மண்ணோடு மண்ணாக அரைபட்டு அழிந்து விட்டன. காதல் நிறைந்த இதயம் எழுப்பும் மௌனமான இன்னிசைக்கு ஒலி ஊட்ட முடியுமென்றால் அது அந்த அழகிய தோட்டத்தில் மரத்துக்கு மரம் பறந்து கிளைக்குக் கிளை தாவிக் குதூகல த்வனியில் கூவிய குயிலினங்கள் கீதத்தைத்தான் ஒக்கும். அந்தக் குயில்கள் கழுத்து முறிக்கப்பட்டுச் செத்துக் கிடந்தன. ஆணும் பெண்ணுமான இரு ஜீவன்கள் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்ளும்போது ஏற்படும் உள்ளத் தெளிவுக்கு ஓர் உபமானம் கூற வேண்டுமானால் அவனுடைய கற்பனைப் பூங்காவின் தெள்ளிய தடாகத்தைத்தான் சொல்லலாம். அது இப்போது சேற்றுக் குழம்பாகக் கலங்கியிருந்தது.

ஓலமிட்டது அவன் மனம் மட்டும் தானா? இல்லை, வேறு ஓலக் குரல்களும் அவன் செவிகளுக்கு எட்டின. குண்டு வீச்சிலே குற்றுயிரும் கொலையுயிருமாக விடப்பட்டவர்களின் முனகல் ஒலி; இறந்தவர்களை, உருத் தெரியாமல் அழிந்தவர்களை அவர்களின் உறவினர்களில் சிலர் கண்டுபிடிக்க முயன்று பிரேதக் குன்றுகளினூடே புகுந்து தேடிய போது எழும் பரிதாப அலறல்; வெற்றிக் களிப்பிலே வெறி கொண்ட சிப்பாய்களின் மிருகத்தனத்துக்கு ஆளான இளம் பெண்களின் தீனமான கூக்குரல் இவையெல்லாம் அவன் உள்ளத்தில் எதிரொலிக்கத் தொடங்கின.

இன்னும் சில தினங்களில் ஜெர்மானியத் தளபதிகளின் கட்டளைக்கிணங்க ஜெர்மானிய விமானிகள், ஜெர்மானிய விமானங்களில் பறந்து சென்று, ஜெர்மானிய நகரத்தின் மீதே குண்டு வீசி, ஜெர்மானிய மக்களையே அவதிக்குள்ளாக்கப் போகிறார்கள். தங்களைத் தாக்கியவன் எதிரிதான் என்று அந்த அப்பாவி ஜனங்களை நம்ப வைக்கவும் போகி

ளூர்கள். அதன் மூலம் ஹிட்லருடைய யுத்த போதைக்கு, உலகையே ஆள வேண்டும் என்ற பேராசைக்கு ஜெர்மானிய மக்களுடைய ஆதரவைக்கோரிப் பெறப் போகிறார்கள். இந்த வஞ்சகச் சூழ்ச்சியினால் கொடூரத்தினால் பிறக்கவிருந்த அழுகைச் சத்தத்துடன் ஒப்பிடும்போது வடிவேலுவின் இதயம் இன்று அழுவது எவ்வளவு சாமானியமான விஷயம் ?

பற் சக்கரங்களும் சங்கிலிகளும் கொண்ட டாங்குகள் பயங்கர அரக்கனைப் போல் முன்னேறுகையில் நிலமே அதிரும்போது வடிவேலு மனத்துக்கு ஏற்பட்ட அதிர்ச்சி எம்மாத்திரம் ?

தகர்ந்து போனது அவன் காதல் மாளிகை மட்டும்தானா? குச்சு வீடு முதல் அடுக்கு மாடிக் கட்டிடங்கள்வரையில் எத்தனை எத்தனை இருப்பிடங்கள் தகர்த்தெறியப்பட்டன; இன்னும் தரைமட்டமாக்கப்பட விருந்தன ?

'உலக அரங்கில் ஆவேசமான யுத்தம் மூண்டிருக்கும் போது லட்சோப லட்சம் மக்கள் மனம் பதைக்கும் போது நான் அவர்களுக்கு உதவும் வகையில் என்ன செய்திருக்கிறேன் ? இந்த அட்டூழியங்களைத் தடுத்து நிறுத்த ஒவ்வோர் ஆண் மகனும் முன்வர வேண்டாமா? ஹிட்லருடைய ஆதிக்க மோகத்துக்கு ஒரு முடிவு காண வேண்டாமா?'

நிமிஷத்துக்கு நிமிஷம் வடிவேலுவிடம் சிப்பாயாகத் தன்னைப் பதிவு செய்து கொள்வது என்கிற எண்ணம் தீவிரமடைந்து வந்தது. அதைப் பெற்றவர்களிடமும் மற்றவர்களிடமும் கூறி, தாராவின் யோசனைப்படி எல்லாருடைய சம்மதத்தையும் ஆசிகளையும் பெற்றுச் செல்லத் தக்க சந்தர்ப்பத்தை எதிர் நோக்கியிருந்தான்.

'என்று சொல்வது? நாளும் கிழமையுமா பார்க்க வேண்டும்? இன்றே கூறி விட்டால் போகிறது. எப்போது பேசுவது? இதென்ன யோசனை? இப்போதே பனிச்சென்று தன் முடிவை, அசைக்க முடியாத தீர்மானத்தை வெளியிட்டு விட வேண்டியதுதான்!'

அது வரை, துண்டைச் சுருட்டித் தலைக்கு அணைப்பாக வைத்துச் சுவரில் சிரத்தைச் சாய்த்துத் திண்ணையில் கால் நீட்டிப் படுத்திருந்த வடிவேலு, துள்ளி எழுந்தான்.

''அண்ணா! நாலைந்து நாட்களாகவே ஏதோ பிரம்மஹத்தி பிடித்தாற் போல் உட்கார்ந்திருக்கிறாய். உனக்கு என்ன வந்து விட்டது? சாப்பிட வா என்று எத்தனை தடவை கூப்பிட்டு விட்டேன்? காதில் விழவில்லை?'' என்று இரைந்து விட்டுக் கோபமாய்த் திரும்பிப் போனாள் பார்வதி.

தூக்கத்தில் நடப்பவனைப் போல அவளைப் பின்தொடர்ந்து கூடத்தை அடைந்தான் வடிவேலு.

அங்கே அவன் அத்தான் சிங்காரம் 'பெட்ரோமாக்ஸ்' விளக்கு ஒன்றின் ஒளியில் படித்துக் கொண்டிருந்தார். ''என்ன புத்தகம் அது?'' என்ற தாராவின் கேள்விக்கு ''ரோமியோ அண்ட் ஜூலியட்'' என்று பதில் கிடைத்தது அவரிடமிருந்து.

''டிராஜடி'' என்றாள் தாரா. ''சோகமான முடிவுள்ள கதைகள் மனத்தில் எவ்வளவு கலபமாக நிலைபெற்று விடுகின்றன, பார்த்தீர்களா? அத்தகைய உயரிய கதா பாத்திரங்களை மறப்பது என்றென்றைக்கும் சாத்தியமேயில்லை.'' நாவல் பழத்தை நினைவூட்டும் அவள் விழிகள் அகன்ற அந்த நயனங்களுக்குள் நகர்ந்து ஓர் ஓரமாய் ஒதுங்கி வடிவேலுவை நோக்கின.

அவள் அடர்த்தியான புருவங்கள் நெரிந்து மேலெழுவதையும் நெற்றியில் மூன்று மடிப்புக்கள் விழுவதையும் கண்டதும் அவன் சற்று நிம்மதியுற்றான். 'சிந்தியுங்கள்; என்னுடைய நிலையில் இருந்து யோசியுங்கள். கோபத்தைத் தவிர்த்து அனுதாபம் காட்டுங்கள்' என்று இலேசாகத் துடித்த அவள் இதழ்கள் இறைஞ்சுவது போல் இருந்தன வடிவேலுவுக்கு.

இந்தச் சிறு நாடகத்தைக் கவனியாதவராக முத்தையா சாய்வு நாற்காலியை விட்டு எழுந்து வந்தார். ''மாப்பிள்ளையை நிச்சயம் செய்ததும் ஊரிலே எல்லாரும் என்னைக் கேலி பண்ணினாங்க. தேடித் தேடி அலைஞ்சு பி. ஏ. படிச்ச பெண்ணுக்குப் பத்தாவது கூட எட்டிப் பார்க்காத புருஷனைக் கண்டு பிடிச்சதாக வம்புக்கு இழுத்துச் சிரிச்சாங்க. அவங்களை அன்னைக்கு நான் எப்படி மட்டம் தட்டினேன்?'' என்று கேட்ட முத்தையா தரையைச் சவுக்கத்தால் தட்டி விட்டு உட்கார்ந்தார்.

'' சிங்காரத்துக்குச் சொத்து இருக்குது; பாருகிட்டே படிப்பு இருக்குது. தராசிலே இரண்டு தட்டிலேயும் எடை சமமாயிடுச்சோ இல்லையோ? அப்படன்னு கேட்டேன். அப்பாலே ஒரு பய



கி. ராஜேந்திரன்

வாவது வாயைத் திறந்தானா? கிடையாது. மாப்பிள்ளை பாருவை வைச்சுக் காப்பாத்துவார்; இவன் அவருக்கு இங்கிலீஷ் கற்றுக் கொடுப்பான். ஒருவரை ஒருவர் எதிர்பார்த்து வாழுறபோது சந்தோஷத்துக்குக் குறைச்சல் இல்லே என்றேன். என்றைக்குமே என் வாக்குப் பலிக்கத்தான் செய்யும்'' என்று பெருமைப் பட்டுக் கொண்டார்.

பாரு முகம் சிவக்க நாணிக் கோணினாள்; சிங்காரம் தர்மசங்கடப்பட்டு நெளிந்தார்; வடிவேலு தனக்குள் மனக் கசப்புடன் சிரித்தான்.

'நீங்களும் உங்கள் ஓட்டைத் தராசும்! எல்லாருடைய வாழ்க்கையையும் நீங்களேதான் வகுத்துத் தர வேண்டுமா? அவரவர்களை வாழ விடுங்கள் அப்பா! நாளையே அவர்கள் செத்தொழிந்தாலும் பரவாயில்லே. இன்று அவர்களை வாழ விடுங்கள். தங்கள் தலையில் தாங்களே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டாலும் அவர்கள் உங்களை வெறுக்க மாட்டார்கள். ஆனால் இப்போது? உங்கள் விருப்பப்படி நடந்து உங்களைத் திருப்திப்படுத்துவதெல்லாம் உங்கள் மீதுள்ள அன்பினால் என்று நினைக்கிறீர்கள்? உங்களை மனத்துக்குள் நன்றாகச் சபித்துக் கொண்டே உங்கள் சொற்படி கேட்டுச் செயலாற்றுவது மிக மிக இலகுவான காரியம் என்பது உங்களுக்கு ஏன் தெரியாமல் போயிற்று?'

மூவருடைய உள்ளங்களிலும் உள்ளதை உள்ளபடியே முத்தையா அறிந்து கொள்ள முடியுமானால் அடுத்த கணம் அவருக்கு மாரடைப்பே ஏற்பட்டாலும் ஏற்படும் என்று எண்ணினான் வடிவேலு.

பட்டணத்திலே படித்த பாரு அங்கேயே நவநாகரிக நாரீமணியாகக் குடியேற ஆசைப்பட்டாள். கணவன் நிலபுலன்களை விற்றுக் காசாக்கிக் கொண்டு தன்னுடன் வர வேண்டும்; அங்கே ஒரு பங்களா கட்டி அதில் வாசம் புரிந்தவாறே கார் வாங்கி அதில் உல்லாசச் சவாரி செய்து கடற்கரை, சினிமா, நாடகம் என்று நாளைக்கொன்றாகப் போய் வரவேண்டும்; விதம் விதமாக அலங்கரித்துக் கொண்டு நடக்கும் போது எத்தனை தலைகள் ஒடிந்து திரும்பும் தன் அழகை இன்னும் சில கணங்களேனும் கண்டு களிக்க? இங்கே வயிற்றைத் தூக்கிக் கொண்டு அடுப்பங்கரையில் அடைந்து கிடக்க வேண்டியிருக்கிறதே?

சிங்காரம் இதுவரையில் ஒரு லட்சம் தடவைகளாவது ஷேக்ஸ்பியரை 'நாசமாய்ப் போக!' என்று வாழ்த்தியிருப்பார். ஆங்கில மொழியைக் 'குரங்கு பாஷை. சனியன், கழுத்தறுக்கிறது' என்று திட்டி யிருப்பார். சொத்து இருந்து என்ன பிரயோசனம்? அதை இஷ்டப்பட்டபடி செலவழித்துத் தம் இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்ளச் சுதந்திரமில்லையே? பழிச் சொல்லுக்குப் பயந்து சாக வேண்டியிருக்கிறதே என்று புழுங்கிக் கொண்டிருந்தார். ஒரு சக்குபாய் அவரை ஏய்த்துச் சதி செய்து விட்டால் என்ன? பணத்துக்கு அடிமைகளான அணங்குகள் அகப்படாமலா போய் விடுவார்கள்? அவர்களைப் பற்றிய கற்பனைகளில் ஈடுபட்டுக் கருத்தழிவதோடு நிற்க வேண்டியதுதானா?

வடிவேலு முத்தையாவுடைய மகன் என்ற பட்டத்தைக் கேட்கும்போதெல்லாம் பற்றி எரிந்தான். வடிவேலுவுடன் வடிவேலு என்கிற முறையில் எல்லாரும் என்றைக்குப் பேசிப் பழகப் போகிறார்கள்? 'பாடுபட்டு நான் சேர்த்த சொத்தெல்லாம் உனக்குத்தானேடா' என்று முத்தையா கூறும்போதெல்லாம் ஏதோ கை நீட்டித் தானம் பெற்றுக் கொள்வதுபோல் தோன்றும் அவனுக்கு. யாருக்கு வேண்டும் இவர் சொத்து? எனக்குத் தேவை தனித் தன்மை. அந்தத் தனித் தன்மையைப் பெற வடிவேலு, பட்டாளத்தில் சேர்ந்து வீராதி வீரனென்று பேரெடுக்கப் பேரார்வம் கொண்டிருந்தான். அந்த எண்ணத்தைத் தெளிவாக வெளியிட்டுவிட இப்போது தைரியத்தைத் திரட்டிக் கொண்டிருந்தான் வீரன் வடிவேலு.

துவையலைச் சுவைத்த முத்தையா, ''பாதி வெங்காயத்தை இதிலே சேர்த்து வைச்சு அரைச்சதும் வாசனை கமகமன்னு எப்படித் தூக்குது பார்த்தீங்களா?'' என்று அதன் ருசியை ரசித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவர்கள் அனைவரையுமே உலுக்கிப் போடுகிற தகவலை அந்தச் சமயத்தில் வெளியிட்டாள் தாரா.

''ஊருக்குத் திரும்பலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள் அவள்.

''என்ன? என்ன?'' என்று ஏக காலத்தில் எல்லோருமே கேட்டார்கள்.

''வந்து இரண்டு மாதங்களுக்கு மேலாகிறதே! என்றைக்கேனும் ஒரு நாள் திரும்பிப் போக வேண்டியவள் தானே? குழந்தையும் தாத்தா பாட்டியைப் பார்க்க வேண்டுமென்று ஏங்கிக் கொண்டிருக்கிறான்.''

'தேனூர் அவளுடைய ஊர் அல்லவா? சொந்தமாக அவளுக்கு வேறு ஓர் ஊர் இருக்கிறதா? அவளுக்கு உற்றார் உறவினர்கள் தாங்கள் இல்லையா? வேறு மனிதர்கள் இருக்கிறார்களா?'— இந்த உணர்வு உருவாக்கிய திகைப்பி

விருந்து அவர்களில் யாருமே மீளவில்லை. கையில் இருந்த அன்னம் அங்கேயே இருந்தது. இலையில் இருந்த பொருள்களும் அப்படியே கிடந்தன.

ஒருவாறு அவர்கள் விழித்துக்கொண்டதும் எல்லாரும் ஏக காலத்தில் பேசினார்கள். அனைவருமே ஏதேதோ காரணங்களுக்காகத் தடை விதித்தார்கள்.

''ஆறு மாதங்கள் இங்கே இருக்கப் போவதாகச் சொன்னீர்களே?'' என்றார் முத்தையா.

''பாருவுக்குக் குழந்தை பிறந்த பிற்பாடு கிளம்பக் கூடாதா?'' என்றாள் அவர் மனைவி.

பள்ளிக்கூடத்தையும் அவளைப் பிரிந்து ஏங்கக் கூடிய குழந்தைகளையும் நினைவூட்டினார் சிங்காரம்.

உரிமையோடு தோழியிடம் கோபித்துக் கொள்ளவே செய்தாள் பாரு.

வடிவேலு மட்டிலும் மௌனம் சாதித்தான், அவளுடன் தனித்துப் பேசுகிற சந்தர்ப்பம் கிடைக்கிற வரை.

அடுத்த நாள் பள்ளி முடிந்து தாராவைத் தவிர மற்ற அனைவரும் வீடு திரும்பும் வரை காத்திருந்து அந்தப் பக்கமாய்ச் சென்றான். வழக்கமாகத் தன் அலுவல்களை விட்டு விட்டு அந்நேரத்தில் அவனுடன் அளவளாவத் துணியாதவள் இன்று அவனுக்கு ஏமாற்ற மளிக்கவில்லை. வடிவேலுவை எதிர்நோக்கியே விநாடிகளை எண்ணிக் கொண்டிருந்தவள் போல் பேனாவைக் கீழே மூடி வைத்து விட்டு அவள் நிமிர்ந்தாள். அவள் எதிரே இருந்த சிறிய மேஜையை இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் வடிவேலு.

''தாரா! நிஜமாகவே நீங்கள் காண்பூருக்குத் திரும்பிச் செல்ல முழு மனத்துடன் முடிவு செய்திருந்தால் நான் குறுக்கே நிற்கப் போவதில்லை. ஆனால் நீங்கள் இவ்வளவு சீக்கிரமாக அந்தத் தீர்மானத்துக்கு வர, என்னுடைய நடத்தைதான் தூண்டுகோலாகி விட்டதோ என்று எனக்கு ஒரு சந்தேகம். நான் உங்களிடம் எவ்விதத்திலாவது, தவறுதலாக நடந்து கொண்டிருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்; அல்லது ஏதாவது தண்டனை அளியுங்கள், சந்தோஷமாக ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அதற்காக உங்களுக்கு மிகவும் பிரியமான இந்தப் பள்ளிக்கூடத்தை விட்டுப் போகாதீர்கள். இந்த ஊர்க் குழந்தைகளையெல்லாம் கதற விட்டு விட்டுச் சென்று விடாதீர்கள்!'' என்று தாழ்மையுடன் கெஞ்சாத தோஷமாகக் கேட்டுக் கொண்டான் வடிவேலு.

## அத்தியாயம் 36

# தாரா கைதானாள்!

ஆனந்தக் கண்ணீரும் துயரக் கண்ணீரும் ஒன்றாகச் சேர்ந்து பெருக்கெடுக்கத் தாரா உதடுகளை உள்ளுக் கிழுத்துக் கடித்துப் புலம்பலை மிகுந்த பிரயாசைப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

வடிவேலுவின் நல்ல இதயத்தையும் அவன் தன் நலனில் கொண்டுள்ள அக்கறையையும் எண்ணி அவள் நெகிழ்ந்து போனாள். அத்தகைய ஓர் உத்தமரின் அன்பைத் தான் பெற்றதற்காக உவகையுற்றாள். அதே நேரத்தில் தான் ஆரம்பித்த நற்பணியை அரைகுறையாக அப்படியே நிறுத்தி விட்டுத் தன்னிடம் அளவில்லாத ஆசை வைத்துச் சுற்றிச் சுற்றி வந்த இளம் சிறார்களையும் விட்டு வெகு தூரம் செல்லப் போவதை நினைத்துப் பார்க்கும் போதே அவளால் துன்பத்தைத் தாங்க முடியவில்லை. இருள் சூழ்ந்த எதிர்காலமாய்க் கருதியிருந்த வாழ்க்கையில் பிரகாசமான தங்கள் கண்களால் ஒளி உண்டாக்கி வைத்துத் தன் உள்ளம் குளிரச் செய்த அந்தப் பாலகர்களை எப்படித் துறந்து விட்டுப் போவது? வருத்த மிகுதியில் வழவழப்பான தாராவின் கன்னக் கதுப்புக்கள் இலேசாகத் துடித்தன.

''நான் ஊருக்குத் திரும்பப் போவதென்னவோ நிச்சயம்தான். ஆனால் நீங்கள் அதற்கு எந்த விதத்திலும் பொறுப்பாளியல்ல; சத்தியம் வேணுமானாலும் செய்யத் தயார்!'' என்றபோது அடித்துக் கூறுகிற மாதிரி வார்த்தைகள் வெளிவர வில்லை; கெஞ்சிக் கதறுகிற பாவம் அதிகமாக இருந்தது.

''நீங்கள் படித்துப் படித்துச் சொன்னாலும் எனக்கு நம்பிக்கை பிறக்காது, தாரா! என்னுடைய போக்கு உங்களுக்குப் பிடிக்காமல் போகவே என் மண்டையில் அடித்து மரியாதை கற்றுக் கொடுக்க நீங்கள் அன்று முயன்றதாகவே தோன்றுகிறது.....'' தன் வாயைப் பொத்தி அத்தகைய பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைக்க முற்பட்ட தாராவின் தளிர்க் கரங்களை வடிவேலு தன் உள்ளங்களுக்கிடையில் வைத்துப் பொத்திக் கொண்டு மேலே கூறி



முடித்தான்: "இனி நான் உங்களைத் தொந்தரவு செய்யவே மாட்டேன். ஒதுங்கியிருக்கிறேன்; இல்லை, இந்த ஊரை விட்டே போய் விடுகிறேன். உங்கள் யோசனைப்படி பட்டாளத்தில் சேருகிறேன். ஆனால் தயவுசெய்து நீங்கள் உங்கள் முடிவை மட்டிலும் மாற்றிக் கொள்ளுங்கள்!"

ஒரு பெருமூச்சுடன் தாரா தன் கரத்தைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டாள். அவள் விரல்கள் மட்டுமல்ல, அவளே தன்னிடமிருந்து விலகி எங்கோ புலன்களால் எட்டிப் பிடிக்க முடியாத தொலைவில் மங்கி மறைந்து கொண்டிருப்பதாய்ப் பிரமை தட்டியது வடிவேலுவுக்கு.

"உங்களிடம் உண்மையை வெளியிடாமல் தப்ப வழியில்லை; கேளுங்கள்" என்றாள் தாரா. அன்றிரவு நடந்ததை ஆதியோடந்தமாய் விவரித்தாள்.

மழையில் நனைந்து கரம் கோத்தபடி அவர்கள் ஓடி வருகையில் ஒரு மின்னல் பளிச்சிட்டுப் பள்ளிக் கூடத்தின் தாழ்வாரத்தில் பொன்னம்பலம் நிற்பதைத் தாராவுக்கு எடுத்துக் காட்டியது. பின்னர் இருவருமாக அதே இடத்தை அடைந்ததும் அவரை அங்கே காணோம். மர்மமாக இருக்கிறதே என்று எண்ணிய தாரா, வாசல் கதவின் பூட்டை உலுக்கினாள். அது திறக்கப் பட்டிருப்பதை அறிந்து கொண்டாள். உடனே அவளுக்கு ஆற்றங்கரையில் வடிவேலுவுடன் தான் அளவளாவிக் கொண்டிருக்கையில் நாணல் புதர்களுக்கிடையில் உண்டான சலசலப்பு ஞாபகம் வந்தது. பொன்னம்பலம் தான் அங்கே ஒளிந் திருந்து பார்த்து விட்டு இங்கே

யும் உளவறிய வந்து மறைந்திருக்கிறார் என்பதாக முடிவு கட்டினாள். வடிவேலு எச்சரிக்கையாக இருக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்த, பூட்டு திறந்திருப்பதையும் சூசகமாக அவனுக்குத் தெரியப்படுத்தினாள். ஆனால் அவன் அப்போது அவளைப் புரிந்துகொள்ளுகிற நிலையில் இல்லை. அவளிடம் தன் இதய தாபங்களைக் கொட்டித் தீர்க்க யத்தனித்தான். ஆகவே தாரா அவனை முந்திக் கொண்டு பொன்னம்பலத்துக்கு அதிருப்தி உண்டாகாததோடு மகிழ்ச்சியே உண்டாகும் விதத்தில் பேச்சின் திசையை மாற்றினாள். இருவரையும் சூழவிருந்த பேராபத்தினைத் தவிர்த்தாள். பின்னால் தான் சிமாச்சவுக்கு இந்தச் சம்பவத்தில் ஒரு சம்பந்தமுண்டு என்பது அவனுக்குப் பொன்னம்பலம் கூறத் தெரிய வந்தது.

எல்லாவற்றையும் கேட்டு முடித்ததும், ''அப்படியானால்... தாரா! அந்தக் குள்ளநரி இங்கே இல்லாமல் இருந்திருந்தால் அல்லது அந்தச் சனிசுவரன் இங்கிருப்பதை நீங்கள் அறியாமல் இருந்திருந்தால் உங்கள் பதில் வேறு விதமாக இருந்திருக்கும் என்கிறீர்களா?'' என்று கேட்டான் வடிவேலு.

''அவரை வையாதீர்கள்!'' என்றாள் அவள். ''ஆண்டவனே அவரை அங்கே அனுப்பி வைத்ததுடன் அவர் அங்கிருக்கிறார் என்பதை எனக்குப் புலப்படுத்த ஒரு மின்னலையும் ஏவி விட்டார் என்று கருதுகிறேன். கடவுள் என்னிடம் அன்று காட்டிய கருணை கொஞ்சநஞ்சமல்ல!''

வடிவேலுவின் இதயம் ஆனந்தக் கூத்தாடியது. 'தாரா! பிரவாகமாய்ப் பொங்கிப் பெருக்கெடுக்கின்ற நனிமான உணர்ச்சிகளை நீங்கள் யாரும் கண்டு பிடித்து விடாதபடி மனத்துக்குள்ளேயே பூட்டி வைத்துக் கொண்டிருந்தீர்கள். பொன்னம்பலம் எளிதாகப் பூட்டைத்



திறந்து எனக்கு உங்களைக் காட்டிக் கொடுத்து விட்டார்! என்னைப் பற்றிய எண்ணக் குவியல்களை நெருக்க வலித்தாலும் பரவாயில்லை என்று அடக்கி ஒடுக்கி உள்ளத்துக்குள்ளேயே ஒளித்து வைத்திருந்தீர்கள். பொன்னம்பலம் இங்கு ஒளிந்திருந்ததன் மூலம் அவற்றை நான் தெரிந்து கொண்டு பூரிக்கச் செய்திருக்கிறார். தாரா! நீங்கள் என்னிடம் இப்போது வகையாக மாட்டிக் கொண்டீர்கள்!'

தாராவின் உடல் வெட வெட வென்று நடுங்கிக் கொண்டிருந்தது. 'அன்றிரவு தெய்வாதீனமாகப் பொன்னம்பலம் இங்கு வராதிருந்திருந்தால் நாம் எப்படி நடந்து கொண்டிருப்போம் என்று நினைத்துப் பார்த்தபோது ஏற்பட்ட நடுக்கம்தானே அது?'

வடிவேலு நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்பினான். தந்திரமாகப் பேசினான்:

''தாரா! இந்த நிலைமையில் நீங்கள் ஊர் திரும்புவது பற்றி யோசிப்பதற்கே இடமில்லை. அதை அடியோடு மறந்து விட வேண்டியதுதான்'' என்றான்.

''ஏன்? என் மீது இப்போது சிமோச்ச சுமத்தியிருக்கும் பழி போதுமான காரணமாகப் படவில்லையா உங்களுக்கு?''

''அப்படி அவர் தகாத வகையில் உங்களைத் தாக்கியிருப்பதால்தான் நானும் சொல்கிறேன், தாரா! உங்களுக்கு விளங்கவில்லையா? இப்போது நீங்கள் புறப்பட்டால் காதல் நாடகம் ஆடுவதாக அவர்கள் கூறியது உண்மை என்றல்லவோ ஆகி விடும்? ஏதோ தவறான காரியத்தைச் செய்து கொண்டிருக்கையில் கையும் மெய்யுமாகக் கண்டு பிடிக்கப்பட்டதால் தப்பித்துக் கொண்டு ஓடியதாக அல்லவோ அர்த்தம் செய்து கொள்வார்கள்? அவர்கள் கூறுவதெல்லாம் அபாண்டப் பொய் என்பதை நிரூபிக்க நீங்கள் இங்கே தங்கியிருந்துதான் ஆகவேண்டும். குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்று எதிர்த்துப் போராடியே தீர வேண்டும்!''

''ஆமாம்'' என்றாள் தாரா மெல்லிய குரலில். ''அவர்கள் சொல்வதிலெல்லாம் லவலேசமும் நிஜக் கலப்பு இல்லை என்னும் பட்சத்தில் நான் தொடர்ந்து இங்கேயே தங்கியிருக்க வேண்டும்தான். வதந்திகளை வெற்றி கொள்ள வேண்டும்தான். ஆனால்... ஆனால்... நான் கான்பூருக்குத் திரும்பி விடவே ஆசைப்படுகிறேன்.''

தன் இருதய தாளத்துக்கு ஏற்ப மூச்சுக் காற்று எழுப்புகிற இனிய காதல் கீதத்தைத் தாராவின் இதயமும் சுவாசமும் எதிரொலித்துக் கொண்டுதான் இருந்தன! தன்னைச் சுற்றிச் சூழ்ந்த இந்த இன்னிசைகளின் சுகானுபவத்தில் அமிழ்ந்து விட்டான் வடிவேலு.

எவ்வளவு நேரம் அவர்கள் இப்படி மனத்தாலும் கண்களாலும் ஒன்றியிருந்து அந்தக் காதல் கீதத்தை ரசித்துக் கொண்டிருந்தார்களோ, அது அவர்களுக்கே தெரியாது. முடிவற்ற இன்னிசையை எல்லையற்ற இன்பத்துடன் அவர்கள் காலமெல்லாம் கருத்தொருமித்துக் கேட்டுக் குதூகலிக்கத் தயார்தான். ஆனால் சாத்தியமான காரியமா அது?

அவர்களை இந்த உலகுக்குக் கொண்டு வந்து சேர்த்தாள் பாரு. ''தாரா! பெட்டியில் சாமான்களையெல்லாம் நீ எடுத்து அடுக்கி வைத்திருப்பதைப் பார்த்தேன். எனக்குத் 'திக்'கென்றிருந்தது. அதனால்தான் ஓடி வந்தேன். தாரா! நிஜமாகவே நீ தீர்மானித்து விட்டாயா? என் மீது ஆசையில்லையா உனக்கு? நீ இங்கே வந்து முழுசாக மூன்று மாதங்கள்கூட ஆகவில்லையே, தாரா!'' என்றாள் மிகுந்த ஆதங்கத்துடன்.

அவள் கேசத்தை வருடியவாறே உருக்கமாகக் கூறினாள் தாரா. ''பாரு! கொஞ்ச நாட்கள்தான் இருந்திருக்கிறேன் என்று சுட்டிக் காட்டுகிறாய். கொஞ்ச நாட்களுக்குள்ளாகவே பிரிவது என்பது இவ்வளவு கஷ்டத்தை நமக்குக் கொடுக்கிறதென்றால் இன்னும் நாளாக ஆக நான் உங்களை விட்டுச் செல்வது எவ்வளவு சிரமமாக இருக்கும்? யோசித்துப் பார்! எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாகக் கிளம்புகிறேனோ அத்தனைக்கத்தனை நமக்குத் துயரம் குறையும், பாரு!''

தாரா வடிவேலுவின் பக்கமாகத் திரும்பினாள். ''உங்களுக்குப் புரிகிறதல்லவா? உங்கள் தங்கைக்கு எடுத்துச் சொல்லுங்கள்!''

தாராவின் மடியில் சிரத்தைக் கவிழ்த்திருந்த பாரு, சர்ப்பம் போலத் தலையைத் தூக்கினாள். ''அண்ணா! இவளைப் போகக் கூடாதென்று சொல். மீறிப் பிடிவாதம் செய்தால் இந்த அறையிலேயே இவளை வைத்துப்பூட்டு!''

''பாரு! தாரா போக விரும்பினால் தடை விதிக்க நமக்கு உரிமை இல்லை. அதுதான் தனக்கு நல்லது என்று அவள் முடிவுக்கு வந்திருக்கும் போது, அவளிடம் நமக்குள்ள ஆத்மார்த்தமான அன்பின் அடையாளமாக, சந்தோஷமாகப் போய் வாருங்கள் என்று சொல்லி அனுப்பக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் நமக்காக அவள் இன்னும் ஒரே ஒரு நாள் பிரயாணத்தை ஒத்திப் போடலாம்!'' என்றான் வடிவேலு.

'நன்றி! நன்றி!' என்று ஆயிரமாயிரம் தடவைகள் மொழிந்தன அவள் விழிகள்; உவகைப் பெருக்கை உணர்த்தின; பல நாட்கள் மாதங்கள் வருஷங்களுக்குப் பிறகு அவள் மனம் நிரந்தரமான நிம்மதியை அடைந்திருப்பதைப் பலப்படுத்தின. சிரிப்பு கொப்புளிக்க அவள், ''அதற்கென்ன? நாளையே புறப்படுகிறேன்'' என்றாள்.

''சந்தோஷத்தைப் பார், சந்தோஷத்தை!'' என்று அவன் காதைப் பற்றித் திருகினாள் பாரு. ''அன்று உன் பக்கம் சேர்ந்து கொண்டதும் உனக்குத் தலைகால் புரியவில்லை! பிள்ளைத்தாச்சியை அழவிடப் போகிறோமே என்ற அக்கறைகூட இல்லாமல் நீ சிரிக்கிறாய்!''

பாருவின் முகத்தை இரு கரங்களாலும் ஏந்தித் தாரா ஆறுதல் கூறிக் கொண்டிருக்கையில் வடிவேலு அங்கிருந்து நழுவிச் சென்றான்.

**ம**றுநாள் அந்தக் கிராமத்தில் விடிந்ததும் விடியாததுமாக எல்லாரையும் கதிகலங்க அடித்தது ஒரு நிகழ்ச்சி.

'சைட்—கார்' இணைக்கப்பட்டிருந்த ஒரு மோட்டார் சைக்கிளில் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் வந்திறங்கினார். அவருடன் வேறு இரு போலீஸ் ஜவான்களும் இருந்தனர். மூவரும் மூன்று வீடுகளுக்குள் நுழைந்து ஒரே மாதிரியான மூன்று கேள்விகளைப் போட்டனர். ''தாரா என்ற பெயர் கொண்ட ஒரு பெண் தேனூருக்கு வந்திருக்கிறாளா? கதர் கட்டியிருப்பாளல்லவா அவள்? எந்த வீட்டிலே வசிக்கிறாள்?''

மூன்று வீடுகளைச் சேர்ந்தவர்களும் பரபரப்புடன் வாசலுக்கு வந்து முத்தையாவுடைய இல்லத்தைச் சுட்டிக்காட்டினார்கள். போலீஸ்காரர்கள் பின்தொடர்ந்து வர, குறிப்பிட்ட அந்த வீட்டை அடைந்தார் இன்ஸ்பெக்டர். வாசல் கதவைத் தட்டி முத்தையாவிடம், ''தாராவைப் பார்க்க வேண்டும். அழைத்து வாருங்கள்!'' என்று அதிகாரத் தோரணையில் கட்டளையிட்டார்.

இதற்குள் வீதியில் ஒரு சிறிய கூட்டம் கூடி விட்டது. அவர்களின் முன்னணியில் நின்றார் சீமாச்சு. துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, ''ஏட்டய்யா! எதற்காக அந்த அம்மாளைத் தேடறேள்?'' என்று கேட்டார்.

''இதெல்லாம் ராஜாங்க விவகாரம். நீங்க ஏன் இதிலே தலையிட்டுக்கிடறீங்க?'' என்று பதிலுக்கு வினவினார் அந்தப் போலீஸ்காரர்.

''அப்படியானும் சரி, கொஞ்சம் கோடி காண்பிச்சு விடலாமாக்கும் நீங்கன்னு நெனச்சேன்.''

ரகசியத்தைத் தமக்குத் தாமே அடக்கி வைத்துக் கொள்ள முடியாமல் திணறுபவராகத் தவித்தார் ஹெட் கான்ஸ்டபிள். பிறகு இன்ஸ்பெக்டர் மீது கண்ணோட்டம் செலுத்தி விட்டு மெல்லிய குரலில், ''அதோ அவருக்குத் தெரிஞ்சால் என் வேலையே கோவிந்தாவாகி விடும். நீங்க நச்சரிக்கிறதுனாலே சொல்றேன். அந்த அம்மாளைச் சுபாஷ் சந்திர போஸ் தான் இங்கே அனுப்பி வைச்சிருக்கிறாராம். அரசாங்கத்துக்கு எதிரா ஏதேதோ சதித்திட்டங்களெல்லாம் போட்டு வருகிறாங்களாம். இல்லாத போனால் கான்பூரிலே ஏகமா சொத்து இருக்குது. சுகமா வாழறதை விட்டு விட்டு இந்தக் குக்கிராமத்தைத் தேடி வருவானேன்? சந்தேகத்தின் பேரிலே அரெஸ்ட் பண்ணிக் காவலோடே டெல்லிக்குக் கூட்டிக்கிட்டு வரணும்னு ஆர்டர் வந்திருக்குது!''

பலமாகத் தலையாட்டினார் சீமாச்சு. ''ஓகோகோ! அந்த விஷயம் டில்லி வரைக்கும் எட்டிடுத்தா? இதிலே எனக்கொண்ணும் அதிசயமே யில்லே. ஏற்கெனவே நான் எதிர்பார்த்ததுதான்!''

ஆனால் தாரா வியப்புடன்தான் நோக்கினாள், இன்ஸ்பெக்டர் தன் கரங்களுக்குப் பூட்டவிருந்த விலங்கை. 'ஏதோ சொப்பனம் காண்கிறோமா? எனக்கா விலங்கு? எதற்கு? தேசபக்தர் உமாகாந்தின் மனைவி என்பதற்காகவா? அல்லது அவரை விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடக் கூடாதென்று தடுத்து நிறுத்த முற்பட்ட பாபத்துக்கா?'

சில்லென்று இரும்பு மணிக்கட்டுகளில் பட்டதும் ரோமாஞ்சனம் உண்டாயிற்று அவளுக்கு. விலங்குகள் கனத்துக் கரங்களில் தொங்கிய போது அடிக்கடி அவள் பார்த்திருக்கும் ஒரு படம் அவள் மனக் கண்ணெதிரே தோன்றியது. கைகளும் கால்களும் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருக்கத் துயரமே வடிவாகச் சிரம் சாய்த்து நிற்கும் பாரத மாதாவின் அவலக் கோலம் அது.

அழவில்லை அவள்; அவமானம் என்று பொருமினாள்! கண்ணீர் உகுக்கவில்லை நயனங்கள்; கரங்களைக் கவ்வியிருந்த விலங்குகளை அனல் தெறிக்க நோக்கின! 'மானிலத்தாய் அடிமையாக உழலுவதை உறுதிப்படுத்தும் ஞாபகச் சின்னம் அது! அவள் விடுதலை பெற நாம் சிறைவாசத்துக்குச் சித்தமாய்த்தான் இருக்க வேண்டும்!'

''அழைத்துப் போங்கள் என்னை!'' தாராவின் கணீரென்ற குரல் கேட்டு அனைவரும் அதிசயித்தனர். (தொடரும்)



கல்கி
2.9.62 இதழில்
ஜெகசிற்பியன்
எழுதும்
பத்தினிக்கோட்டம்
புதிய வரலாற்று நவீனம்
ஆரம்பமாகிறது

# இன்ப நறுமணம் உள்ள ஹமாம்

## என் சருமத்துக்கு இதமளிக்கிறது






*

தாவர எண்ணெய்களின் விசேஷக கலவை ஹமாமைக் கடைசி வரையில் உறுதியாகவும் நறுமணத்தோடும் இருக்கச் செய்கிறது. ஹமாம் வில்லை ஒவ்வொன்றும் நெடுநாள் உழைக்கிறது என்பது ஞாபகமிருக்கட்டும்.

டாடா தயாரிப்பு



என் குடும்பத்தினர் அனைவரும் விரும்புவது ஹமாம். அதில் மறைந்திருக்கும் குணம்* எனக்கு மிச்சப்படுத்த உதவுகிறது



ஹமாமின் அளவு கடந்த நுரை எனக்குப் பிடித்திருக்கிறது.



ஹமாம் ஸ்நானத்தினால் அதிகப்படி புது மலர்ச்சியை அடைகிறேன்!

THY-22-TAM

# 'யாரோ ஒருவருக்கு

கூடையில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த வாழைப்பழச் சீப்பு கண்களைக் கவர்ந்தது. நன்றாக விளைந்த மலை வாழைப்பழம். விலை கேட்டேன். டஜன் எட்டணா என்றார் கடைக்காரர். அந்த விலை பெறுமான சரக்குத்தான். நான் போகவிருந்த உறவினர் வீட்டில் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகம். 'நாலு டஜன் எடு' என்று சொல்லி விட்டுப் பக்கத்துக் கடைக்குச் சென்று வெற்றிலை பாக்கு வாங்க முனைந்தேன்.

நான் வெற்றிலை பாக்கு வியாபாரத்தை முடித்துக் கொண்டு திரும்பும் போது பழக் கடைக்காரன் நான்கு டஜன் பழங்களையும் எடுத்து எண்ணி அழகாக ஓர் ஓலைப் பெட்டிக்குள் வைத்துக் கட்டி விட்டான். மீண்டும் அவன் முன்னால் பழங்களை எடுத்து எண்ணுவதோ, அல்லது பழத்தின் தரம் மாதிரியாகச் சீப்பில் தொங்கும் இனத்தைச் சேர்ந்தது தானா என்று பார்ப்பதோ நாசூக்குக் குறைவான காரியமாகத் தோன்றியது. பழக் கூடையை எடுத்துக் கொண்டு பஸ்ஸைப் பிடித்தேன்.

உறவுக்காரர்கள் வீட்டில் போய்க் கூடையைக் கொடுத்து விட்டுப் பேசிக் கொண்டிருந்தேன். உள்ளேயிருந்து வந்த குழந்தை ஒன்றின் கையில் எலிக்குஞ்சு போன்ற வாழைப்பழம் ஒன்று இருந்தது.

"பாலு! நான் பெரிய வாழைப் பழமாக வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். உள்ளே அம்மாகிட்டே கேட்டு வாங்கிக்கோ!" என்று அந்தக் குழந்தையைத் தூண்டினேன். சில வீடுகளில், விருந்தாளிகள் கொண்டு வரும் பண்டங்களைக் குழந்தைகள் தூங்கிய பிறகோ, அல்லது குழந்தைகள் கண்களில் காண்பிக்காமலோ பெரியவர்களே 'ஸ்வாஹா' பண்ணுவது எனக்குத் தெரியும். குழந்தைகளுக்கு என்று நினைத்து வாங்கி வந்தால் அவற்றை அவர்கள் தின்ன வேண்டும் என்று ஆசையிருக்காதா?

"நீ வாங்கிண்டு வந்த பழம்தான் மாமா! அக்காதான் கூடையைப் பிரிச்சு எடுத்துக் கொடுத்தா! ஏன் மாமா இவ்வளவுண்டு பழத்தை வாங்கிண்டுவந்தே? கையிலே காசு இல்லியா மாமா?" என்று மழலை மொழிகளில் அந்தக் குழந்தை குண்டைத் தூக்கிப்போட்டது; எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

பழக் கடைக்காரர் என்னை ஏமாற்றியிருக்கிறார். நான் கவனிக்கவில்லை என்ற காரணத்தைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு டஜன் நாலணாக் கூடப் பெறாத பழத்தை எண்ணித் தள்ளியிருக்கிறார் என்னிடம். எண்ணிக்கையில்கூட ஒன்றிரண்டு குறைந்திருக்கலாம். இந்த ஏமாற்று வித்தைக்கு என்ன காரணம்? நாலணா பெறுமான பண்டத்தை எட்டணா விலைக்குத் தள்ளி விட என்ன அவசரம்? அதிக ஆசைதானே? பேராசை தானே? நான் இனிமேல் எந்தச் சந்தர்ப்பத்திலாவது எந்தக் கடைக்காரரையாவது இந்த விஷயத்தில் நம்புவேனா? சம்பவம் என்னவோ அற்பம்தான். விடிய விடிய எனக்கு ஒரு ரூபாய் நஷ்டம். ஆனால் விளைவு! ஒரு சாரார் மீது நம்பிக்கையையே இழக்கும்படி செய்து விட்டதே. சுய லாபத்தைப் பார்க்கும் அந்த ஆசாமி தன் சமூகத்தையே எந்த நிலைக்கு ஆளாக்குகிறான்?

வீடு திரும்பிய போது மேஜை வெறிச்சென்றிருந்தது. நான் இரண்டு நாட்களுக்கு முன் அடுக்கிக் கட்டி வைத்திருந்த பழைய தினசரிப் பேப்பர்களைக் காணோம். என் திகைப்பைப் புரிந்து கொண்ட என் மனைவி, "பழைய பேப்பர் கட்டுத்தானே! நான் தூக்கிப் போட்டு விட்டேன். வாசலில் பழைய



பேப்பர் வாங்குபவன் வந்தான். ஒண்ணரை வீசையிருந்தது. ஒரு ரூபாய் பதினாலணா வாங்கி டிராயரில் போட்டிருக்கிறேன்" என்றாள் நிதானமாக.

நான் இனி பேசிப் பயன் என்ன? மூன்று வீசைப் பேப்பரை ஒண்ணரை வீசையாக நிறுத்துக் கொண்டு போயிருக்கிறான். கடை விலைக்குக் கூட வீசைக்கு இரண்டணா லாபம் என்ற ஆசையில் என் மனைவி பேப்பரைத் தள்ளி விட்டிருக்கிறாள். எனக்கு நிகர நஷ்டம்



கூண்டுக்குள் இருப்பவர்: இந்த ஆள் என்னை வடிகட்டின முட்டாள்னு திட்டினான்! இது மறுக்க முடியாத உண்மை என்பதற்கு எனக்கு நிறைய சாட்சிகள் இருக்கின்றனர்!

ஒன்னரை ரூபாய். என் மனைவியின் ஆசைக்கு நான் அளித்த அபராதமா? அல்லது அந்தப் பழைய பேப்பர்க்காரனின் மாயத் திராசின் மகிமைக்கு நான் செலுத்திய கப்பமா? கிருஷ்ண துலாபாரத்தில் பாமாவின் கிருஷ்ணன் இருந்த நிலையில் அந்தப் புண்ணியவாளனின் படிக் கல் இருக்கும். எத்தனை பேப்பர் போட்டாலும் அந்தப் படிக் கல் இருக்கும் தட்டு உயராது. அது கயிற்று வித்தை. கை லாகவம். தெரிந்தவர்களுக்குத் தெரியும். நான் வீட்டில் இருக்கும் போது ஒரு பழைய பேப்பர் வியாபாரியும் வந்து எட்டிப் பார்க்க மாட்டானே!

ஆகவே நமக்குக் கொடுப்பவர்களும் ஏமாற்றுகிறார்கள்; நம்மிடமிருந்து வாங்குபவர்களும் ஏமாற்றுகிறார்கள். பழக்காரன் சிறிய சரக்கைப் பெரிய விலைக்குத் தள்ளினான். பேப்பர்க்காரன் பெரிய சரக்கைச் சின்ன விலைக்குக் கொண்டு போனான். இருவருக்கும் தாங்கள் பிழைக்க வேண்டும் என்ற ஆசை: அதில் தப்பில்லை. ஆனால் ஒருவரை ஏமாற்றி அதிக லாபம் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருக்கிறதே, அது சரியாகுமா?

பாலைத் தண்ணீரில் கலக்கிறான் ஒருவன். ஒரு படி பால் ஒன்னரைப் படியாகிறது. அந்தத் தண்ணீரை மண்ணெண்ணெயுடன் கலக்கிறான் மற்றொருவன். நாலு புட்டி கிரோசின் ஐந்து புட்டியாகிறது.

வாழைப்பழம் தின்னாமலிருக்கலாம்; பேப்பரே படிக்காமலிருக்கலாம்; பிரச்னைகளுக்கு இடம் கொடுக்காமலிருக்க. ஆனால் காப்பிக்குப் பாலும், அடுப்புக்கோ, விளக்குக்கோ கிரோசினும் இல்லாமல் காலம் தள்ள முடியாதே! ஆகவே இரண்டு வகையிலும் நம் தேவைக்கு உபரியாகக் கிடைப்பது தண்ணீர். அவர்கள் ஆசையைக் காசாக மாற்றுவது தண்ணீர்.

ஏமாற்றுகிறவன் என்று ஒருவன் இருந்தால் ஏமாறுபவன் ஒருவன் இருந்துதானே ஆக வேண்டும்? பின்னவன் இல்லாமல் முன்னவனுக்கு அந்த விருது எப்படிக் கிடைக்கும்? அனேகமாக நடுத்தர வர்க்கம் அந்தப் பின்னவனின் சின்னமாக விளங்குகிறது. ஏழைகளுக்குத் தேவைகள் அதிகம் இல்லை. ஏமாற வாய்ப்பில்லை. பணக்காரர்களுக்கு நல்ல பொருள்களைத் தேடிப் போக வாய்ப்பு இருக்கிறது; கிடைக்கிறது. எஞ்சியவர்கள் பாடு.... ஆம்! பிறர் பிழைக்க உதவும் தியாகிகள் என்று அவர்களைச் சொல்லலாம் அல்லவா?

உளுந்துக்குப் பொருத்தமான கருப்புக் கல்லும் துவரைக்கேற்ற கலர்க் கல்லும் பொறுக்கி அசலோடு கலந்து வாழும் அன்பர்கள் எத்தனை பேரோ! ஆனால் இவையெல்லாம் மிஞ்சும் செய்திகள் இப்போது தினசரி வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

தரக்குறைவான மருந்துகள், ஆங்கிலத்தில் சொன்னால் 'சப் ஸ்டாண்டர்ட் டிரக்ஸ்' தயாரித்து விநியோகிப்பது இன்றைய நாகரிகம். டானிக் தித்திக்கும்; குடித்துக் கொண்டேயிருக்கலாம், ஆனால் குணம் மாத்திரம் ஏற்படாது. பெரிய பெரிய நடிகர்களின் பெயரை விளம்பரத்தில் போட்டு டிக்கட் விற்று, மேடையில் சோட்டா நடிகர்களைக் கொண்டு வந்து நிறுத்தி நாடகம் நடத்துபவர்கள் காட்டும் துணிச்சலை இந்த மருந்துத்தயாரிப்பாளர்களும் செய்கிறார்களே! புட்டிக்குள் இருக்கும் மருந்தில் கலந்திருப்பதாக மேலே அறிவிக்கப்பட்டிருக்கும் பல சத்துப் பொருள்கள் உள்ளே கலக்கப்படுவதேயில்லையாம்!

'ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல்லாம் கட்டி ஆளினும்...' என்று அந்தக் காலத்தில் ஒருவர் பாடி வைத்தார். அவர் காலத்தில் மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை மூன்று தான் முக்கியத்துவம் பெற்றிருந்தன. ஆனால் கால வளர்ச்சியுடன் மனித வர்க்கத்துக்கு ஒரு புது ஆசையும் தோன்றியிருக்கிறது. அதை ஏமாற்றும் ஆசை என்று சொல்லுவதில் தவறில்லையே!

ஒவ்வொரு தனி மனிதனும் தன்னைச் சுற்றியிருக்கும் சமூகத்தின் மீது மதிப்பு வைத்து அந்தச் சமூகத்தின் நன்மதிப்பைப் பெற முயன்றால் சமூகத்தின் தரம் தான் உயராதா? நல்ல நம்பிக்கைதான் வளராதா?

## யாரோ எழுதியது



# சிங்கப்பூருக்கு

# ஜெட்

## ஸர்வீஸ்!

சிங்கப்பூருக்குச் செல்ல
வாரம் 2 முறை
புதிய ஜெட் ஸர்வீஸ்!

**பிரதி வியாழக்கிழமை: மதராஸ் . சிங்கப்பூர்**

**பிரதி சனிக்கிழமை:**

**பம்பாய் . மதராஸ் . சிங்கப்பூர் . ஜாகர்த்தா**

## ஏயர்-இந்தியா

பி. ஓ. ஏ. ஸி. மற்றும் கன்டாஸ் ஒத்துழைப்புடன்

JWT-AI-3478-E (R)

# குடும்பம் முழுவதற்கும் ஏற்றது...

கால்கேட் ஆல்-பர்ப்பஸ் டால்கம் பவுடரில்
அபூர்வமான மலர்களின் மனோரம்மிய
பரிமளம் கலந்திருக்கிறது



சிக்கனமானதுடன்
பெயர் பெற்ற
கால்கேட்டின் உயர்ந்த
தரத்துடன் கூடியது






ஸ்நானத்திற்கு பின்,
உடைகளை அணிவதற்கு
முன்பும், வெளியில்
செல்லும்பொழுதும்
புத்துணர்ச்சியளிக்கும்
இச்சிறந்த பவுடரை
உங்கள் உடம்பின்மேல்
தூவிக்கொள்ளுங்கள்...



மென்மையுடன்
நேர்த்தியும்
கொண்டது...
குழந்தையின்
இளம் சருமத்திற்கு
மிகவும் ஏற்றது.

**கால்கேட்**

CAPT. 6-1. TAM

**ஆல்-பர்ப்பஸ் டால்க்**

---

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# அருணா

ஸ்திரீகள் ஆரோக்ய
சௌபாக்யத்திற்கு

ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிட்.
சென்னை - 17



# இடையர்கள்

எஸ். லேகா சுப்ரமணியம்

ஜன்னல் கதவைத் திறந்ததும் காற்று உள்ளே புகுந்தது. மணி ஒன்பது. வழக்கமாக அவர் படுக்கப் போகும் நேரம்.

பாதிரியார் ஜான் ஒரு கணம் அசைவின்றி ஜன்னலுக்கு வெளியே குழந்தையைப் போலக் கையை வெட்டி வெட்டி ஆட்டிய ரோஜாக் கன்றையே பார்த்துக் கொண்டிருந்தார்.

இன்னும் ஒரு வருஷத்தில் அது ஜன்னல் உயரத்துக்கு வளர்ந்து விடும். அவருக்கும் ஐம்பது வயது நிறைந்து விடும். அந்த வயதிலேயே அவருக்கு மூப்பு கண்டு விட்டது. தலையில் பட்டையாக விழுந்த நரை. ஒட்டிப்போன கன்னங்கள். கருக்கங்கள் சுருக்கிய நெற்றி. பல்லில் பழைய வலுவில்லை; உடம்பிலுந்தான்!

யாரோ கதவை இடிக்கும் சத்தம் கேட்டது. விடி விளக்கின் வெளிச்சத்தில் மெதுவாக நடந்து போய்க் கதவைத் திறந்தார். முகம் தெரியவில்லை. குரல் மட்டும் கேட்டது. அவருக்குப் புரிந்து விட்டது. மேரி. அங்கே எதற்கு வந்தாள் அந்த வேளையில்?

விளக்கைப் போட்டார். அதிர்ச்சி நிலை கடந்து புத்திக்கு விளங்கியது போல் அவள் அப்போதுதான் பேசினாள்.

''இரவு தாண்டாது போல இருக்கு சாமி! கொஞ்சம் குடிசைக்கு வரவேணும். உங்கிட்டே—''

''பாவ மன்னிப்பா?''

அவள் முகத்தில் உணர்வின் அசைவில்லை. அந்தக் கேள்வி கேட்பாரற்று இருவருக்கும் இடையே தொங்கிற்று. அப்படிக் கேட்டு, அவளுக்கு உறுத்தட்டும் என்று அவர் நினைத்திருந்தாராலும், அவருக்கு வெற்றி இல்லை.

நீள் வழிப் பயணத்துக்குப் பிறரைத் தயார் செய்ய வேண்டியது அவர் கடமை. சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு அங்கே இடமில்லை.

''சரி. வருகிறேன் போ.''

பார்வையில் நன்றி ததும்ப, கையைக் கூப்பி வணங்கி விட்டு அவள் போய்விட்டாள்.

டார்ச்சைத் துழாவித் தேடி எடுத்துக் கொண்டு அவரும் புறப்பட்டார். கேட்டைத் திறந்து மூடிய இருசப்பன் அவரை ஒன்றும் கேட்கவில்லை. அவராகவே சொன்னார்:

''ஜோஸப்பிடம் போய் விட்டு வருகிறேன். திரும்பக் கொஞ்சம் நேரமாகும். நீ படுத்துக் கொள்ளலாம்.''

அவன் ஆச்சரியத்தோடு பார்த்த விதம் அவருக்குத் தெம்பாக இருந்தது. சாதாரணமாக ஒருவன் எதிர்பார்த்திருக்கக் கூடிய அளவைக் காட்டிலும், அதிக மென்மையைத் தன் இயல்பில் காண்பித்து விட்ட பெருமையினால் விளையும் பூரிப்பு அது.

டார்ச்சுக்கு அவசியமில்லை. நிலவொளி பூத்துக் கிடந்தது. தலையசைக்கும் மூங்கில் தோப்புக்கு மேலே, முள்ளில் சிக்கிக் கொண்டது போலத் தோன்றிய நிலா. தெருவில் தரை வெளுப்பாய் வெளிச்சம். சந்துகளில் இருள் புகுந்திருந்தது. எங்கோ ஒற்றை நாய் குரைத்தது. செருப்பொலி மட்டும் துணையாய் நடந்து வந்தது.

எட்டு வருஷங்களுக்கு முன்னால் ஜோஸப் அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். யுத்தத்துக்குப் பின் விலக்கப்பட்டவர்களில் ஒருவன் அவன். அவன் வந்ததையோ, குடி புகுந்ததையோ யாரும் கவனித்திருக்க மாட்டார்கள்; அவன் தங்கி விடத் துணிந்த விதம் அப்படி இல்லாதிருந்தால்.

மேரி அப்போது மாதாகோவிலில் தான் பணியாளாக இருந்தாள். கையில் ஒரு குழந்தை. கணவனை அடக்கம் செய்தபோது கூட இருந்து கடன்களை ஆற்றியவர் அவர் தான். அவருக்கு அவள் மேல் தனி மதிப்பு. மகளைப் போல் ஒரு பிரியம். அது கசப்பாக மாறுகிற மாதிரி நடந்தது அந்தச் சம்பவம். அதைத்தான் அவரால் பொறுக்கமுடியவில்லை.

ஜோஸப் அவள் வாழ்வில் முன்னும் பின்னுமின்றி வந்து முளைத்து விட்டான். ஒரே நிழலில் தங்கல். குடி இருப்பு. அவளுக்குத் துணையா? ஆதரவா? எந்த வகையில்? அவரால் சமாதானப் படுத்திக் கொள்ள முடியவில்லை. மேரிக்கு எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். கடைசியில் அவளுக்கு வேலை போய் விட்டது. அவரால் விதிக்கக் கூடிய தண்டனை அவ்வளவுதான்.

ஆனால் அவர் நெஞ்சில் கடுமை இல்லை. அப்படி நேர்ந்ததற்காக அவர் தனிமையில் கண்ணீர் வடித்திருக்கிறார். மெழுகுவத்தி வெளிச்சத்தில், பிரார்த்தனையின் முடிவில், புலம்பியிருக்கிறார். ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டதும் உண்டு; அந்த ஆத்மாவின் மீட்சிக்காக.

அதனாலேயே அவருக்கு ஜோஸப்பைப் பார்க்கவே ஒரு வெறுப்பு. அவன் கண்களில் படும் போது இனந் தெரியாத கோபத்தோடு முகத்தைத் திருப்பிக் கொள்வார்.

அவன் உடலில் வலிமை யிருந்தாலும் செயலில் முரட்டுத்தனம் இல்லே. நடத்தையில் பிடிவாதம் தெரிந்தாலும் அவன் குரல் உயர்ந்து அவர் கேட்டதில்லே. அவன் பண்ணை அவமானிக்கும் சந்தர்ப்பம் அவருக்குக் கிடைக்கவில்லே. அவரும் அதைத் தேடிப் போனது கிடையாது.

இப்போது போகிறார்.

அவனுக்குப் பாவ மன்னிப்பு வழங்குவதற்காக. அந்த நேரத்தில் அவர் ஆண்டவனின் சேவகன். அந்த நிலைக்கு மதிப்புக் கொடுக்க வேண்டிய அவசியம் அவனுக்கும் தெரிந்திருக்கும். அவன் மனந்திறந்து பேசுவான். அவர் கேள்விக்கும் விடை கிடைக்குமா? அந்தப் பதில் எப்படி இருக்கும்? அவர் மனப்புண் ஆறுமா? அல்லது மேலும் நொந்து போய்த் தவிக்க நேரிடுமா?

உண்மை எப்போதும் இனிக்குமென்று சொல்ல முடியாது. ஆனால் அதைத் தெரிந்து கொண்டும் அதை நாடிப் போக வேண்டிய நேரும் நிலைதான் கொடியது.

அவர் செருப்பொலி கேட்டதும் அமரி விளக்கைத் தூண்டினாள். அவனுக்கும் கேட்டிருக்கும். முகம் இலேசாய்த் திரும்பியது. அவன் கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தான். சற்று எழுந்து தலையணையில் சாய்ந்தாற் போல் உட்கார முடியாமல் அவனுக்குத் தெம்பு தளிந்து விட்டது. அவர் கையை அமர்த்தினார். அருகேயிருந்த முக்காலியை நகர்த்திக்கொண்டு உட்கார்ந்தார்.

உயிர் ஒடுங்கிக் கொண்டிருந்தது. அந்த நிலைப்பின் வேதனையாகத்தான் இருக்குமோ அந்த முகதெளிவு? வாழும் உணர்வு ஒரு தனியான இன்பம். அந்தப் பொழுது மீட்க முடியாத பொருள். அதைச் செலவிடும்போது அதன் அருமை தெரிவதில்லை தான். மண்ணை மிதிப்பதும், புல்லைத் தொடுவதும், நீரை அளைவதும், பறவைகளின் ஒலியைக் கேட்பதும், என்றைக்கும் சாத்தியமா? ஆனால் அந்த நினைவில் மனத்தில் பூத்து நிற்கும் மகிழ்ச்சி?



பர்மா ரயில்வே ஓய்வு பெற்ற உதவி என்ஜினியர் ஸ்ரீ டி. கௌரி சங்கர் அவர்கள் சமீபத்தில் தமது அறுபத்திமோராவது வயதில் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம்.

மழைத் துளியில் மலர்ச்சி கண்ட பூவைப் போல் அவன் முகத்தில் உயிர்த் தெளிவு உண்டாயிற்று. அவன் குரலில் அடிப்பேறி நின்றது போல் இதழ்கள் பொரிந்தன. நேரம் வடிந்து கொண்டிருந்தது.

"நீ சொல்லலாம் ஜோஸப்!"

கம்மிய குரலில் அவன் பேச ஆரம்பித்தான்:

"ஆவட்டும் சாமி! நான் சண்டைக்குப் போய்த் திரும்பியவன். உங்களுக்குத் தெரிந்திருக்கும். இப்போது ஊர் பேரு நெனைவில்லே. நடந்தது மட்டும் பளிச்சினு ஞாபகம் இருக்கு. ஆயுசுக்கும் நெனைவிருக்கும். இப்போ சொல்லியே ஆகணும்.

எங்க ரெஜிமென்ட் ஊருக்குள்ளாற பூந்துக் கிட்டிருந்தது. நாங்க நாலு பேரு. துப்பாக்கியை நீட்டிக்கிட்டு அடி போலடி வச்சுத் தெருவுக்குள்ளே நுழைஞ்சுக்கிட்டிருந்தோம். அது ஒரு குறுகலான சந்து. ரெண்டு பக்கமும் உயரமான மாடி. மூலைக்கு மூலை வெடிச் சத்தம். நாங்க சுடுவோமா, அல்லது சுட்டு விழுவோமான்னு தெரியாத நேரம். பார்வை தெரியாத புகை நெருக்கம்.

எங்கேயோ வெடி கேட்டுச்சு. நான் கண்ணை மூடிக்கிட்டுக் குழாயைத் திருப்பினேன். சரமாரியா வெடிச் சத்தம். நாங்க மேலே நகர்ந்தோம். நான் அந்த வீட்டுக்குள்ளே புகுந்தேன். நான் சுட்டது அந்தப் பக்கந்தான்.

கண்ணாடிக் கதவு சில்லாப் பேர்ந்து கிடந்தது. உள்ளாறப் பார்த்தேன். ஒரு தாயும் கொழந்தையும். வேறே யாரும் இல்லே. குண்டு அடிச்சதில் ரெண்டு பேருக்கும் மண்டை போனதிருக்க. தாயின் மார்பை விட்டு வாயை எடுக்காத குழந்தை. எனக்கு உள்ளாற கோபத் துணிச்சல் இல்லே. கொலே வாங்கின நடுக்கம் மனசுக்குள்ளே பூந்துக்கிட்டுது....."



அவன் பேச்சு நின்றது. முகத்தில் மறுபடியும் அந்த நடுக்கம். ஜான் அவன் மார்பில் கை வைத்து நீவினார். அந்தச் செய்கை அவனை ஓரளவு சமனப்படுத்தியிருக்க வேண்டும். மீண்டும் பேசினான். சுருக்கமாகப் பேசத்தான் நேரம் இருந்தது.

"அப்பாலே எங்கெங்கேயோ போனேன். ஆனால் அந்த ஞாபகம்

# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

**இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.**

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு. எஸ். பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B. P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகாரமான ஔஷதகரண விதியின் கண்டிதமான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்தபோதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்த மட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றுடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.

மார்டின் & ஹாரிஸ் (பிரை) லிட்., மெர்கண்டயில் பில்டிங்ஸ், லால்பஜார், கல்கத்தா-1



கடையம் சத்திரம் உயர்நிலைப் பள்ளியில் ரூபாய் முப்பத்தையாயிரம் செலவில் கட்டப்பட்டுள்ள கட்டடத்தையும், இக் கட்டடம் எழுப்பப் பதினையாயிரம் ரூபாய் நன்கொடை யளித்த ஸிம்ஸன் அதிபர் திரு அனந்த ராமகிருஷ்ணன் திருவுருவப் படத்தையும் டாக்டர் பா. நடராஜன் திறந்து வைத்தார். விழாவில் திரு அனந்தராமகிருஷ்ணன் அவர்களின் மனைவியார் ஸ்ரீமதி வள்ளியம்மாளும், புதல்வர் சிவசைலமும் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு தெ. கு. சண்முகசுந்தரம் விழாவில் கலந்து கொண்டவர்களுக்கும் நன்கொடையாளருக்கும் நன்றி தெரிவித்தார்.

எனக்கு மறக்கவில்லை. எப்படி மறக்கும்?

"எல்லாம் முடிஞ்சு இங்கே திரும்பினப்போவும் என் மனசில் அதே நெனப்புத்தான். அந்த ரெண்டு உசிரின் ஞாபகம் நெஞ்சிலே நெருப்புத்தணல் வச்சாப் போல் சுட்டுக்கிட்டிருந்திச்சு. ஏதோ பரிகாரம் செய்யத் துடிக்கிறதுபோல ஒரு அலைமலைப்பு. அப்போத்தான் மேரியைப் பார்த்தேன். அவள் தனி. கையிலே கொழந்தை. எனக்கு ஏனோ அந்த ஞாபகம்தான் வந்திச்சு.

"அதுவும் வேடிக்கைதான். அங்கேயும் ரெண்டு உசிரு. இங்கேயும் ரெண்டுதான். அங்கே அழிச்சதை இங்கே காப்பாத்த நெனைச்சேனு? அதுக்காவத்தான் என்னை இங்கே கொணந்து உட்டுதா? காற்றுடி காத்திலே போறப்பிலே எங்கேயோ தெசை கெட்டு ஒதுங்குமாமே? எனக்கு அப்படித்தான் தோணிச்சு. இந்த வீட்டிலே அப்போ காலடி வச்சவன், எட்டு வருஷங்களாச்சு. நான் சம்பாதிச்சதிலே ஒரு சல்லி நான் எடுத்துக்கிட்டதில்லே. இது கடைசி நாள். மேரிக்கு நான் செஞ்சதையெல்லாம் ஊர் எப்படி யெப்படியோ புரிஞ்சுக்கிட்டது எனக்குத் தெரியும். இல்லாத பல கதைகளெல்லாம் கட்டி விட்டது. உலைவாயை மூடினாலும் மூடலாம், ஊர் வாயை மூடமுடியாது என்பதை அறியாமலா பெரியவங்க சொல்லியிருக்காங்க? ஜனங்க பேசிக்கிட்டது என் காதிலேயும் உழுந்தது. அதற்காக எனக்குக் கோவமில்லே. நான் பயப்படவும் இல்லே. எதற்காகப் பயப்படணும்? மடியிலே கனமிருந்தால் அல்லவோ வழியில் பயப்படணும்? நாம் நம்ம கடமையைச் செய்துகிட்டுப் போகணும். ஆண்டவன் அதற்குத் தகுந்தாற்போல நமக்கு வழி விடுவாரு என்கிற நம்பிக்கையிலேதான் நான் எந்தக் காரியத்தையும் செய்துகிட்டுப் போறேன்.

"இதையெல்லாம் நான் எதற்குச் சொல்ல வந்தேனென்றால், அண்ணைக்கு நான் கண்டது எனக்கு முன்னே பின்னே தெரியாத இரண்டு உசிருங்க. அங்கே நான் பட்ட கடனைத் திருப்பிக் கொடுக்கத்தான் இங்கே வந்தேனு, என்னவோ? நினைக்கப்பார்த்தா எனக்கு அப்படித்தான் தோணுது. ஏனென்ருல், இந்த ரெண்டு உசிருங்களுக்கும் எனக்கும் ஒரு விதத்திலேயும் சம்பந்தமில்லாமே இருந்திருந்தாத்தானே நான் திருப்பிக் கொடுத்தது சரியாகும். அதனுலே தான் நான் இங்கேயும் சொந்தம் பாராட்ட நெனைக்கல்லே. என்ன சொல்றீங்க? நான் செஞ்சது சரிதானு? நீங்க என்ன நெனைக்கறீங்க சாமி?"

ஜான் அசைவின்றி உட்கார்ந்திருந்தார். அந்த மனிதனின் வாழ்க்கை ஓட்டத்தை அவர் பார்த்தாயிற்று. நீண்ட ஆத்மாவின் தோற்றம், பிறந்த மண்ணின் இருளிலிருந்து வளர்ந்து, கைநீட்டி அலைந்த கதிரொளியின் வெளிச்சம் வரை, அவருக்கு ஒளிவு மறைவின்றித் தெரிந்தது. அவன் திருப்பிய கடன் அந்த உழைப்பின் கனி.

அவர் குழந்தையை ஈன்று வளர்த்ததில்லை. அந்த ஒட்டுறவு அவர் நெஞ்சை நனைத்ததும் இல்லை. அவர் செயலில் அந்த நாள் வரையில் விளைந்த கருணை அவருடைய கடமை. அவ்வளவு தான்.

அவரைப் போலவே அவனும் மனித குடும்பத்தில் ஒரு தனி மனிதன். அவன் எதைக் கேட்டான்? எதைக் கொடுத்தான்? அவன் முதுகில் சுமந்த சிலுவை அவனுகவே ஏற்றிக் கொண்டதல்லவா? அந்த நெஞ்சில் தோன்றிய கழிவிரக்கம் ஆண்டவனுக்கு உகந்த பிரார்த்தனையல்லவா?

அவன் மருண்டு விழித்தான். உயிர் நெருப்பில் விழுந்து துடித்தது. அவர் அவன் கையைப் பிடித்துக் கொண்டார். அவன் முகம் எதிர்பார்ப்பில் உயர்ந்தது.

"நீ செஞ்சது சரிதான் மகனே! ஆண்டவன் அதை ஏற்றுக் கொள்வார்."

அவன் வலது கண்ணில் நீர் வடிந்தது. அணையுமுன் ஒளிரும் கொழுந்தென முகம் திடீரென்று ஒளிவிட்டது.

"இனிமேல் நான் நிம்மதியா சாகலாம்."

ஜான் கண்களை மூடிக் கொண்டார். கை மார்பின் மேல் சிலுவைக் குறி இட்டது. வாய் முணுமுணுக்கத் தொடங்கியது.

மேரி விம்மியழும் குரல் கேட்டது. ஜோஸப்பின் நெடுவழிப் பயணம் தொடங்கி விட்டது.

# வட்ட  மேஜை

## விலைவாசி உயர்வு எதனால்?

இராஜாஜி ஒருவரைத் தவிர இந்நாட்டில் மற்றவர்கள் விலைவாசி உயர்வு எங்கே இருக்கிறது, ஏன் இருக்கிறதென்று சிந்தித்துப் பார்த்துப் பேசுவதாய்த் தெரியவில்லை.

இயந்திரசாலைகளுக்குத் தேவைப்படும் கச்சாப் பொருள்களின் விலைவாசிகள் பத்தாண்டுகளுக்கு முன்பிருந்ததைவிட இன்று இரண்டு மடங்கு உயர்ந்துள்ளன.

உதாரணமாகப் பத்தாண்டுகளுக்கு முன் சாதாரணப் பருத்திப் பொதியொன்று நூறு ரூபாயாக இருந்தது. இன்று அதன் விலை இருநூறு! இதே அளவில்தான் கரும்பு, எண்ணெய் வித்துக்கள் போன்ற பணப் பயிர்களின் (Commercial crop) விலைவாசிகள் உயர்ந்துள்ளன.

எனினும் யந்திர சாலைகளிலின்று வெளியே வரும் உற்பத்திப் பொருள்களின் விலையுயர்வுக்கும் இந்தக் கச்சாப் பொருள்களின் விலை உயர்வுக்கும் எவ்வித சம்பந்தா சம்பந்தமும் கிடையாது. 'ஆடு அரைப்பணம் சுமை கூலி முக்காற் பணம்' என்று சொல்வதற் கொப்ப அரசாங்கத்தின் உற்பத்தி வரிகள் (எக்ஸைஸ் வரிகள்) அளவு கடந்திருப்பதுவே இவ்வுயர்வின் காரணமாகும்.

அரசாங்கம் கரும்புக்கு வரி விதித்துள்ளது; அக் கரும்பினாலாகும் சர்க்கரைக்கும் வரி விதித்துள்ளது. அரசாங்கம் நூலுக்கு வரி விதித்துள்ளது; அந்நூலினாலாகும் ஆடைக்கும் வரி விதித்துள்ளது. அரசாங்கம் புகையிலைக்கு வரி விதித்துள்ளது; அப் புகையிலையாலாகும் சுருட்டுக்கும் வரி விதித்துள்ளது.

எண்ணெய் ஆலையை விட்டு வெளியேறும் ஒவ்வொரு படி எண்ணெய்க்கும் அரசாங்கம் வரி வசூலிக்கும் அதிகாரியை ஆலை வாயிலில் குடி வைத்திருக்கிறது. அவ்வெண்ணெயாலாகும் சோப்புக்கும் வரி விதித்துள்ளது.

மற்றும் மக்களுடைய குடிவாழ்க்கைக்குத் தேவையான இரும்பு, சிமெண்ட், கட்டடச் சாமான்கள் போன்ற சகலத்துக்கும் அரசாங்கச் சுங்க வரிகள் உண்டு.

எனவே அரசாங்க வரிகள்தான் சகல விலைவாசிகளின் ஏற்றத்துக்கும் மூல காரணம் என்பதை மக்கள் உணர வேண்டும்.

28-7-62 கோவை அ. அய்யாமுத்து

## பாதுகாப்பு தேவை

பஸ் லாரிகளுக்குச் சர்க்கார் விதிக்கப்பட்டிருந்த உத்தேச வரி உயர்வை நிதி அமைச்சர் அவர்கள் பெயரளவில் குறைத்து அறிவித்திருக்கிறார்கள்.

சர்க்காருக்குத் தேவையான இரண்டு கோடி ரூபாயை பஸ், லாரி அதிபர்கள் எவ்வளவோ கஷ்டத்துக்கிடையே செலுத்தத் தயாராய் இருந்தார்கள். அதற்கான புள்ளி விவரங்களையும் எடுத்துரைத்தார்கள். பயனில்லாமல் போய் விட்டது. புதிய வரியினால் மோட்டார் வாகனங்கள் மூலம் சர்க்காருக்கு மேலும் ஆண்டு ஒன்றுக்குச் சுமார் நான்கு கோடி ரூபாய்க்கு மேல் நிதி கிடைக்கும். இந்த உண்மையைச் சர்க்கார் கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. சர்க்கார் ஒவ்வோர் ஆண்டும் பணத் தேவையை உண்டாக்கிக் கொண்டு நாட்டில் நடைபெறும் ஒவ்வொரு தொழில்மீதும், தாங்க முடியாத வரிச் சுமையைச் செலுத்திக் கொண்டு போவார்களானால் தொழில் நசிந்து சர்க்காருக்கும் நஷ்டத்தை உண்டாக்கும்.

போக்குவரத்தில் பஸ்களைப் பொறுத்த வரையில் பிரயாணி சீட்டு ஒன்றுக்கு ரூ. 170— விதம் 55 சீட்டுகள் கொண்ட பஸ் ஒன்றுக்கு வருடத்துக்கு வரியாக ரூபாய் 9350 செலுத்தப்படுகிறது. இனி புதிய வரியால் சீட்டு ஒன்றுக்கு ரூ. 280 விதம் பஸ் ஒன்றுக்கு ரூ. 6050 சேர்த்து ரூபாய் 15400 ஆக செலுத்த வேண்டும்.

சர்க்காருக்கு பஸ் போக்குவரத்தில் அதிக லாபம் வருவதாக நினைப்பு உண்டு. இது சரியல்ல. சர்க்கார் நடத்தும் பஸ் போக்குவரத்தில் எவ்வளவு லாபம் வந்திருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். சர்க்காரில் தற்போது 700 நல்ல பஸ்கள் உபயோகத்தில் இருக்கின்றன. நஷ்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த இந்த பஸ்கள் 1961—62-ம் ஆண்டில் ரூபாய் 15 லட்சம் லாபம் என்பதாகக் காட்டியிருக்கிறார்கள். சர்க்கார் பஸ்களுக்கு இன்ஷூரன்ஸ், வரிபோன்றவை கிடையாது. நல்ல தார் ரோடில் சர்வீஸ் நடக்கிறது. தனிப்பட்டவர்கள் நடத்தும் சர்வீஸுக்குள்ள கட்டுப்பாடு சர்க்கார் பஸ்களுக்குக் கிடையாது. சமயத்தில் எவ்வளவு டிக்கெட் வேண்டுமானாலும் ஏற்றிச் செல்லலாம். தவிர தனிப்பட்டவர்கள் வாகனத்துக்கு 25 சத விகிதம் தேய்மானம் என்றால் சர்க்கார் பஸ்களுக்கு 20 சத விகிதம் தான் தேய்மானம் என்று காட்டியிருக்கிறார்கள். இதன்படி பார்த்தால் சர்க்கார் பஸ்கள் லாபத்தில் வேலை செய்கிறதென்று கூற முடியாது. இந்த நிலையில் தனியார் பஸ்களுக்கு மட்டும் கொள்ளை லாபம் வருகிறதென்று நினைப்பது சரியல்ல. பஸ் போக்குவரத்து வியாபாரத்தில் படிப்படியாக வரி உயர்வும் வாகனங்கள் உறுப்புக்கள் விலை உயர்வும் அதிகரித்து வந்திருக்கின்றன. 1952 க்கும் 1962 க்குமிடையில் பஸ் லாரியின் எண்ணிக்கையின் உயர்வு இரண்டே முக்கால் மடங்கு. ஆனால் வரியின் உயர்வு பத்து மடங்கு என்பதையும் கவனிக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் உபயோகத்திலுள்ள பஸ்கள் சுமார் 5000; லாரிகள் 11600 இருக்கின்றன. இதற்குத் தனியார் மூலதனம் சுமார் 70 கோடிக்கு மேல் போடப்பட்டிருக்கிறது. இந்த முதல் முழுதும் தேய்மானம் உள்ளதென்பதை உணர்ந்து இதற்குத் தகுந்த பாதுகாப்பும் தொழிலில் லாபமும், நம்பிக்கையும் சர்க்கார் அளிக்கவில்லையானால் நாட்டில் போக்குவரத்து சீர்குலைந்துவிட ஏதுவாகும்.

ராசிபுரம்
29—7—62 வி. மாரப்ப கவுண்டர்

# உடைந்த கண்ணாடி வெட்டியதால் உங்கள் பிக்னிக் வீணாக போகவேண்டாம்



**பர்னல் தடவுங்கள்**

குதூகலத்துடன் இருங்கள். பர்னல் உடனே நிவாரண மளித்து புண்ணை சீக்கிரத்தில் ஆற்றுகிறது. வெட்டுக்காயங்கள், சுட்ட புண்கள், பூச்சி கடிகள் மற்றும் சிராய்ப்பு போன்றவைகளுக்கு நிவாரணமளிக்கக் கூடிய ஒரு ஆன்டிஸெப்டிக் மருந்து பர்னல். அடுத்த தடவை நீங்கள் பிக்னிக் அல்லது பிரயாணம் செல்லும்பொழுது ஒரு பர்னல் ட்யூப்பையும் எடுத்துச்செல்லுங்கள் — உங்களுக்கு உபயோகமாயிருக்கும்.




# பர்னல்

சிறந்த ஆன்டிஸெப்டிக் ஆயின்ட்மெண்ட் — 20 வருஷங்களுக்கு மேலாக பெயர் பெற்றது.

பிரூக்ஸ் மற்றும் கெமிஸ்ட் தயாரிப்பாளர்களான பூட்ஸ் கம்பெனியாரின் ஓர் சிறந்த தயாரிப்பு. Boots

**இனாம்** நீங்கள் வாங்கும் ஒவ்வொரு பர்னல் ட்யூப்புடனும் ஒரு அழகான புட்-ரூல் கிடைக்கும்.

NATIONAL BB-161

# மன மாற்றம்

நடு நிசி. அமாவாசை இருட்டு. ஊர் ஓசை அடங்கி எல்லா ஜீவன்களும் துயிலில் ஆழ்ந்திருக்கும் சமயம். வெயிற் காலமானதால் சில வீடுகளில் ஆண்கள் மொட்டை மாடிகளில் உறங்கிக் கொண்டிருந்தனர். இந்த அகால வேளையில் ஒரு ஜீவனுக்கு மட்டும் உறக்கம் இல்லை. இந்தச் சமயத்தில்தான் முக்கியமான வேலை இருந்தது. ஆள் நல்ல கட்டுமஸ்தான தேகம். சின்ன வயது. பார்க்கப் போனால் பையன் என்று சொல்லலாம். அவன் இருட்டில் பதுங்கிப் பதுங்கி எங்கோ சென்று கொண்டிருந்தான். கொஞ்ச தூரம் நடப்பதும், நின்று வீடுகளை உற்று நோக்குவதுமாக இருந்தான். சில சமயம் தயங்கி ஒரு வீட்டின்முன் நிற்பான். யோசனை செய்வான். திரும்பவும் நடப்பான். இதேபோல் பல தெருக்களைக் கடந்து கடைசியாக ஒரு வீட்டின் முன் நின்றான். வீட்டை இருட்டில் நன்றாய் உற்று நோக்கினான். அடுத்த வீட்டுக்கும் பக்கத்தில் ஒரே சந்து. அந்தப் பையன் குனிந்து ஒரு சிறு கல்லை எடுத்து மூடியிருந்த கீழ் அறையின் ஜன்னல் மேல் எறிந்தான். யாராவது விழித்துக் கொள்கிறார்களா என்று உற்றுக்கேட்டான். திரும்பவும் ஒரு முறை எறிந்தான். ஒரு சத்தத்தையும்



காணோம். பிறகு அண்ணாந்து மேலே பார்த்தான். மேல் அறைகளின் ஜன்னல் கதவுகளெல்லாம் காற்றுக்காகத் திறந்து வைக்கப்பட்டிருந்தன. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு மெள்ளப் பக்கத்துச் சந்துக்குள் புகுந்து அந்த வீட்டின் பக்கவாட்டை அடைந்தான்.

இருள் சூழ்ந்திருந்த நிலையில் ஆள் நடமாட்டம் கூடத் தெரியவில்லை. பையன் சுற்று முற்றும் உற்று நோக்கினான். பிறகு நிமிஷத்துக்குள் மதில் சுவர் மேல் ஏறி உட்புறம் குதித்தான். வீட்டை ஒரு முறை மெதுவாய்ச் சுற்றி வந்தான். காவல் காக்கும் நாயோ, அல்லது காவற்காரனோ ஒன்றையும் காணவில்லை. ஏதாவது அரவம் கேட்கிறதோ என்று நின்று உற்றுக் கேட்டான். பின் திருப்தியுடன் தான் குதித்த இடத்துக்கே

# இந்திரா நடராஜன்



திரும்பவும் வந்து நின்றான். இருட்டுத் தொழிலில் பழகிப்போன ஆளாகவும் தோன்றவில்லை. ஆனாலும் ஒரு முன் ஜாக்கிரதை, யோசனை இருந்தது இந்தப் பையனுக்கு.

வீட்டின் சுவரை ஒட்டி மழைத் தண்ணீர் விழும் குழாய் இருந்தது. பையனும் அதை நிமிர்ந்து பார்த்தான். அந்தக் குழாயைத் தொத்திக்கொண்டு மளமளவென்று மேலே ஏறினான். அது மொட்டை மாடியில் அவனைக் கொண்டு சேர்த்தது. அங்கு கயிற்றுக் கட்டில் ஒன்றின் மேல் ஓர் ஆடவன் தூங்கிக்கொண்டிருந்தான். பையனும் குழாயைப் பற்றியவாறே உள்ளே குதிக்காமல் தயங்கினான். பின் அந்த ஆள் நல்ல நித்திரையில் இருப்பதை அறிந்து சிறிதும் சத்தடி செய்யாமல் மெதுவாக உள்ளே இறங்கிச் சென்றான்.

அவன் இந்த வீட்டுக்கு எப்பொழுதோ வந்திருக்கிறான். அறைகள் எப்படி எப்படிக் கட்டப்பட்டிருக்கின்றனவென்று ஒருவாறு தெரியும். அடி மேல் அடி வைத்துப் பூனை போல் உள்ளே நுழைந்தான். வலதுபுறம் ஓர் அறை. அங்கு இரு சிறுவர்கள் படுத்திருந்தனர். இடப்புறம் இருந்த அறையில் அந்த வீட்டு எசமானி அம்மாள் உறங்கிக் கொண்டிருந்தாள். குறட்டைச் சத்தம் கூடக்கேட்டது. நடு ஹாலில் பல பீரோக்கள் வைக்கப்பட்டிருந்தன. வீட்டு அம்மாள் படுத்திருந்த அறையினுள் பையன் நுழைந்தான். அந்த அம்மாள் தூக்கத்தில் புரண்டு படுத்தாள். பையனுக்கு நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. அம்மாள் மேல் இருட்டில் கை வைத்து நகைகளை எடுப்பது என்பது நடக்காத காரியம். அவனுக்கு இதில் துளிக்கூட அனுபவம் போதாது.

இப்போது இருட்டில் பீரோச் – சாவிகளைக் கண்டெடுத்து விட்டால் எப்படியாவது பீரோவைத் திறந்து கிடைத்ததை எடுத்துக் கொண்டு போய் விடலாம். அது எப்படி நடக்குமோ? 'ஆண்டவனே' என்று பெருமூச்சு விட்டான். இதற்குள் என்னே அவன் அதிர்ஷ்டம்! அம்மாள் தலைமாட்டில் ஒரு சின்ன ஸ்டூல் மேல் கொத்துச் சாவி வைத்திருப்பது இலேசாக இருட்டில் தெரிந்தது. பின்னும் சந்தேகம். மெதுவாகக் கை வைத்துப் பார்த்தான். சந்தேகமே இல்லை. சாவிக் கொத்துதான். தன் கைக்குட்டையை அதன்மேல் போட்டுச் சத்தம் செய்யாமல் நகர்த்தினாற் போல் தூக்கி விட்டான். பீரோக்கள் வைக்கப்பட்டிருந்த ஹாலுக்குள் நுழைந்தான். இருட்டில் கையினால் தடவிப் பார்த்து, இருப்பதற்குள் பெரிய சாவியைப் பீரோவில் பொருத்திப் பார்த்தான். உடனே திறந்து கொண்டது. உள்ளே கை வைத்துப் பார்த்தான். ஒரே துணி மயம். அவன் தன் நிஜார்ப் பையில் பென்சில் போல் ஒரு மெல்லிய டார்ச் லைட் வைத்திருந்தான். இதுவரை அதை உபயோகப்படுத்தவில்லை. இப்பொழுது அதைப் போட்டுப் பார்த்தாக வேண்டும். கதவுகளை ஒருக்களித்து வைத்துக் கொண்டு ஒரு வினாடி டார்ச்சைப் போட்டுப் பார்த்தான். பீரோவின் மேல் அறை மூலையில் ஒரு கள்ள அறை. சாவிகளை அதி துரிதமாய்ப் போட்டுப் பார்த்து அதையும் திறந்து விட்டான். அதில் அவனுக்கு வேண்டியவை இருந்தன. சரசரவென்று வைர நகைகள், தங்க நகைகள்,

# தலைவலிகளி லிருந்து பூரண நிவாரணம் பெறுங்கள்

உலகம் முழுவதிலும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ', உங்கள் உடலின் நோவுறும் இடங்களில் நேரிடையாக வேலை செய்கிறது. 'ஆஸ்ப்ரோ' தலைவலிகளிலிருந்து பூரண நிவாரணம் அளிக்கிறது. 'ஆஸ்ப்ரோ' மேலும் பல்வலி, முதுகுவலி, மாதவிடாய் நோவுகள், மூட்டுக்களிலும் கைகால்களிலும் ஏற்படும் பிடிப்பு, நரம்பு நோய், மற்றும் இதர வலிகளையும் நோவுகளையுங்கூடப் போக்குகிறது.

குடும்பம் முழுவதற்கும் உபயோகிக்க 'ஆஸ்ப்ரோ' கைவசம் வைத்திருங்கள்.

# 'ஆஸ்ப்ரோ'

## குடும்பம் முழுவதற்கும் ஏற்றது



## "ஆஸ்ப்ரோ" வேலை செய்யும் விதம்



**பொடியாகப் பிரிகிறது:**
'ஆஸ்ப்ரோ' உடனேயே பொடியாகப் பிரிந்து தொடங்குகிறது. 'ஆஸ்ப்ரோ' சில விநாடிகளிலேயே வேலை செய்ய ஆரம்பிக்கிறது



**பரவுகிறது:**
வலிக்குக் காரணமான அதன் நுண்ணிய அணுக்கள் விரைவில் ரத்த ஓட்டத்தின் மூலமாய் உங்கள் உடலின் நோவுறும் இடங்களை அடைகின்றன. உடனேயே நிவாரணம் துவங்குகிறது



**நிவாரணமளிக்கிறது:**
பூரண நிவாரணமளிக்கிறது. 'ஆஸ்ப்ரோ' உங்கள் உடல் வலியைப் போக்கி, உங்களை ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்கச் செய்கிறது




இளஞ்சிவப்பும் ஊதா நிறமும் கொண்ட வில்லைப்பட்ட பட்டையைக் கேட்டு வாங்குங்கள்

# 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள் மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்

ஒரு நிக்கோலஸ் N தயாரிப்பு

AG.126.TAM.

தரத்திற்கும் தூய்மைக்கும் நிக்கல்ஸ் பெயரும் உத்தரவாதம்.

கைக் கடிகாரம் இவைகளை எடுத்து இரு கைக் குட்டைகளினால் கட்டினான். நிஜாரின் பாக்கெட்டில் திணித்துக் கொண்டான். கதவைப் பூட்டிச் சாவியை ஒரு மூலையில் வைத்து விட்டு வந்த வழியே திரும்பினான். இதற்குள் கிழக்கும் வெளுக்க ஆரம்பித்து விட்டது. அன்று சிறுவரிலிருந்து பெரியவர் வரை எல்லோருக்கும் ஆழ்ந்த நித்திரை. இதை அவன் அதிர்ஷ்டம் என்றுதான் கூறவேண்டும்.

தடுமாற்றத்துடன் திரும்பவும் தண்ணீர்க் குழாய் இருக்குமிடம் வந்து அதைப் பிடித்துக் கொண்டு இறங்கினான். ஏனோ இரண்டு, மூன்று தடவைகள் அவனுக்குச் சறுக்கியது. பயத்தினால் பதற்றமாயிருக்கலாம். ஒரு வழியாய்க் கீழே இறங்கிப் பூமியில் காலை வைத்து விட்டான்.

பொழுது விடிந்தது. திருட்டுப் போன வீட்டு நபர்கள் ஒவ்வொருவராய்த் துயிலிலிருந்து எழுந்தனர். பீரோ சாத்தியபடி இருந்தது. அம்மாள் எழுந்தவுடன் வழக்கமாய்ச் சாவிக் கொத்தை இடுப்பில் சொருகிக் கொண்டுதான் கீழே இறங்குவாள். அதே போல் இன்றும் ஸ்டூலில் கைவைத்தாள். அது காலியாக இருந்தது. என்ன! 'மறதியில் அப்படியே இடுப்பில் சாவிக் கொத்துடன் தூங்கிவிட்டோமோ' என்று இடுப்பில் கை வைத்துப் பார்த்தாள். காணோம். அங்கும் இங்கும் பார்த்தாள். அந்த அறையில் இல்லை. அவள் ஒரு நாளும் சாவியைத் தொலைத்ததில்லை. இது முதல் தடவை. ஆச்சரியமாய் இருந்தது அவளுக்கே. இப்பொழுதுதான் அந்த அம்மாளுக்கு மனத்தில் ஒரு திகில் வந்தது. பரபரப்புடன் அறைக்கு வெளியே வந்து சாவியைத் தேடினாள். இதற்குள் மற்றவர்களும் எழுந்து சோம்பல் முறித்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு இவள் படபடப்பு விநோதமாக இருந்தது. ஒரு வழியாய்ச் சாவியும் கண்ணில் பட்டது. அதை எடுத்துக் கொண்டு கணவனிடம் சாவி எப்படி அங்கு வந்தது என்று கேட்டாள். அவர் எப்பொழுதும் சாவியை எடுப்பதில்லையே! அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. அம்மாளோ ஒரேயடியாய்த் தான் பக்கத்தில் ஸ்டூலில் வைத்து விட்டுத் தூங்கப் போனதாய்ச் சாதித்தாள். அவருக்கோ அவளுக்குக் கட்டாயம் ஞாபக மறதி என்ற எண்ணம். இவர்கள் சச்சரவு நடப்பதற்குள் பொழுதும் நன்றாய் விடிந்து விட்டது.

பகல் வரை யாருக்கும் திருட்டுப் போனது பற்றித் தெரியவில்லை. பிற்பகல் ஏதோ அலுவலாய் அம்மாள் பீரோவைத் திறந்து தன் நகைகளை எடுக்கப் போய்த் திருட்டைக் கண்டு பிடித்து விட்டாள். கேட்க வேண்டுமா? ஒரே ரகளைதான். முதல் வைக்கிரநாமம் எஜமானருக்கு: "காலையிலேயே சந்தேகப்பட்டேன், சாவி எப்படி அந்த மூலையில் கிடக்கும் என்று! என்னை நீங்கள் பைத்தியமென்று நினைத்துக் கொண்டீர்கள்!" என்றாள். எஜமானர் விழித்தார். போலீஸில் ரிப்போர்ட் செய்தனர். அவர்களும் வந்து மாமூலாய் நடத்த வேண்டிய விசாரணையை நடத்தினார்கள். நகை எப்பொழுது போயிற்று என்று! வீட்டு எஜமானரிலிருந்து வீட்டு வேலைக்காரிவரை எல்லோரையும் கேள்விகள் கேட்டுத் துளைத்து



ஹெலிகாப்டருக்குள் இருக்கும் ஆசாமி: சார்! ரொம்பக் குளிரா இருக்கே.... மேலே சுற்றுகிற விசிறியைக் கொஞ்சம் நிறுத்துகிறீரா?

விட்டார்கள். திருட்டு வழக்கைப் பதிவு செய்து கொண்டார்கள்.

மேலே சொன்ன சம்பவம் நடந்து ஒரு மாத காலமாகி விட்டது. ஒரு நாள் திருட்டுப் போன வீட்டு வாசலில் ஒரு போலீஸ் கார் வந்து நின்றது. அதிலிருந்து ஓர் இன்ஸ்பெக்டர் இறங்கினார். பின்னால் இரு கான்ஸ்டபிள்களுக்கு நடுவில் சுமார் பதினெட்டு வயதுடைய பையன் கையில் விலங்குடன் அவரைப் பின்தொடர்ந்தான். வீட்டுக்காரர்களுக்கோ ஒரே அதிசயம். அவன் இன்ஸ்பெக்டரிடம் தான் எப்படி மதிலைத் தாண்டிக் குதித்துத் தண்ணீர்க் குழாய் வழியாக ஏறி மேலே போனான் என்று விவரமாகச் சொன்னான். பிறகு உள்ளே நுழைந்து சாவியைக் கண்டு பிடித்துத் திருடியதையும் சொன்னான் அவன்.

அவன் தன் திருட்டைப் பற்றிச் சொன்னதோடு தன் வரலாற்றையும் சொன்னான். தன்னை வளர்த்த டாக்டர் மேரி அம்மையாரின் விலாசத்தைச் சொல்லி அவரிடம் போனால் தன்னைப் பற்றி எல்லாம் தெரியும் என்றான். இன்ஸ்பெக்டரும் அந்த வேலை முடிந்தவுடன் அந்தப் பையனை அழைத்துக் கொண்டு அவன் சொன்ன விலாசத்துக்குப் போனார்.

ஊர் எல்லைக்கப்பால் அழகிய சிறு பங்களா. வீட்டைச் சுற்றி அருமையான தோட்டம். மரம் செடிகள். மனத்துக்கு ரம்மியமான இடம். அந்த விசாலமான தோட்டத்தை வெகு சுத்தமாக வைத்திருந்தார்கள். கார் உள்ளே நுழைந்து வீட்டின் முன் நின்றது.

இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் வண்டியை விட்டு இறங்கியதும் அவர் அங்கிருந்த காவலாளியிடம் உள்ளே வீட்டின் சொந்தக்காரரான மேரி அம்மைக்குத் தம் வருகையை அறிவிக்கச் சொன்னார். சிறிது நேரத்துக்குள் உள்ளே போன ஆள் அவர்களை அழைப்பதாய் வந்து சொன்னான். வந்தவர்கள் வராந்தாவைக் கடந்து ஒரு பெரிய அறைக்குள் நுழைந்தனர். அங்கு பல சோபாக்களும் நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. ஓர் ஆசனத்தில் ஓர் ஐரோப்பிய மாது உட்கார்ந்திருந்தார். வந்தவரை வரவேற்று ஆசனத்தில் அமரக் கோரினார். பின்னால் இரு போலீஸ் ஜவான்



**குழந்தை :** நேத்திக்கு ராத்திரி ஒரு ஜோரான சொப்பனம் அம்மா!

**தாய் :** என்ன சொப்பனம், சொல்லு, பார்ப்போம்.

**குழந்தை :** ஏம்மா உனக்கு நன்னாத்தான் தெரியுமே. நீ கூட அந்தச் சொப்பனத்தில் வந்திருந்தாயே!

களுக்கு நடுவில் நிற்கும் பையனைப் பார்த்துத் திடுக்கிட்டார். அவர் ஏதும் கேட்கும் முன்பு இன்ஸ்பெக்டர் சுருக்கமாய் நடந்தவைகளை அவருக்குச் சொன்னார். அந்த அம்மாளுக்கு ஒரே கலக்கம். முகத்தில் விவரிக்க முடியாத வேதனை. பையனோ குனிந்த தலை நிமிரவே யில்லை. விவரம் அறிந்த அந்த மாது இன்ஸ்பெக்டரிடம் மிக வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னாள்:

"ஐயா நான் தங்களுக்குச் சில விஷயங்கள் கூற விரும்புகிறேன். சுமார் பதினாறு ஆண்டுகளுக்கு முன்னால் நான் தலைமை வகிக்கும் ஆஸ்பத்திரியில் இந்த அனாதைச் சிறுவன் வளர்ந்து வந்தான். அவனுக்கு அப்பொழுது சுமார் இரண்டு வயது இருக்கும். நான் என் தாய்நாட்டிலிருந்து மனித வர்க்கத்துக்குச் சேவை செய்யும்பொருட்டே இங்கு வந்துள்ளேன். நான் இங்கு முப்பது வருடங்களாக உழைத்து வருகிறேன். எனக்கு இந்தியக் குழந்தை ஒன்றை என்னுடைய மகனாய் வளர்க்க ரொம்பவும் ஆவல் இருந்தது. அதன்படி இச்சிறுவனை என்னிடம் கொண்டு வந்து வைத்து வளர்த்து வந்தேன். பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்தேன். இப்பையன் பெரியவனாகி வரும் போது சில தடவைகள் இவனைப் பற்றிப் புகார்கள் வர ஆரம்பித்தன. பிறர் பொருளை அபகரிக்கும் குணம் இருப்பதாகத் தெரிய வந்தது. அற்பப் பொருளானாலும் மற்றவருடையதைக் கேட்காமல் எடுப்பது திருட்டுத்தானே? நான் என்னால் இயன்ற மட்டும் இவனுக்கு நற்போதனை செய்து, திருத்த முயன்றேன். மனத் தத்துவ ஆராய்ச்சிக்காரர்களுக்குள் வெகுநாளாக ஒரு வாதம் நடந்து வருகிறது. சிலர் குழந்தைகளின் பிறவிக் குணத்தை மாற்ற முடியாதென்றும் சிலர் சூழ்நிலையால் கட்டாயம் திருத்த முடியுமென்றும் முடிவு கட்டியுள்ளார்கள். என் விஷயத்தில் இந்தப் பையனை வளர்த்து வந்ததில் இந்த விஷயத்தைச் சோதிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்ததென்று நினைக்கிறேன். என்னதான் நான் இச்சிறுவனுக்கு நற்போதனை செய்தும், கடவுள் பக்தி உண்டாக்க முயன்றும் அவன் பிறவிக் குணம்தான் மேலோங்கி நின்றது. சில சமயம் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரு குழந்தைகள்கூட இரண்டு வித குணம் படைத்திருக்கும். இவன் சிறு திருட்டுக்கள் செய்ய ஆரம்பித்ததில் இப்பொழுது பெரிய திருட்டைச் செய்யும் துணிவு வந்து விட்டது. அவன் நன்றாய்ப் படித்து என்னைப் போல் வைத்தியத் தொழில் செய்து மனித வர்க்கத்துக்கு நல்ல சேவை புரிவான் என்று நம்பி யிருந்தேன். எனக்குப் பிற்காலம் என் வளர்ப்பு மகன் என் தொழிலைத் தொடர்ந்து நடத்திக் கடவுளின் அன்பைப் பெறுவான் என்று மனக் கோட்டைகள் கட்டினேன். என்னுடைய அனுமானங்கள் தப்பாகி விட்டன. இப்பொழுது அவன் செய்கைக்கு உரிய தண்டனை எதுவோ அதை அவன் ஏற்கட்டும். பிறகு அவன் மனம் பூரணமாய்த் திருந்தி நல்வழிக்கு வரும் எண்ணம் இருந்தால் என் வீடு அவனுக்கு என்றும் திறந்திருக்கும். நான் அவனை மன்னிக்கத் தயாராக இருக்கிறேன்......."

பையன் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் வந்தது. அவன் மனம் மிகவும் வேதனைப்பட்டது. உலகில் தாயின் அன்போ, தகப்பனின் அருமையோ அல்லது உடன் பிறந்தார், சுற்றத்தார் யாருடைய அன்பையுமோ அறிந்தவனில்லை அவன். எல்லோருடைய அன்பையும் சேர்த்து அந்தப் பெரிய மனமுடைய மேரி அம்மை தனக்கு அளித்ததை அவன் மனம் இந்நாட்கள் வரை அறியவில்லை. அநாதையாய்ப் பிறந்தும் நல்ல சுக ஜீவனம் செய்யும் பாக்கியம் பெற்றான். அவனுக்கே அவன் செய்கை அவமானமாக இருந்தது. அவன் அப்படியே அந்த மாதின் கால்களில் சாஷ்டாங்கமாய் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கதறினான். தான் ஜெயில் வாசத்துக்குப் பிறகு அவரிடம் திரும்பி வந்து தன் குற்றங்களுக்குப் பிராயச்சித்தம் செய்வதாய் வாக்களித்தான். தன் வாழ்நாட்களை அவள் விருப்பப்படி இருத்தி அமைத்துக் கொள்வதாய்ச் சத்தியம் செய்தான்.

மேரி அம்மையார் அந்தப் பையனை எழுப்பிக் கண்களில் நீர் ததும்ப அப்படியே அணைத்துக் கொண்டார். "அப்பா! எனக்கு இன்று தான் என் ஜென்மம் எடுத்ததின் பலன் கிடைத்தது. நீ திருந்தி நல்வழியில் வந்து விட்டாய் என்று கேட்டாலே என் ஆத்மா சாந்தியடையும்" என்றாள்.

"அம்மா! உங்கள் பேரன்பை இப்பொழுது தான் புரிந்து கொண்டேன். அதுவே இனி எனக்கு நல்வழி காட்டும்."

அவனுடைய பதில் அவருக்குத் திருப்தியை அளித்தது. அந்த அம்மையார் பையனை வாழ்த்திவிட்டு இன்ஸ்பெக்டரிடம், "ஐயா! இவனை நீங்கள் அழைத்துப் போகலாம், இவன் தண்டனை முழுவதும் அனுபவித்து, பிறகு மனம் மாறி நற்பண்புடையவனாக இருப்பானானால் என்னிடம் வந்து சேருவான். அன்று அவனை என் மகனாக வரவேற்பேன். அதுவரை அவனுக்காகக் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறி எல்லோருக்கும் விடை கொடுத்தனுப்பினாள்.

தலைகுனிந்தவாறே அச்சிறுவன் அந்தப் பங்களாவை விட்டுப் போலீஸ் நடுவில் தன் தண்டனையை ஏற்க நடந்து வெளியே சென்றான்.

# ரெக்ஸ்

## ஜெல்லி



## இன்பமான காட்சி...மிகுந்தசுவை...மிகவும்நல்லது!

இது சுவை மிகுந்தது. பழங்களின் மணம் கொண்டது. எளிதில் தயாரிக்கக்கூடிய ஒரு பண்டம். ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்களை வெந்நீரில் கலந்தால் போதும். பிறகு போதுமான அளவு குளிர்ந்த ஜலம் அதோடு சேர்த்து அந்தக் கலவையை ஒரு பைண்டுக்கு, (அதாவது 20 அவுன்ஸ்) சமமாக ஆக்கிக்கொள்ளுங்கள். அதை அச்சியில் ஊற்றி, ஐஸின் மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.

அது குடும்பத்தார் விரும்பும் போஷகமளிக்கும் லேசான பண்டம். வியாதியிலிருந்து சுகமடைந்தவருக்கும் கூட நல்லது.

ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்கள் 6 சுவைகளில் கிடைக்கின்றன. ராஸ்பெரி, ஸ்ட்ருபெரி, லெமன், பைனாபிள், ஆரஞ்சு, செர்ரீ.






கார்ன் ப்ராடக்ட்ஸ கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

தென் இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி லிமிடெட்

# வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்




## திட ஆரோக்கியத்துக்கும் தென்புக்கும்

நல்லதென்பதற்கு 4 காரணங்கள் இதோ...

1. எந்த சீத வெப்ப நிலையிலும் எப் பருவத்திலும் முதியோர், சிறுவர் யாவரும் சுவைத்துப் பருகுவதற்கு இனிய, உடல் நலனுக்கு உகந்த டானிக் இதுவே.
2. இரத்த விருத்தி செழிக்கச் செய்து, நரம்புகளுக்கு வலுவூட்டுகிறது.
3. பசியின்மைக் கோளாறுகளுக்கும், பிணியாறும் பருவத்திற்கும் பிரத்தியேகமாக உரித்தானது.
4. பொது பலவீனம், ஊட்டக் குறைவு, சோர்வு, உணவிலே உலோகப் பொருள் குறைபாடு, மிதமிஞ்சிய உடல் தளர்ச்சி, உள்ளத் தளர்ச்சி யாவினுக்கும் உகந்த நிவாரணமாகச் சிபாரிசு செய்யப்படுகிறது.

# வாட்டர்பரீஸ் வைட்டமின் காம்பவுண்ட்

வார்னர் - லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி.
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பெற்றது)



# புது வெள்ளம்

அத்தியாயம் பதினெட்டு

## உணர்ச்சி வெள்ளம்

சன்னத்தில் விழுந்த அறையால் பொறி கலங்கிப் போன முருகையன் தன்னை வெறியோடு தாக்கிய பெருமான் சாமியைத் திரும்பிக் கூடப் பாராமல் கூட்டத்தாரை உற்றுப் பார்த்தான். கூட்டத்தினரின் முகங்களிலும் கோபக் கனல் தாண்டவமாடியது. முன்வரிசையில் நின்று கொண்டிருந்த சாந்தாவின் பக்கம் மெல்லத் திரும்பினான். அவள் மட்டிலும் அதிர்ச்சியடைந்திருந்தாள் என்பதை அவனால் கண்டுகொள்ள முடிந்தது.

முருகையன் கூட்டத்தை நோக்கிப் பேசினான். அவன் குரல் தடுமாற்றத்துடன் ஒலிக்கத் தொடங்கியது:—

''நான்.... நான் .... உங்களிடம் சொற்பொழிவு நடத்த வரவில்லை. எனக்குத் தெரிந்த சில உண்மைகளை உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். கன்னையனைப் போலவே நானும் உங்களில் ஒருவன்தான். கேட்டு விட்டு ஒரு முடிவுக்கு வாருங்கள்....''

சரேலென்று சில கற்கள் முருகையனை நோக்கிப் பறந்தன. அவற்றில் ஒன்று அவனது நெற்றிப் புருவத்தில் தாக்கி, குபுகுபுவென்று ரத்தம் பெருகி ஓடச் செய்தது. அதை வழித்துத் துடைத்துக் கொண்டு, புதியதோர் ஆவேசத்துடன் பேசினான் முருகையன்.

''நீங்கள் எல்லோரும் சேர்ந்து கல்லால் அடித்துக் கொன்றாலும் சரி! நான் சொல்ல வந்ததைச் சொல்லித்தான் தீருவேன்! தயவுசெய்து நான் சொல்வதைக் கேட்டு விட்டு, பிறகு என் மீது கற்களை வீசுங்கள். என்னை அடித்துக் கொல்லுங்கள். எப்படி வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்.''

கூட்டத்தினரிடையே திடீரென்று ஓர் அமைதி நிலவியது. சாந்தாவின் கண்களில் மாலை மாலையாய்க் கண்ணீர் வழிந்தது.

அகிலன்

''நமக்கு உழைப்பதற்கும் பிழைப்பதற்கும் வாய்ப்பு வேண்டும். நம்முடைய உழைப்பு நமக்கு வாழ்வதற்கான வசதிகளைச் செய்து தரவேண்டும். உழைப்புக்கும் பிழைப்புக்கும் எங்கே பாதகம் வந்து விடுமோ என்ற சந்தேகத்தாலும் பயத்தாலும்தான் நாம் இங்கே கூடியிருக்கிறோம். நம்முடைய உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளவே நாம் வேலைநிறுத்தம் செய்யப் போகிறோம். இவ்வளவுதானே?''

பெருமாள்சாமிக்கு இது பொறுக்கவில்லை.

''உன்னை இங்கே யாரும் கூப்பிடவில்லை!'' என்று சொல்லி, மறுபடியும் முருகையன் மீது பாய்ந்து அடிக்கப் போனான் அவன். ''நீ ஒரு துரோகி! பேசாமல் இந்தக் கூட்டத்தை விட்டுப் போகிறாயா, இல்லை?....'' என்றும் இரைந்தான்.

கூட்டத்தின் முன்னால் நின்ற சாந்தா ஓடோடியும் வந்து, பெருமாள்சாமியின் ஓங்கிய கரத்தை இறுகப் பற்றிக்கொண்டாள்.

''இதென்ன அக்கிரமம்? நிறுத்துங்கள்!'' என்று கத்தினாள் சாந்தா.

''சாந்தா! என்னைத் தடுக்காதே!'' என்றான் பெருமாள்சாமி.

''தொழிலாளர்களின் உரிமைக்காகப் போராட்டம் என்கிறீர்கள். ஒரு தொழிலாளரின் கருத்தை வாய்விட்டுச் சொல்வதற்கு அவருக்கு இங்கே உரிமை இல்லை. — எதற்காக இந்த இடத்தில் பலாத்காரம் வந்தது? நீங்கள் முதலில் இவரை அறைந்ததால்தானே இவர்கள் கல்லெறியத் துணிந்து விட்டார்கள்? கூட்டத்தினரிடம் உணர்ச்சியைத் தூண்டி விடுவது மிகச் சாதாரண விஷயம். அவர்களைக் கட்டுப் படுத்தத் தெரியாதவர் எப்படிப் போராட்டம் நடத்தப் போகிறீர்கள்?''

சாந்தாவின் பேச்சுக் குரல் கூட்டத்தில் இருந்தவர்களின் செவிகளிலும் ஒலித்தது.

''இவரையும் பேச விடுங்கள்! பிறகு முடிவு செய்வோம்!'' என்று கூறிவிட்டுச் சாந்தா கீழே இறங்கி வந்து விட்டாள்.

பெருமாள்சாமி திடுக்கிட்டான். கூட்டம் திகைத்து நின்றது.

''நம்முடைய கரங்கத் தொழிலில் கூடிய சீக்கிரம் மிகப் பெரிய மாற்றங்கள் நடக்கப் போகின்றன. எல்லோருக்கும் நன்மை தரக்கூடிய மாற்றங்கள் அவை. நம்மில் ஒருவர்கூடக் கட்டாயம் பாதிக்கப்பட மாட்டோம். இன்னும் அதிகமான கரங்கங்கள், அதிகமான நிலக்கரி, அதிகமான வசதிகள் கட்டாயம் கிடைக்கும் நமக்கு. அவசரப்படாமல் சற்றுப் பொறுத்திருப்போம். நாம் பாதிக்கப்படுவோம் என்பது நடைமுறையில் தெரியுமானால், நானே முதலில் கன்னையாவுக்குப் பின்னால் நிற்கிறேன். நாமெல்லோரும் சேர்ந்து போராடுவோம்,''

''அவர்களுடைய வாக்குறுதியைத் தான் நீயும் சொல்கிறாய். நீ அவர்களுடைய கையாள்!'' என்று கத்தினான் கன்னியன்.

''காலம் மாறி விட்டது. வந்து கொண்டிருக்கும் நல்ல மாற்றங்களை நாமும் புரிந்து கொள்ள வேண்டும். நேர்மையும் திறமையுமுள்ள கடினமான உழைப்பு, உழைப்பின் உற்சாகத்தைத் தூண்டி விடக்கூடிய ஊதிய உயர்வு, பொருள்களின் உற்பத்திப் பெருக்கத்தால் நாட்டின் வளர்ச்சி, —இவ்வளவும் கட்டாயம் நடைபெறத் தான் போகின்றன. புதிய தலைவரே இதைக் கூறினார். உங்களிடமும் கூறியிருப்பார்.''

''அப்படி ஒரு பக்கம் கூறி விட்டு, இன்னொரு பக்கம் என்ன நடத்துகிறார்கள் தெரியுமா? — ராணுவத்தினரின் நடமாட்டம் ஏன் இங்கு தென்படுகிறது?''

பதில் சொல்ல முடியாமல், பதில் சொல்ல விரும்பாமல், ஒரு கணம் திகைத்தான் முருகையன். சற்று முன்பு அவன் கண்ட காட்சி அவன் கண் முன்னே வந்தது. மற்றவர்களுக்கும் அது தெரிந்திருக்கும் போலும். —ஆனால் அதன் காரணத்தை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை.

''ஏன் விழிக்கிறாய்? பதில் சொல்!'' என்று உறுமினான் பெருமாள்சாமி.

''பதில் சொல்! பதில் சொல்!'' என்ற கூக்குரல் கூட்டத்திலிருந்து கிளம்பியது.

''ஏன் மறைக்கிறாய்? — துரோகி!''

''சாந்தா! இவனுக்காகத் தானே நீ பரிந்து கொண்டு பேச வந்தாய்?'' என்று கேட்டு விட்டு, மறுபடியும் தன் மனம் கொண்ட மட்டும் முருகையனை நையப் புடைத்துக் கீழே தள்ளினான் பெருமாள்சாமி. கூட்டமும் அவனிடம் நெருங்கிக் கொண்டு வந்தது. முருகையன் கீழே விழுந்தான்.

ஓடோடிச் சென்று முருகையனின் அருகில் அமர்ந்தாள் சாந்தா. முருகையன் வாய் திறந்து எதையும் பேசாமல் இருந்தது அவளுக்கும் பிடிக்கவில்லை. கூட்டத்தினரின் கோபம் அதிகமாய்ப் போய் விடவே, ''நமக்கு அதனால் துளிக் கூட ஆபத்து இல்லை; எல்லாம் நன்மைக்குத்தான் நடக்கின்றன; சீக்கிரம் நீங்களே தெரிந்து கொள்வீர்கள்'' என்றான் முருகையன்.

''அப்படியானால் ராணுவம் எதற்கு என்பதைத்தான் சொல்லி விடேன்!''

கூட்டத்தாரின் கோபம் கட்டுக் கடங்காது போல் தெரிந்தது. சாந்தா அவர்களைத் தடுக்கப் பார்த்தாள். முருகையன் மெதுவாகப் பெருமாள் சாமிக்குச் சைகை காட்டினான். மெல்ல எழுந்து அவன் காதில் எதையோ கூறினான். சிறிது சிறிதாகப் பெருமாள் சாமியின் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது. கண்களை அகலமாகத் திறந்து கொண்டே, ''உண்மைதானா? உண்மைதானா?'' என்று பலமுறை கேட்டான்.

''ஆமாம். உண்மைதான்.''

இதைக் கேள்வியுற்ற பிறகு பெருமாள்சாமி சிறு குழந்தை போல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான். ''என்னை மன்னித்து விடு, முருகையா!'' என்று தடுமாறினான். கூட்டத்தினருக்கு ஒன்றும் விளங்கவில்லை.

''உண்மையிலே நமக்கு நல்ல காலம் வரத் தொடங்கி விட்டது. நம்முடைய செல்வங்களையும் உழைப்பையும் சுரண்டித் தங்களது சுகபோக வாழ்வுக்காக விற்பனை செய்து கொண்டிருந்தவர்களின் காலம் இப்போது மாறிவிட்டது. இந்தச் சமஸ்தானம் இனி தனிப்பட்ட சிலருக்காக இருக்கப் போவதில்லை!.... இணைந்து விடப் போகிறது! இணைந்து விடப் போகிறது!''

கூட்டத்தினரின் ஆனந்த ஆரவாரம் கட்டுக்கடங்காமல் பெருகியது. தங்களிடையே துவண்டுகிடந்த முருகையனைத் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடத் துடித்தார்கள் பலர். ஆனால் அவர்களுடைய ஆனந்தம் திடீரென்று பயங்கரச் சங்கொலி கேட்டுப் பாதியில் நின்றது.

திடுக்கிட்டார்கள் எல்லோரும்.

அவர்களை நோக்கிச் சிலர் பரபரப்புடன் ஓடி வந்தார்கள்.

''சுரங்கத்தில் ஓரிடத்தில் சரிவோ, நெருப்போ தெரியவில்லை!....''

''என்ன!''

''ஆமாம், உடனே போய் ஏதும் செய்யா விட்டால்....''

மறுகணமடியில் பெருமாள்சாமி அந்த இடத்தில் இல்லை. அவனைப் பின்பற்றி ஆவேசத்துடன் பலர் விரைந்து சென்றார்கள். முருகையனும் தட்டுத் தடுமாறிக் கொண்டு ஓட முயன்றான்.

''நீங்கள் வேறு எதற்குப் போகிறீர்கள்? இந்த நிலையில் உங்களால் நடக்கக் கூட முடியாதே!'' என்று தடுத்து நிறுத்தினாள் சாந்தா.

''சாந்தா! என்னை விட்டு விடு! பெருமாள்சாமி அவசரக்காரன்....நிதானம் இழந்து ஏதாவது செய்து விடுவான்.''

''பெருமாள்சாமியா!''

''கன்னியன்!. ஆமாம், சுரங்கம் எனக்கு முக்கியம்; கன்னியன் உனக்கு முக்கியம்....விடு, என்னை!''

வெறி பிடித்தவன் போல் ஓடினான் முருகையன். கடைசியாக அவன் கூறிய சொற்களைக் கேட்டு இடி விழுந்தவள் போல் நின்றாள் சாந்தா. பிறகு அவளும் அவனைப் பின்பற்றிச் சென்றாள்.

# இலவசம்

## கவர்ச்சி மிகுந்த

**ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்**

தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மன மகிழ்வு பெறலாம்.







ஓ. கே. தயாரிப்புகளின் பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்.












★ ஓ. கே. வனஸ்பதி ★ ஓ. கே. டபிள் ரிபைண்ட் ஆயில் ★ கோல்டன் ஸலட் ஆயில் ★ ஓ. கே. சந்தன சோப் ★ ஓ. கே. ஓரியண்டல் ரோஸ் சோப் ★ ஓ. கே. க்ரீம் சோப் ★ மியோகே சோப் ★ சோப் சிப்ஸ்

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு ஓ. கே. தயாரிப்புகளிலும் உள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்குப் பதிலாக, உங்கள் அருகிலுள்ள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, நீங்கள் விரும்பும் அளவிலும், வடிவிலும் கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பெறுங்கள்.

இந்த விசேஷமான பரிசுத் திட்டம் பற்றிய இதர விவரங்களை அறிய உங்கள் ஓ. கே. வியாபாரியிடமிருந்து, படங்களோடு கூடிய 'போல்டரை' (folder) வாங்கிப் பாருங்கள்.







EP-EAC 3-TAM

*தயாரிப்பாளர்கள்:*

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1**

அத்தியாயம் பத்தொன்பது

# வாழ்க்கையெனும் போர்க்களத்தில்...

ஆண், பெண், குழந்தைகள், முதியவர் இப்படிப் பலரும் சேர்ந்த கூட்டம் சுரங்க வாயிலுக்கு வெளியே நின்று துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது. சுரங்கத்துக்குள் வேலை செய்து கொண்டிருந்தவர்களை எதிர்பார்த்து அவர்கள் கதறி அழத் தொடங்கினார்கள்.

இயந்திர வாளி ஒவ்வொரு முறை வெளியில் வந்த போதும் ஒரு சிறு கூட்டத்தைச் சுமந்து வந்து வெளியில் தள்ளிக் கொண்டுதான் இருந்தது. வந்து சேர்ந்தவர்களின் குடும்பத்தினருக்கு ஒரே ஆனந்தம். வந்தவர்களில் தங்களைச் சார்ந்தவர்களைக் காண முடியாமல் தவித்தவர்களுக்கு ஒரே ஏமாற்றம்.

இதற்கிடையில் தான் பெருமாள்சாமி சில இளைஞர்களுடன் பெட்டிக்குள் நுழைந்தான். அவனுடன் எப்படியோ முருகையனும் சேர்ந்து கொண்டதை மற்றவர்கள் கவனித்தார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்தக் கூடிய துணிவு யாருக்கும் வரவில்லை. பெட்டி உள்ளே இறங்கும் சமயத்தில் பெருமாள்சாமியும் முருகையனும் தங்களை மறந்து கூட்டத்தைத் திரும்பிப் பார்த்தார்கள். சாந்தாவும் கல்யாணியும் ஒன்றாக நின்று அங்கே தேம்பிக் கொண்டிருந்த காட்சி அவர்களுடைய இதயங்களைக் கனியச் செய்தது.

உள்ளே, உள்ளே, உள்ளே சென்றவுடன் பயங்கரமான சத்தத்துடன் நின்றது பெட்டி. அதை எதிர்பார்த்துக் கொண்டு, வெளியேறுவதற்காகப் பரபரப்போடு காத்துக் கொண்டிருந்தார்கள் தொழிலாளர்கள். அங்கிருந்த அதிகாரிகளும் அவர்களைப் பத்திரமாக வெளியேற்றுவதில் கண்ணும் கருத்துமாக உழைத்து வந்தார்கள்.

''ஒரே ஒரு மூலையில் தான் நெருப்பும், புகையும், சரிவுமாக இருக்கி



றது. அதை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். நீங்கள் நிதானமாக வெளியேறி உங்கள் குடும்பத்தாருக்குத் தைரியம் சொல்லுங்கள்!''

இப்படிக் கத்திக் கொண்டே வந்தார் ஒருவர். அவரைப் பெருமாள்சாமியும் முருகையனும் உற்றுப் பார்த்தார்கள். – அவர்களுடைய புதிய தலைமை அதிகாரி!

''பெருமாள்சாமி! பார், அவரை! தொழிலாளர்களைப் பத்திரமாக அனுப்பிவிட்டு, அவரும் இன்னும் சிலர் மட்டிலும் விபத்தோடு போராடத் துணிந்திருக்கிறார்கள். இவரையா நீ சந்தேகித்தாய்?''

மேலே இருந்து புதிதாய் வந்துள்ள இளைஞர்களைக் கண்டு அவரும் பிரமித்தார். ''நீங்கள் வேறு எதற்கு இங்கே வந்தீர்கள்? திரும்பிப் போங்கள்! உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!''

''வேண்டாம்! யாருமே இப்போது திரும்ப வேண்டாம்!'' என்று கத்தினான் பெருமாள்சாமி.

''எல்லோரும் சேர்ந்து போராடினால் சீக்கிரம் விபத்து மற்ற இடங்களுக்குப் பரவாமல் தடுத்து விடலாம்'' என்றான் முருகையன்.

''வாருங்கள்! வாருங்கள்! சீக்கிரம் வாருங்கள்!'' என்று கூவிக் கொண்டே பெருமாள்சாமியும் முருகையனும் முன்னால் ஓடினார்கள். அவர்களுடைய போராட்ட உணர்ச்சியைக் கண்டுவிட்ட தலைவரும், ''அப்படியானால் திரும்புகிறவர்கள் திரும்புங்கள்! மற்றவர்கள் வாருங்கள்!'' என்று கூறிவிட்டு முருகையனுடன் ஓடினார்.

தொழிலாளர்களில் ஒருவர் கூடப் பெட்டிக்குள் நுழையவில்லை. ஒரே உற்சாகம் அவர்களுக்கு! ஒவ்வொருவர் உள்ளத்திலும் உறங்கிக் கிடந்த ஆண்மை உணர்ச்சி கொந்தளித்துக் கொப்புளித்துக் கிளம்பியது.

போர்க்களத்தின் முன்னணி வீரர்களாக மாறினார்கள் அவ்வளவு பேர்களும். சுரங்கத்தின் ஒரு மூலையில் தொடங்கியிருந்த தீயை அணைப்பதற்காக ஒரு பெரும் படையே தொடிப் பொழுதில் ஒன்றாய்த் திரண்டு விட்டது.

சுரங்கத்தின் ஒரு மூலையில் குவிக்கப்பட்டிருந்த ஆற்று மணல் கூடைகளில் கை மாறிச் சங்கிலித் தொடர் போல் சென்றது. மலைப் பாம்பு போன்ற தண்ணீர்க் குழாயை நூற்றுக்கணக்கானவர்கள் சுமந்து நின்றார்கள்.

நெருப்பும் புகை மூட்டமும் மூச்சு விட முடியாதபடி ஒவ்வொருவரையும் திணறச் செய்தன. அதே சமயம் அவற்றின் மீது கூடை கூடையாக மணல் வாரிப் பொழிந்தார்கள் தொழிலாளர்கள். ரப்பர்க் குழாயின் தண்ணீர் அங்கு அருவியெனப் பொங்கிப் பாய்ந்தது.

கட்டுக்கடங்காத இயற்கையின் சீற்றத்துடன் கட்டுப்படுத்தப்பட்ட மனித சக்தி உற்சாகத்துடன் போராடியது. பெருமாள்சாமி பேய் பிடித்த மனிதனைப் போல் முன் வரிசையில் நின்று கொண்டு தன்னை மறந்த வெறியில், மணல் கூடைகளைக் கொட்டிக் கொண்டிருந்தான். முருகையனோ தொழிலாளர்களின் உற்சாகத்தைத் தூண்டிவிட்டு அவர்களுடன் தானும் கைகொடுத்து, அவர்கள் உழைப்புச் சக்தியைச் சிதைந்து விடாமல் ஒன்று திரளும்படி பார்த்துக் கொண்டான்.

அங்கே அச்சமில்லை, சோர்வில்லை, சந்தேகமில்லை, வேற்றுமையில்லை! – 'வாழ்ந்தால் அவ்வளவு பேரும் வாழ்வோம்; வீழ்ந்தால் அவ்வளவு பேரும் வீழ்வோம்!' என்ற ஓர் எண்ணம் எப்படியோ அங்கிருந்த அனைவரிடம் ஒன்று போல் குடி கொண்டு விட்டது. எல்லோரும் உழைக்கப் பிறந்த மனிதர்கள் என்பதைத் தவிர வேறு எந்த வேற்றுமையும் அங்கு இல்லை.

தலைவர் மணற் கூடையைச் சுமந்து கொண்டு புகை மூட்டத்துக்குள் புகுந்து கொட்டினார். முருகையன் தண்ணீர்க் குழாயைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு சென்றான். பெருமாள்சாமி தன்னையே மறந்து தீக்குளிப்பவனாக மாறி விட்டான்.

ஆண்கள் சுரங்கத்தின் அடி வயிற்றுக்குள் அலை மோதிக் கொண்டிருந்தார்கள்.

பெண்கள் சுரங்க வாயிலில் நின்றபடி கதறி அழுது கொண்டிருந்தார்கள்.

ஆண்கள் தீரத்துடன் போராடிக் கொண்டிருந்தார்கள்.

பெண்கள் அவர்களுக்காகக் கடவுளை வேண்டிக் கொண்டிருந்தார்கள்.

மணலைக் குவித்து மாயப் புகைக் குமுறலை வெருண்டோடச் செய்து கொண்டிருந்தார்கள் ஆண்கள்.

மாங்கல்யத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு, அது மலைபோல் வளர வேண்டுமென்று வரம் கேட்டுத் துடித்தார்கள் பெண்கள்.

உள்ளே யிருந்தவர்களுக்கோ நேரம் காலம் எதுவுமே தோன்றவில்லை.

வெளியில் நின்றவர்களுக்கோ ஒவ்வொரு கணமும் ஒரு யுகமாகத் தோன்றிக் கொண்டிருந்தது.

ஆயிற்று!.....

சிறிது சிறிதாகத் தீ நாக்குகள் சந்தனக் குழம்பாகி நீரில் கரைந்தன. மணல் மாரியில் தீச்சுடர்கள் மல்லிகை மலர்களாய் உதிர்ந்தன. புகை மூட்-

டத்தின் நெடி பதுங்கும் இருட்டினைப் போல் மறைந்தோடத் தொடங்கியது.

விபத்து ஒரு விந்தைக் கனவாக மறைந்தது.

''என்னுடைய வீரக் குழந்தைகளா! செல்வங்களா! உங்களுக்கு எப்படி நான் நன்றி சொல்லுவேன்? எப்படி நன்றி சொல்வேன்?....'' என்று இருளுக்கிடையில் நாத் தழுதழுக்கக் கூறினார் தலைவர்.

அந்த இருளில், வெற்றி பெற்ற பெருங் கூட்டம், அந்த வெற்றியின் உற்சாகத்தில் தனது சோர்வு முழுவதையும் மறந்து வெளியேறத் துடித்தது.

முருகையன் பெருமாள்சாமியைத் தேடினான்: ''கன்னையா!...கன்னையா!''

பெருமாள்சாமியின் குரல் கிணற்றுக்குள்ளிருந்து வருவது போல எதிரொலித்தது: ''முருகையா!...இதோ, இங்கேதான் இருக்கிறேன்!''

குரல் வந்த திசையில் திரும்பி ஓடித் தன் ஆவல் தீரப் பெருமாள்சாமியைத் தழுவிக் கொண்டான் முருகையன். பெருமாள்சாமியின் உடல் மெல்ல மெல்ல முருகையனின் பிடியிலிருந்து நழுவியது. அவனால் நிற்க முடியவில்லை. சரிந்து கீழே துவண்டு விழப் பார்த்தான். முருகையன் அவனை விடவில்லை. மெதுவாகக் கீழே அமர்ந்து அவனைத் தனது மார்பில் சாய்த்துக்கொண்டான்.

''தம்பி! முருகையா!... மாடி விட்டுத் தம்பி!... என்னிடம் உனக்குக் கோபமா?..... நான் ஆத்திரத்தில் உன்னை அடித்து விட்டேன் தம்பி !... என்னை மன்னித்துக் கொள் தம்பி!''

'மாடி வீட்டுத் தம்பி' என்று அவன் அழைத்தவுடன் முருகையனால் தனது துயரத்தை அடக்கவே முடியவில்லை. சிறு குழந்தை போல் தேம்பித் தேம்பி அழுதான். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு பெருமாள்பாளையம் கிராமத்தில் துடிப்புமிக்க இளைஞனாக மாட்டு வண்டியை விரட்டிக் கொண்டு வரும் அவனுடைய தோற்றம் இப்போது மனக் கண்களில் தோன்றியது.

''தம்பி! அந்த ராணுவம் இந்தச் சமஸ்தானத்தை நம் நாட்டோடு இணைப்பதற்கு வந்த ராணுவம்தானா? உனக்கு நிச்சயம் தெரியுமா?''

''இன்றைக்குப் பொழுதுக்குள் நீயே உன் கண்ணால் அதைப் பார்க்கப் போகிறாய், பெருமாள்சாமி!''

வருத்தத்துடன் சிரித்தான் பெருமாள்சாமி. மெல்ல முருகையனின் கரங்களைப் பற்றித் தன் கண்களிலும் உதட்டிலும் வைத்துக் கொண்டான். அவற்

தில் 'பில்'லென்று கண்ணீர் படிந்தது. முருகையனைக் குலுங்கிக் குலுங்கி விம்மச் செய்தது.

''இன்றைக்குப் பொழுது வரை.... நான் இருப்பேன் என்று....தம்பி!''

''அண்ணா!'' என்று அவனை அறியாமல் வாய் விட்டுக் கதறி விட்டான் முருகையன். ''இப்படிச் சொல்லாதே, அண்ணா!''

''என்ன சொன்னாய்? அண்ணாவா? சொல்! நூறு தரம் சொல்!... உடன் பிறப்பு இல்லாத வேதனையை அடியோடு தீர்த்து விட்டாய்! சொல், தம்பி !''

முருகையன் பைத்தியம் பிடித்தவன் போல் அவன் காதுகளில் திரும்பத் திரும்பப் பல முறை கூறினான்.

''நாம் இருவரும் ஒரே தாயின் வயிற்றில் ஒன்றாய்ப் பிறந்த உணர்ச்சி தான் இப்போது ஏற்படுகிறது. நான் சிறிது அவசரப்பட்டுக் கொண்டு உன்னை விட முன்னால் பிறந்து விட்டேன்.... தாயாருக்காக... தாய் நாட்டுக்காக.. நான் அப்போதே சாகத் துடித்தேன். நீ வாழத் துடித்தாய். என் ஆசையும் நிறைவேறி விட்டது. உன் ஆசையும் கட்டாயம் நிறைவேறும். சாவதைவிட வாழ்வது சிரமந்தான். நீ உனக்காகவும் மற்றவர்களுக்காகவும் நெடு நாட்கள் வாழ்ந்திரு தம்பி.....!''

அன்பு வெள்ளத்தில் கட்டுண்டிருந்த முருகையன்,சுய நினைவு பெற்று, ''மெதுவாக நான் உங்களைத் தூக்கிக் கொள்கிறேன். நாம் வெளியே போய் விடலாம்'' என்றான்.

''சரி! உன் இஷ்டம்! கொண்டு போய்ச் சாந்தாவின் தங்கை கல்யாணியிடம் என்னை.... அல்லது.... என் உடலை ஒப்படைத்து விடு!''

''என்ன?''

'' கல்யாணியைத் தெரியாதா, உனக்கு? பாவம், என்னைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்பட்டாள் அந்தப் பைத்தியக்காரி!''

தோளில் பெருமாள்சாமியைத் தூக்கிப் போட்டுக் கொண்டு, இருளினூடே ஒளியைத் தேடியவாறு மேலே விரைந்தான் முருகையன்.

### அத்தியாயம் இருபது

## அன்பு வெள்ளம் பொங்கியது

எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏங்கித் தவித்தன இரு நெஞ்சங்கள். பார்த்துப் பார்த்துப் பூத்துப் போன கயல் விழிகள் நான்கு கண்ணீர்க் கடலுக்குள் துடியாய்த் துடித்தன. சாந்தாவும் கல்யாணியும் சுரங்கவாயிலேயே உற்றுப் பார்த்த வண்ணம் இரண்டு பொற்சிலைகளாக மாறிப் போய் நின்று கொண்டிருந்தனர்.

ஒவ்வொரு முறை இயந்திரவாளி வெளியில் வந்த போதும் அவர்களுடைய இதயம் பொங்கிக் கண்களினூடே வழிந்து பெருகியது. மற்றவர்கள் கூட்டம் கூட்டமாக வெளியில் வந்தார்களே தவிர, அவர்கள் இருவரும் எந்த இருவருக்காகக் காத்துக் கொண்டிருந்தார்களோ, அவர்கள் மட்டிலும் இன்னும் வரவில்லை.

சுற்றிலும் ஒரே ஆனந்த ஆரவாரம். கணவனைக் கண்டு விட்ட மனைவி, பிள்ளையை மறு முறையும் பெற்றெடுத்த தாய், தந்தையைக் கண்ட குழந்தைகள், உடன் பிறப்பைக் கண்டு கொண்ட உடன் பிறப்புக்கள்,—இப்படித் திரும்பிய பக்கமெல்லாம் ஒரே குதூகலம்.

கடைசி கடைசியாக மேலே வந்த இயந்திரத்தை நோக்கிச் சிட்டெனப் பறந்து சென்றார்கள் சகோதரிகள் இருவரும். தோளில் பெருமாள்சாமியைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு வந்த முருகையனைக் கண்டவுடன் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள் சாந்தா. கல்யாணிக்கோ பெருமாள்சாமியின் உருவம் மட்டிலும்தான் கண்களுக்குப் பட்டது. முருகையன் மெதுவாகப் பெருமாள்சாமியைத் தரையில் கிடத்தினான். ஓடி வந்த கல்யாணி அவனுடைய தலையை மெல்லத் தூக்கித் தன் மடியின் மேல் வைத்துக் கொண்டாள்.

சாந்தாவின் கண்கள் கண்ணீரின் வழியாக முருகையனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. அவளுடைய கண்ணீர்த் துளிகளில் இன்பமும் துன்பமும் ஒன்று கலந்திருப்பதை முருகையனால் காணாமல் இருக்க முடியவில்லை.

சாந்தாவும் முருகையனும் பெருமாள்சாமிக்கு இருபுறங்களிலும் அமர்ந்தார்கள். பெருமாள்சாமிக்கோ கல்யாணியின் முகத்திலிருந்து தன் விழிகளை அகற்றவே மனமில்லை. கூட்டம் சிறிது சிறிதாக அவர்களைச் சுற்றி அமைதியோடு கூடத் தொடங்கியது. பெரியதொரு சுரங்கத்தையும் அதில் உழைத்த பலரையும் ஒன்றாகக் காப்பாற்றத் துணிந்து, அதில் வெற்றி பெற்றவனல்லவா? அப்போது வானத்தில் இடீரென்று

சில விமானங்கள் ஒன்றாகப் பறந்தன. அந்த விமானங்களிலிருந்து மலர் இதழ்களைப் போலச் சில காகிதங்கள் பொல பொல வென்று உதிர்ந்தன. காற்றில் மெல்ல அசைந்தாடிக் கொண்டு வந்து பெருமாள்சாமியின் முகத்தில் படிந்தது ஓர் அச்சுத் தாள்.

முருகையன் அதைப் பெருமாள் சாமிக்காகப் படித்துக் காட்டினான்:

''உங்களுடைய வாழ்க்கையை உங்களுக்குத் தேடித் தரும் அன்புப் பணியாட்களாகத்தான் நமது ராணுவத்தார் உங்களிடையில் வருகிறார்கள். முடியாட்சி என்ற ஒன்று தனியே இல்லாமல் நாம் குடியாட்சியில் ஒன்றாக இணைந்து வாழ்வோம். சத்தியம் வெற்றி பெற உங்கள் ஒத்துழைப்பு வேண்டும்.''

பெருமாள்சாமியின் முகம் சிறிது சிறிதாக மலர்ந்தது. வெகு தூரத்தில் புள்ளிகளைப் போல் மறைந்து கொண்டிருந்த விமானங்களைப் பார்த்து விட்டு, மீண்டும் கல்யாணியிடம் திரும்பினான்.

''கல்யாணி! மலைச் சாரல் காட்டில் எனக்காக நீ அன்று பாடினாயே, அந்தப் பாரதி பாட்டைப் பாடு! நான் அதைக் கேட்டுக்கொண்டே இருக்கிறேன். வெட்கப்படாமல் பாடு, கல்யாணி!''

கண்ணீருடன் கணீரென்று விண்ணை நோக்கிச் சுழன்றது கல்யாணியின் குரல்:

''நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர்மணிப் பூண்
பஞ்சுக்கு நேர்பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர்ப் பெருந் தீ
வஞ்சனை யின்றிப் பகையின்றிச் சூதின்றி
வையக மாந்தரெல்லாம்,
தஞ்சமென் றேயுரைப்பீர் அவள்பேர் சக்தி
ஓம் சக்தி, ஓம் சக்தி, ஓம்!''

பெருமாள்சாமி அந்த இசையிலும் அதன் பொருளிலும் மயங்கியவன்போல் புன்னகை தெளித்த இதழ்களோடு கல்யாணியை நோக்கினான்.

வஞ்சனையின்றி . . . பகையின்றி . . . சூதின்றி . . . வையக மாந்தரெல்லாம் வாழ்ந்தால்?''

கூட்டத்தினரைப் பார்ப்பதற்காக ஒரு முறை விழிகளைத் திருப்பச் சுழற்றினான் அவன். பிறகு, முருகையன், சாந்தா, கல்யாணி....

ஒவ்வொரு மனித உருவமும் ஒரு சக்தி ஒளிச்சுடராக அவனுடைய கண்களுக்குத் தோன்றியது. நூற்றுக்கணக்கான ஒளிச் சுடர்கள் நிறைந்த புதிய தோர் உலகத்தை அவன் அங்கேயே கண்டு விட்டானா?

மெல்லத் தன் கரங்களை இணைத்துக் கூப்பினான் முருகையன்.

கல்யாணி, சாந்தா, முருகையன் சூழ்ந்திருந்த கூட்டத்தார் அனைவரும் மந்திரத்தால் கட்டுண்டவர்கள் போல் தங்கள் தங்கள் கரங்களைக் கூப்பினார்கள். கண் மூடித் திறந்தார்கள். ஆனால் பெருமாள்சாமியின் கரங்களும் கண்ணிமைகளும் கூப்பியபடியே இருந்தன.

வெள்ளமெனப் பெருகிய கல்யாணியின் கண்ணீரைத் துடைப்பதற்கு ஆயிரக்கணக்கான பெண்கள் அங்கே அன்போடு காத்திருந்தார்கள்.

முருகையனின் கண்ணீரைத் துடைப்பதற்கு அங்கே அன்பின் திரு உருவமான சாந்தா இருந்தாள்.

ஃ ஃ ஃ

**கா**ல வெள்ளம் கட்டுக்கடங்காத வேகத்தோடு கரை புரண்டு ஓடிக் கொண்டுதான் இருந்தது. ஆனால் மனிதன் அதைக் கட்டுப்படுத்தி, இந்த மண்ணுலகத்திலேயே மாபெரும் வாழ்வைச் செழிக்க வைப்பதற்குத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தான். வெள்ளமும் ஓயவில்லை; மனிதனும் சளைக்கவில்லை.

துன்ப நினைவுகளைச் சிறிது சிறிதாக அந்த வெள்ளம் அடித்துச் சென்றவுடன், ஒரு நாள் மாலை மயங்கும் நேரத்தில் முருகையனைத் தனிமையில் சந்தித்தாள் சாந்தா. தேக்கு மரத் தோப்பு ஒரே மலர்க் காடாக மாறியிருந்தது.

''சுந்தரம் அன்று கூடநம் முடைய கல்யாணத்தைப் பற்றி என்னிடம் பேசினார்'' என்று வெட்கத்தோடு தொடங்கினான் முருகையன்.

சாந்தாவின் முகம் நாணத்தால் சிவந்தது. மெல்லத் தன் தலையை உயர்த்தி இறங்கும் விழிகளால் அவனைப் பார்த்து விட்டுத் தன்னை மறந்த நிலையில் அவன் மீது சாய்ந்தாள்.



# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான் சிறந்த குணமும், பல வருடங்களாக நம்பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75 வருடங்களுக்கு மேலாக சிபார்சு செய்யப்பட்ட உலகமறிந்த தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம்பெறற தயாரிப்பாளர்கள் :

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்




**ரஸிகமணி டி. கே. சி.**

கவிஞன் பெரியவனா ரஸிகன் பெரியவனா என்ற சந்தேகம் பல சந்தர்ப்பங்களில் எழுவதுண்டு. ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் உயிருடன் இருந்த வரையில் தமிழ் அன்பர்களுக்குக் கம்பர் பெரியவரா கம்பரை எடுத்துச் சொல்லும் டி. கே. சி. பெரியவரா என்ற ஐயம் எழுவதுண்டு. கம்பர் பாடலை அச்சுப் புத்தகத்தில் படிக்கும்போதும் சரி, பிறர் சொல்லிக் கேட்கும் போதும் சரி காணாத நயங்களையெல்லாம் டி. கே. சி. சொல்லும் போது தமிழ் அன்பர்கள் கண்டார்கள். நெஞ்சில் ஒரு புது கிளுகிளுப்பைப் பெற்றார்கள். இவ்வுலகை விட்டு வேறு உலகுக்கு — அதுதான் கவிதா உலகமோ—வந்து விட்டதாக உணர்ந்தார்கள். இவ்வளவுக்கும் ரஸிகமணி பிரமிப்பூட்டும் விளக்க உரைகள் கூறிவிடவில்லை. பதத்தைப் பிரித்துப் பிரித்துக்கொண்டு பொருள் கூறவில்லை. கம்பர் பாடலை அப்படியே மெள்ளப் பாடித்தான் காட்டினார். ஆனால் கேட்டவர்கள் இனம் தெரியாத இன்ப உணர்ச்சியைப் பெற்றுத் துள்ளினார்கள். இந்த அநுபவம் பெற்றவர்கள் எல்லாம் கவிஞரை விட ரஸிகமணி டி.கே.சி. உயர்ந்தவர், பெரியவர், கவிஞர் என்று சொல்லுவார்கள். டி.கே.சி. ''நான் ஒன்றும் செய்யவில்லை. கம்பர் அப்படிப் பேசுகிறார். கம்பருக்கு முன்னால் உலகில் எந்தக் கவியுமே நிற்க முடியாது'' என்பார். இது உபசார வார்த்தையல்ல; உண்மையாகவே அப்படி நம்பி வாழ்ந்த பெரியவர் அவர்.

ஆனால் ரஸிகமணி கவிதையை மட்டுமா ரஸித்தார்? அவருக்குப் பல விஷயங்களில் பல துணிகரமான கருத்துக்கள்; புரட்சிக் கருத்துக்கள். கருத்துக்களைப் பேச்சளவில் பரிமாறுவதோடு நின்று விடாமல் வாழ்ந்தும் காட்டியவர். டி. கே. சி.க்கு 'அலோபதி' வைத்திய முறை; ஆயுர்வேத வைத்திய முறை, சித்த வைத்திய முறை எதிலும் நம்பிக்கை கிடையாது. தண்ணீர் வைத்தியத்தில்தான் நம்பிக்கை. அதை எப்படிக் கடைப்பிடித்தார் என்பது மிக ரஸமான விஷயம்.

இன்று கல்லூரி போதனா மொழி பெரிய பிரச்னையாக இருக்கிறது. விஞ்ஞானச் சொற்கள் தமிழில் மொழிபெயர்த்தல் அவசியமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. இவ் விஷயத்தில் ரஸிகமணி முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன்பே எவ்வளவு தெளிவாகத் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார் என்பதைக் காண வியப்பூட்டுகிறது. ''அறிவியற் கலைகளை அதாவது ஸயன்ஸைத் தமிழர்களாகிய நாம் அறிய வேண்டும் என்பதுதான் முக்கியமே ஒழிய தமிழ்ச் சங்கேதச் சொற்கள் மூலம் தான் சொல்லித் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. இதற்காகத் தமிழ்ச் சங்கேதச் சொற்கள் உற்பத்தி செய்து வீண் காலம் போக்குவது அவசியமில்லை; விஷயத்தை நேர்முகமாய் விளக்க ஆங்கிலச் சொற்களையே உபயோகித்தால் குற்றமில்லை. விளக்கம் மட்டும் தான் தமிழில் இருக்க வேண்டும்'' என்றெல்லாம் எண்ணினார் டி. கே. சி. இது சம்பந்தமாக அவர் அந்நாட்களில் ஒரு சர்வகலாசாலை கமிஷன் முன்பு அளித்த சாட்சியப் பகுதி ரஸமான பகுதி.

டி. கே. சி. கம்பரை எப்படி ரசித்தாரோ அப்படி டி. கே. சி.யை — அவர் வாழ்க்கை முறையை, அவருடைய நண்பர்களை, அவருடைய பாடல் சொல்லும் முறையை ரஸித்தவர் திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள். அந்த அநுபவத்தை அப்படியே அருமையாக வடித்துக் கொடுத்திருக்கிறார் இந்நூலில்.



**ஹோட்டலில் தூங்குபவர்:** என் அறையில் இவ்வளவு எலிகள் இருப்பது எனக்குப் பிடிக்கவில்லை!

**ஹோட்டல் முதலாளி:** சரி. அப்படின்னு உங்களுக்குப் பிடித்ததை வைத்துக் கொண்டு பிடிக்காததை அனுப்பி விடுங்கள்!

---

ஆனால் இப்புத்தகத்தை ரஸிகமணியின் வாழ்க்கைக் குறிப்புக்களையும் வரலாற்றையும் அறியும் நோக்குடன் யாராகிலும் படிக்கத் தொடங்கினால் ஏமாற்றமே அடைவார்கள் என்பதை இங்கு சொல்லிவைக்கிறோம்.

பிரசுரம்: எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி ஜங்ஷன். விலை ரூ. 2.50.

## காதல் ஓவியங்கள்

உலகம் தோன்றியது முதல் மனித இனத்துக்கு வற்றாத சுவையூட்டி வரும் ஓர் அரும் பொருள் காதல். ஆகவேதான், மகா கவி பாரதியார், 'காதல் போயின் சாதல்,சாதல்' என்றார். இணையற்ற பொருளான காதலை அனுபவித்து மூழ்காத மனித உள்ளமே இல்லை. காதலைப் பற்றிப் பாடாத கவிஞனே இல்லை. காதலின் பண்பையும், தெய்வநலத்தையும் அறிந்து நுகர்ந்து அநுபவிப்பது யாருக்கும் கிட்டாத பாக்கியமாகும்.

காதலைப் பற்றிப் பாடியிருக்கும் கவிஞர்களுள் சங்க காலப் புலவர்களை முதன்மையாகக் கூற வேண்டும். அவர்களுடைய அரும் பெரும் இலக்கியப் படைப்பை அகநானூறு போன்ற பழம் பெரும் நூல்களில் பார்க்கக் காணலாம்.

இலக்கியங்களைப் படைப்பது மிகவும் அருமையான செயலாகும்; அதைவிட அருமையான செயல் அவற்றின் சுவையை எடுத்து விளக்குவது. இந்நூலாசிரியர் அவ்வரிய செயலை மேற்கொண்டு மிகவும் அழகாகச் செய்து முடித்திருக்கிறார். நூலின் உள்ளுறைப் பொருள்களுக்குக் கொடுத்திருக்கும் தலைப்புக்களே வாசகர்களை ஈர்க்கும் தகையவாயுள்ளன. அகத்துறை இலக்கணங்களை அழகாக வெளியிடும் பாடல்களைத் தொகுத்து அவற்றுக்குச் சுவையான விளக்கமும் தந்து ஆசிரியர் தமிழன்னைக்கு நற்றொண்டு புரிந்திருக்கிறார்.

இயற்றியவர்: வித்துவான் ந. சுப்புரெட்டியார்; பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை–5; விலை: ரூபாய் 2. 50.

## அப்பர் விருந்து

அப்பர் பெருமானின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டும், அவர் அருளிய தேவாரப் பாடல்களின் கருத்தை அடிப்படையாகக் கொண்டும் பேராசிரியர் வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் புனைந்த இருபத்தெட்டுக் கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். சில பாடல்களுக்கு இன்றைய வாழ்க்கை முறையை அடிப்படையாகக் கொண்டு விளக்கம் தந்திருக்கிறார். அகத்துறைப் பாடல்களாக, அதாவது ஆண்டவனிடம் நாயக – நாயகி பாவம் கொண்டு அப்பர் அருளிய பாடல்கள் சிலவற்றுக்கு மிகச் சுவைபட ஆசிரியர் விளக்கம் தந்திருக்கிறார். சில சமயம் பாடலுக்காக விளக்கமா, விளக்கத்துக்காகப் பாடலா என்ற சந்தேகம் எழும் அளவுக்குப் போய்விடுகிறது. எனினும் அப்பர் பெருமானின் அருமையான பக்தி நனி சொட்டும் சில பாடல்களுக்காவது நல்ல விளக்கம் பெற விரும்புகிறவர்கள் இந்த அப்பர் விருந்தை நாடியே தீரவேண்டும்.

பிரசுரம்: தமிழ் நிலையம், புதுக்கோட்டை. விலை: ரூ. 5.00.

## பழமொழி நானூறு

எத்தனையோ ஆண்டுகளாக நம் தமிழர் வாழ்வில் பழகி வரும் பழமொழிகள் நீதியையும், நெறியையும் வகுத்துக் காட்டி மக்கள் நேர்மையான பாதையில் செல்ல வழிகாட்டும் கலங்கரை விளக்கங்களாக இருந்து வந்திருக்கின்றன. இப்படிப் பழமொழிகளில் உறைந்திருக்கும் நூல்களுக்கு ஆதாரமாக உள்ளவை திருக்குறள், நாலடியார் போன்ற பழம் பெரும் நூல்களாகும். கர்ண பரம்பரையாக நம் நாட்டில் வழங்கி வரும் பழமொழி பாமர மக்களையும் நல்வழிப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவை. சாதாரணமாக எல்லாருடைய நாவிலும் பயின்று வரும் பழமொழிகள் பல்லோரும் வியக்கும் பரந்த பொருள்களை உள்ளடக்கிக் கொண்டு அநாதி காலந் தொட்டு அறிவுக் களஞ்சியங்களாக விளங்கி வருகின்றன. இப்பழம்பெரும் நூலில் நானூறு பழமொழிகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. முன்றுரையரையர் என்னும் இந்நூலாசிரியர் வியக்கத்தகு புலமை படைத்த வித்தகர் என்பது அவர் பழமொழிகளை விளக்கும் தனித் தன்மையிலிருந்து அறிய முடிகிறது.

ஒவ்வொரு பழமொழிக்கும் ஒரு வெண்பா இயற்றி யிருக்கிறார். பழமொழியின் உட்பொருளைப் பாடல்கள் மிகவும் அழகாக விளக்குகின்றன.

இவ்வரிய நூலுக்கு வித்துவான் ம. பொன். இராமநாதஞ் செட்டியார் அவர்கள் தெளிவுரை எழுதியிருக்கிறார். மிகவும் பாராட்டத்தக்க முறையில் தெளிவாக அமைந்திருக்கிறது உரை. கருத்துக் கருவூலமென்று காலமெல்லாம் புகழ் பெற்று நிற்கும் இவ்வின்றியமையாத நூலுக்குத் தெளிவுரை எழுத முற்பட்ட உரையாசிரியருக்குத் தமிழகம் கடமைப் பட்டிருக்கிறது.

பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை–5; விலை ரூ. 3. 50.

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor, T. Sadasivam.

# தரத்தில் உயர்ந்தது

Brooke Bond
Café
BRAND
French coffee
NETT WEIGHT WHEN PACKED 100 gm.
BROOKE BOND INDIA PRIVATE LIMITED
COIMBATORE
CODE NO. C.L.

ரசிக்கச் சிறந்த
ுகையில் கலவை
சய்த ப்ரூக் பாண்ட்
பே பிராண்டு பிரெஞ்சு
ாபி இப்பொழுது எங்கும்
ிடைக்கும். நறுமணத்
ுதயும் சுவையையும்
ாக்க இவை ஸெலபோன்
ுபகளில் விற்பனை
சய்யப்படுகின்றன.
ிரெஞ்சு காபியில் நல்ல
ணம், சுவை இவற்றைப்
ுபற ப்ரூக் பாண்ட் காபி
ுயயே விரும்பிக் கேளுங்கள்.
ுதுவே நீங்கள் கொடுக்கும்
ணத்திற்குச் சிறந்தது.

## ப்ரூக் பாண்ட்

# கபே பிராண்டு

## பிரெஞ்சு காபி



JWTBB 403

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

அரம்பையர் குலத்தின் பரம்பரைச் செல்வம்

# பியர்ஸ்

## தூய்மையிலும் மென்மையிலும் தன்னிகரற்றது

வைகறைதோறும் வனப்புக்கு வந்தனை செய்து வரவேற்பது பியர்ஸ் ... தூய்மையும் மென்மையும் வாய்ந்த அழகுசாதனம் ... அரம்பையர் குலதனம்!

குழந்தையின் பச்சிள மேனிக்கும் உகந்த மென்மை வாய்ந்த, படிகத்தெளிவுள்ள கிளிஸரின் சோப்பாகிய பியர்ஸ் சோப் உபயோகித்து நீராடும் இன்பம்; நீராடிய பின், மணங்கமழும் மெல்லிளம் பியர்ஸ் டால்கம் தூவிக் கொண்டால் ... ஆஹாஹா, அதிகாலைப் புதுமலர்ச்சி நாள்முழுதும் நிலைபெறும்!




லண்டனிலுள்ள ஏ. & எஃப். பியர்ஸ் லிட். சார்பாக, இந்துஸ்தான் லீவர் லி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டவை.

PTP. 6-X52 TM